# இந்திய கம்யூனிஸ்ட் இயக்க நூற்றாண்டு - 1

# இந்திய கம்யூனிஸ்ட் இயக்க நூற்றாண்டு - 1

இந்திய கம்யூனிஸ்ட் இயக்க நூற்றாண்டு - 1

தீக்கதிர்

மின்னூல் வெளியீடு : FreeTamilEbooks.com



அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

# செந்தமிழ் மண்ணில் செங்கொடி இயக்கம்

- கே.பாலகிருஷ்ணன்

-அக்டோபர் 17, 2019




…

இந்திய கம்யூனிஸ்ட் இயக்கம் தொடங்கப்பட்ட நூறாவது ஆண்டினை இந்தியா முழுவதும் கொண்டாடுவது என மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி முடிவு மேற்கொண்டுள்ளது. 1920 அக்டோபர் 17 அன்று தாஷ்கண்ட் நகரில்

முதல் கம்யூனிஸ்ட் கிளை அமைக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து இந்தியாவின் பல பகுதிகளில் கம்யூனிஸ்ட் கட்சி கிளைகள் உருவாக்கப்பட்டு மக்கள் போராட்டங்கள் முன்னெடுக்கப்பட்டன.

இந்தப் பின்னணியில் தமிழ்நாட்டில் முதல் கம்யூனிஸ்ட் கட்சி கிளை 1936ம் ஆண்டு சென்னையில் துவங்கப்பட்டது. இந்த கட்சி கிளையில் பி. ராமமூர்த்தி, பி. சீனிவாசராவ், ஜீவா, ஏ.எஸ்.கே. அய்யங்கார், சி.எஸ். சுப்பிரமணியம், கே. முருகேசன், நாகர்கோவில் சி.பி. இளங்கோ, டி.ஆர். சுப்பிரமணியம், திருத்துறைப்பூண்டி முருகேசன் ஆகியோர் உறுப்பினர்களாக இருந்தார்கள். கூட்டத்தினுடைய நிகழ்ச்சிகளை எழுதிய சி.எஸ். சுப்பிரமணியம் செயலாளராக இருந்தார். இவ்வாறு உருவாக்கப்பட்ட கட்சிக் கிளை உறுப்பினர்கள் கம்யூனிஸ்ட் கொள்கையின் பால் ஈர்க்கப்பட்ட ஆர்வலர்கள் மட்டுமல்ல; 25 ஆண்டுகளுக்கும் மேலாக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், அந்நிய முதலாளிகள், அவர்களுக்கு அடிவருடிகளாக இருந்த உள்ளூர் முதலாளிகள், கிராமங்களில் ஆதிக்கம் செலுத்தி வந்த கந்து வட்டிக் கொடுமைக்காரர்கள், ஜமீன்தார்கள்- என இவர்களை எதிர்த்து வீரஞ்செறிந்த போராட்டங்களை நடத்தி அதில் அடுக்கடுக்கான அடக்குமுறைகள், கைது, சித்ரவதைகளைச் சந்தித்த அர்ப்பணிப்பு மிக்கத் தோழர்களைக் கொண்ட கிளையாக அந்த கிளை அமைந்தது. அந்த வகையில் தமிழ்நாட்டில் கம்யூனிஸ்ட் கிளை உருவாக்கம் ஒரு தியாக வரலாற்றை உள்ளடக்கியதாகும்.

1917 நவம்பர் மாதம் சோவியத் நாட்டில் லெனின் தலைமையில் போல்ஷ்விக் கட்சி ஜார் மன்னனின் ஆட்சியைத் தூக்கியெறிந்து,

உழைப்பாளி மக்கள் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றிய மகத்தான யுகப்புரட்சியானது உலகத்தையே புரட்டிப் போட்டது. சோவியத் புரட்சியின் தாக்கம் உலகம் முழுவதும் எதிரொலித்தது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக பல கட்டப் போராட்டங்களை நடத்திக் கொண்டிருந்த, விடுதலைப் போராட்ட வீரர்கள் மத்தியிலும் முத்திரையைப் பதித்தது. தமிழ்நாட்டில் விடுதலைப் போரின் குரலாக விளங்கிய மகாகவி பாரதியின் சிந்தனைகளில் நவம்பர் புரட்சி பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. ஊடகங்கள், தொலைத்தொடர்புகள் எதுவும் இல்லாத அக்காலத்தில் மறுபக்கம், மார்க்சியம், லெனினியம், உழைப்பாளி வர்க்கம், புரட்சி இவைகளைப் பற்றியெல்லாம் அறிந்திராத நிலையில் கீழ்க்கண்டவாறு சங்கநாதம் எழுப்பினார் பாரதி::

> “மாகாளி பராசக்தி உருசியநாட்
> டினிற்கடைக்கண் வைத்தாள், அங்கே,
> ஆகாவென் றெழுந்ததுபார் யுகப்புரட்சி,
> கொடுங்காலன் அலறி வீழ்ந்தான்,
> இரணியன்போ லரசாண்டான் கொடுங்கோலன்
> ஜாரெனும்பே ரிசைந்த பாவி”

புரட்சிக்குப் பின்னர் சோவியத் நாட்டில் ஏற்பட்ட சமூக மாற்றங்கள் குறித்த செய்திகள் இந்தியாவில் பலருக்கும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. அதிசயமாக இருந்தது. அதே பாரதி,

“முப்பது கோடி ஜனங்களின் சங்க

முழுமைக்கும் பொது உடைமை

ஒப்பில்லாத சமுதாயம்

உலகத்துக்கு ஒரு புதுமை-வாழ்க பாரத சமுதாயம் வாழ்கவே”

என்று பாடினார்.

சென்னை தொழிலாளர் சங்கம்

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் தொழிலாளர்கள் கடுமையாக சுரண்டப்பட்டார்கள். இம் என்றால் சிறைவாசம், ஏன் என்றால் வனவாசம் என்பதே நியதியாக இருந்தது. கொடும் சுரண்டலுக்கு உட்பட்ட தொழிலாளர்களுக்கு நாட்டிலேயே முதல் தொழிற்சங்கம் சென்னை தொழிலாளர் சங்கம் (மெட்ராஸ் லேபர் யூனியன்) 1918ல் சென்னையில் துவக்கப்பட்டது. இச்சங்க நடவடிக்கைகளில் ஈடுபட்டு தொழிலாளர் உரிமைகளுக்கு போராடுகிற பணியில் செல்வபதி செட்டியார், ராமனுஜ நாயுடு, திரு.வி.க., சிங்காரவேலர், வ.உ.சி., போன்றவர்கள் குரல் கொடுத்து வந்தனர். 1920ம் ஆண்டு பி அண்ட் சி மில்லில் வெடித்த போராட்டத்தில் இரண்டு தொழிலாளர்கள் துப்பாக்கிச் சூட்டிற்கு பலியாகினர். 1921ம் ஆண்டு ஜூன் மாதம் இதே தொழிலாளர்கள் போராட்டத்தின் மீது கண்மூடித்தனமான அடக்குமுறை ஏவிவிடப்பட்டது. துப்பாக்கிச் சூட்டில் 7 தொழிலாளர்கள் கொல்லப்பட்டனர். இவர்களது உடல்களை சிங்காரவேலர் தனது தோளில் சுமந்து சென்று அடக்கம் செய்தார்.

தொழிலாளர்கள் குடியிருப்புகளுக்குச் சென்று- போராடும் தொழிலாளர்களின் குடும்பங்களைச் சந்தித்து மேலும் உத்வேகமூட்டினார்.

சிங்கார வேலர்

தோழர் ம.சிங்காரவேலர் சென்னையில் ஒரு மீனவக் குடும்பத்தில் பிறந்து வழக்கறிஞராக தொழில் புரிந்து வந்தார். லண்டன் மாநகருக்குச் சென்று அங்கு கம்யூனிச கொள்கைகளில் தொடர்புள்ளவர்களைச் சந்தித்து மார்க்சிய கொள்கைகளை புரிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. மனிதாபிமான அடிப்படையில் தொழிலாளர்களுக்கு உரிமைகள் வேண்டும் எனக் கூறி வந்த சிங்காரவேலர், முதலாளிகளின் சுரண்டல், தொழிலாளிகளின் கொடுபடாத சம்பளமே முதலாளிகளின் உபரி லாபம் என்பதையெல்லாம் புரிந்து கொண்டு தமிழகத்திற்கு வந்து மார்க்சிய கோட்பாடுகள் அடிப்படையில் தொழிலாளர்களைத் திரட்டும் பணியில் ஈடுபட்டார். தமிழக வரலாற்றில் கம்யூனிச லட்சியத்தை பரப்புவதில் சிங்கார வேலரின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாகும்.

கயா காங்கிரஸ் மாநாட்டில்…

1922ம் ஆண்டு பீகார் மாநிலம், கயா நகரில் நடைபெற்ற காங்கிரஸ் கட்சியின் மாநாட்டில் பேசிய சிங்காரவேலர், தன்னை ஒரு கம்யூனிஸ்ட் பிரதிநிதி என பகிரங்கமாக பிரகடனப்படுத்திக் கொண்டு உரையாற்றினார். கம்யூனிச லட்சியங்களை நிறைவேற்றுவதற்கு தனிக் கட்சியும், தனி பத்திரிகையும் வேண்டுமென விரும்பிய சிங்கார வேலர் இந்துஸ்தான் தொழிலாளர் மற்றும் விவசாயிகள் கட்சி என்ற கட்சியையும் அதற்கான

ஒரு பத்திரிகையும் உருவாக்கினார். இதோடு மட்டுமின்றி உலகத் தொழிலாளர்களின் உரிமை தினமான மே தினத்தை நாட்டிலேயே முதன்முறையாக 1923ம் ஆண்டில் சிறப்பாக கொண்டாடினார். அதுவே, நாடு முழுவதும் உழைப்பாளிகள் தினமான மே தினத்தை கொண்டாடுவதற்கு அறைகூவல் விடுத்த தினமாக அமைந்தது.

காான்பூர் சதி வழக்கு

இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கம் வேர்விடுவதை முளையிலேயே கிள்ளி எறிய விரும்பிய பிரிட்டிஷ் அரசு பல சதி வழக்குகளை புனைந்தது. அதில் கான்பூர் சதி வழக்கு புனையப்பட்டு 13 பேர் குற்றவாளிகளாக சேர்க்கப்பட்டனர். அதில் சிங்கார வேலரும் ஒருவர். இந்த வழக்கு விசாரணை முடிவில் சம்பந்தப்பட்டவர்களுக்கு 4 ஆண்டு காலம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. சிங்காரவேலர் கடும் உடல்நிலை பாதிப்பால் கைது செய்யப்படாமல் ஜாமீனிலேயே இருந்தார். உடல்நிலை ஓரளவு தேறிய பின்னர், தனது உடல்நிலை தேறிவிட்டது; தன்மீதான வழக்கு விசாரணையை தொடரலாம் என கவர்னர் ஜெனரலுக்கு கடிதம் எழுதிய உடன் கான்பூர் நீதிமன்றத்தை நோக்கி பயணமானார். ஆனால் பிரிட்டிஷ் அரசு ஏற்கனவே சம்பந்தப்பட்டவர்களுக்கு தண்டனை வழங்கப்பட்டு விட்டதால், விசாரணை தொடர வேண்டாமென முடிவு செய்து இவர் மீதான வழக்கை தள்ளுபடி செய்ததால் வழியிலேயே சென்னைக்கு திரும்பினார்.

1925ம் ஆண்டு டிசம்பர் 26ந் தேதி கான்பூரில் கம்யூனிஸ்ட்களின் மாநாடு நடைபெற்றது. இம்மாநாட்டிற்கு சிங்காரவேலர் தலைமை ஏற்று உரையாற்றினார். அதில் சோவியத் நாட்டின் புரட்சியைப் பற்றியும், லெனின் பங்களிப்பை பற்றியும், ரஷ்யாவில் சோசலிச ஆட்சியை வலுப்படுத்த அவருடைய முயற்சி எதிர்காலத்தில் மானுட சமுதாயத்திற்கு அளப்பரிய பங்கினை ஆற்றும் எனவும் குறிப்பிட்டார்.

ரயில்வே தொழிலாளர்கள் எழுச்சி

முதலாம் உலக யுத்தம் முடிவுற்ற நிலையில் பிரிட்டிஷ் அரசாங்கம் தொழிலாளர்களது உரிமைகளை பறிப்பது, கடும் அடக்குமுறைகளை ஏவுவது என நடவடிக்கைகளை மேற்கொண்டது. இதனை எதிர்த்து 1918ம் ஆண்டு ரயில்வே தொழிலாளர்களுடைய மகத்தான போராட்டம் நாடு முழுவதும் கட்டவிழ்த்துவிடப்பட்டது. பொன்மலை, நாகப்பட்டினம், போத்தனூர், திருச்சி உள்பட தமிழகம் முழுவதும் வேலைநிறுத்தத்தில் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் ஈடுபட்டனர். அரசின் அச்சுறுத்தல்கள் மற்றும் கைதுகளுக்கு பணியாமல், நெஞ்சை நிமிர்த்திப் போராடினார்கள். நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டனர். சிங்காரவேலரும், ரயில்வே தொழிற்சங்க செயலாளரான முகுந்தலால் சர்க்கால், இந்த போராட்டத்தினை தலைமை தாங்கி நடத்தினார்கள். இப்போராட்டத்தையொட்டி முகுந்தலால் சர்க்கார், சிங்காரவேலர் ஆகிய 16 பேர் மீது ஆட்சியைக் கவிழ்க்க சதி செய்த குற்றச் சாட்டுக்கள் உள்ளிட்ட வழக்குகளை ஆங்கிலேய அரசு பதிவு செய்தது. இந்த சதி வழக்கில் 14 பேருக்கு 10 ஆண்டு கடுங்காவல் தண்டனையும்,

பெருமாள் என்ற தொழிலாளிக்கு ஆயுள் தண்டனையும் விதிக்கப்பட்டது. இதனை எதிர்த்து சென்னை உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யப்பட்டு 10 ஆண்டு கடுங்காவல் தண்டனையை இரண்டாண்டுகளாக குறைத்த உயர்நீதிமன்றம், பெருமாள் என்ற தொழிலாளிக்கு வழங்கப்பட்ட ஆயுள் தண்டனையை குறைக்க மறுத்துவிட்டது. இரண்டாண்டு கடுங்காவல் தண்டனையை திருச்சி சிறையில் அனுபவித்து விட்டு சிங்காரவேலர் விடுதலையாகும் போது அவருக்கு வயது 70-ஐ தாண்டிவிட்டது.

லயோலா கல்லூரியில் சுந்தரய்யா

இருப்பினும், தொடர்ந்து தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தையும், பெரியார், ஜீவா அவர்களோடு இணைந்து சமதர்ம பிரச்சாரத்தையும், பகுத்தறிவு பிரச்சாரத்தையும் தீவிரமாக மேற்கொண்டார். திருச்சி சிறையில் சிங்காரவேலர் இருக்கும் போது பம்பாயில் வசிக்கும் தமிழ்க் குடும்பத்தைச் சேர்ந்த ஹெச்.டி. ராஜா என்ற இளைஞரோடு தொடர்பு ஏற்பட்டது. இவர் பம்பாயிலிருந்து சென்னையில் இளைஞர்களை, மாணவர்களை கம்யூனிஸ்ட்டுகளாக்கும் பணிக்காக சென்னைக்கு வந்தவர். இவரது முன்முயற்சியில் லயோலா கல்லூரியில் மாணவர்களோடு தொடர்பு கொண்டு மார்க்சிய லட்சியங்களை விளக்கினார். இதன் விளைவாகவே தோழர் பி. சுந்தரய்யா, வி.கே. நரசிம்மன், சத்திய நாராயணா போன்றவர்கள் பின்னாட்களில் கம்யூனிஸ்ட்டுகளாக மாறினார்கள். கம்யூனிஸ்ட் கட்சியில் ஈர்க்கப்பட்ட பி. சுந்தரய்யா தனது படிப்பை துறந்து, 1930ம் ஆண்டு வாக்கில் தீவிரமான சுதந்திரப்போராட்டத்தில் ஈடுபட்டார்.

அதனால் கைது செய்யப்பட்டு இரண்டாண்டு சிறை தண்டனை விதிக்கப்பட்டார். அப்போது அவருக்கு 18 வயது நிரம்பாததால் தஞ்சாவூரில் உள்ள சிறுவர் சீர்திருத்தப் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். அதன் பின்னர் திருச்சி சிறைக்கும், ராஜமகேந்திரபுரம் சிறைச்சாலைக்கும் மாற்றப்பட்டார். சிறைச்சாலையில் சுந்தரய்யா இருக்கும் போது பலரை மார்க்சியத்தின் பால் ஈர்ப்பதற்கான வகுப்புகளை நடத்தினார்.

அமீர் ஹைதர் கான் சென்னை வருகை

இதேகாலத்தில் பிரிட்டிஷ் அரசு முன்னணி கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் 32 பேர் மீது மீரட் சதி வழக்கு என்ற வழக்கினை பதிவு செய்து பலரை கைது செய்தது. பஞ்சாப் மாநிலத்தைச் சேர்ந்த அமீர் ஹைதர் கான் சிறுவயதிலேயே வீட்டை விட்டு வெளியேறி கப்பல் தொழிலாளியாக பல நாடுகளுக்கு பயணம் சென்றார். அதையொட்டி அமெரிக்காவில் அவர் தங்கியிருந்த போது பஞ்சாப் புரட்சி வீரர்களை, இந்துஸ்தான் கதார் கட்சித் தோழர்களை சந்தித்துப் பேசிய போது கம்யூனிஸ்ட்டாக மாறினார். பின்னர் இந்தியா திரும்பிய பிறகு கம்யூனிஸ்ட் கட்சியை கட்டுகிற பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். மீரட் சதி வழக்கில் அமீர் ஹைதர் கானை பிரிட்டிஷ் அரசாங்கம் கைது செய்ய முயன்ற போது தலைமறைவாகி சென்னைக்கு வந்தார். சென்னையில் அவருக்கு அறிமுகமோ, ஆதரவோ இல்லாத சூழ்நிலையில் அவர் ஒவ்வொரு நாள் தங்குவதற்கும், ஒவ்வொரு நாள் உணவிற்கும் விவரிக்க முடியாத கஷ்டங்களை சந்தித்தார். இருப்பினும் அனைத்து கஷ்டங்களையும் தாங்கிக் கொண்டு இளைஞர்களை கம்யூனிஸ்ட் கட்சியின் பால் ஈர்க்கிற பணியை

மேற்கொண்டார். காங்கிரஸ் கட்சியின் தீவிர தொண்டர்களாக பணியாற்றிய பலரை சந்தித்து கம்யூனிஸ்ட் கட்சியின் பால் ஈர்ப்பதற்கு முயற்சித்தார். இவருடைய முன்முயற்சியினால் சத்தியநாராயண ராவும், நீதிக்கட்சியைச் சார்ந்த ராஜ வடிவேலுவும் முழுநேர ஊழியராக மாறினார்கள். அந்நிய துணி புறக்கணிப்பு போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்த தோழர் பி.ராமமூர்த்தியைச் சந்தித்து பேசி அவரும் கம்யூனிஸ்ட் இயக்கத்தின்பால் ஈர்க்கப்பட்டார். பெங்களூரில் தங்கியிருந்த பி. சுந்தரய்யாவைச் சந்தித்து கம்யூனிஸ்ட் கட்சியின் முழுநேர ஊழியராக மாற்றினார்.

இந்த நிலையில் அமீர் ஹைதர் கானை தீவிரமாக தேடிய காவல்துறை அவரை கைது செய்து சென்னை மத்திய சிறைச்சாலையின் தனிமைச் சிறைச்சாலையில் அடைத்தது. சிறையில் அடைக்கப்பட்டிருந்த விடுதலைப் போராட்ட வீரர்களோடோ, பிற கைதிகளோடோ சந்திக்க அனுமதிக்கப்படவில்லை. உண்ணாவிரதம் உள்ளிட்டு பல கட்டப் போராட்டங்களை நடத்திய பின்பு அந்த சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்த சுபாஷ் சந்திரபோஸ் தலையீட்டின் பேரிலேயே மற்றவர்களோடு பழகுவதற்கு அனுமதிக்கப்பட்டது. சக சிறைவாசிகளோடு காந்தியின் போராட்ட முறை உள்ளிட்ட பல விஷயங்கள் பற்றி கடுமையாக விமர்சித்தார். துடிப்புள்ள இளம் போராட்ட வீரர்கள் ஹைதர்கானின் பேச்சில் ஈர்க்கப்பட்டனர். அப்போது சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்த பி. சீனிவாசராவை சந்தித்துப் பேசி கம்யூனிச புத்தகங்களை படிக்கச் செய்து கம்யூனிஸ்ட்டாக மாற்றப்பட்டார். பிறகு 

மாத சிறைத்தண்டனைக்குப் பிறகு ஹைதர் கான் விடுதலை செய்யப்பட்டார்.

பிரிட்டிஷ் அரசு ஆத்திரம்

விடுதலைப் போராட்டத்தில் சிறை சென்ற இளைஞர்கள் பலர் ஹைதர்கானின் பேச்சில் கவரப்பட்டு கம்யூனிச சிந்தனையில் ஈர்க்கப்பட்டிருந்த நேரத்தில் பிரிட்டிஷ் அரசு கம்யூனிஸ்ட்டுகளை அழித்தொழிக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு 1933ம் ஆண்டு ராஜதுரோக வழக்கை பதிவு செய்து 20 பேரை கைது செய்தது. இவர்கள் மீது அதிகாரிகளை கொலை செய்வது, அரசாங்க கஜானாக்களை கொள்ளையடிப்பது உள்ளிட்ட மோசமான குற்றச்சாட்டுக்கள் பொய்யாக பதிவு செய்யப்பட்டன. கைது செய்யப்பட்டவர்களில் முகுந்தலால் சர்க்கார், அருணாசலம், கோபால் சாஸ்திரி, டி.ஆர். சுப்பிரமணியம் உள்ளிட்ட பலர் மீது இந்த வழக்கு தொடுக்கப்பட்டது. இந்த வழக்கில் கைது செய்யப்பட்டவர்களுக்கு தீவிர காங்கிரஸ் ஊழியராக இருந்த பி.ராமமூர்த்தி, வழக்கறிஞர் மூலம் உதவிகளை மேற்கொண்டு வந்தார். விசாரணை முடிவில் குற்றம்சாட்டப்பட்டவர்களுக்கு இரண்டாண்டுகள் முதல் ஆறு ஆண்டுகள் வரை கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. வழக்கு விசாரணைக்கு உதவி செய்த பி. ராமமூர்த்தி கம்யூனிச புத்தகங்களை படித்து படிப்படியாக மார்க்சிய சிந்தனைக்கு ஈர்க்கப்பட்டார். இந்த சூழ்நிலையில் மீண்டும் ஹைதர் கான் கைது செய்யப்பட்டு இந்தியாவின் பல சிறைகளுக்கு மாற்றப்பட்டார். இந்நிலையில் சிறையிலிருந்து வெளியே வந்த சுந்தரய்யா, சென்னையில் இளம்

தொழிலாளர்களை தொடர்பு கொண்டு கம்யூனிஸ்ட்டுகளாக மாற்றி கட்சியை உருவாக்கும் பணியை மேற்கொண்டார்.

தடை விதிப்பு

1934ம் ஆண்டு ஆங்கிலேயே அரசாங்கமானது இந்திய கம்யூனிஸ்ட் கட்சி மீது தடை விதித்தது. கம்யூனிஸ்ட்டுகள் தலைமை தாங்கிய இளைஞர் அமைப்புகள் தடை செய்யப்பட்டதுடன், பத்திரிகைகளுக்கும் வாய்ப்பூட்டு போடப்பட்டது. இந்நிலையில் “தொழிலாளர் பாதுகாப்புக் குழு” என்கிற புதிய அமைப்பினை உருவாக்கி பி.சுந்தரய்யா, கே. சத்தியநாராயணா, ஏ.எஸ்.கே. அய்யங்கார், ராஜவடிவேலு, ரஷ்ய மாணிக்கம் ஆகியோரைக் கொண்ட தொழிலாளர்கள் சங்கம் செயல்பட ஆரம்பித்தது.

காங்கிரஸ் - சோசலிஸ்ட் கட்சி

கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்ட பின்னணியில் காங்கிரஸ் கட்சிக்குள் இருந்த சோசலிச மனோபாவம் உடைய தீவிர காங்கிரஸ்காரர்களைக் கொண்ட மாநாடு ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையில் பாட்னாவில் நடைபெற்று, “காங்கிரஸ் - சோசலிஸ்ட் கட்சி” என்கிற அமைப்பு உருவாக்கப்பட்டது. இதில் பி.ராமமூர்த்தி, பி. சீனிவாசராவ் போன்ற தமிழகத்தைச் சார்ந்தவர்களும், இ.எம்.எஸ்., பி. கிருஷ்ணபிள்ளை, ஏ.கே. கோபாலன் ஆகிய கேரளத் தலைவர்களும் கலந்து கொண்டனர். இந்நிலையில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக்குழு கூட்டத்தில் சில வழிகாட்டு கோட்பாடுகள் உருவாக்கப்பட்டது. அதன்படி கட்சி உறுப்பினர்கள், கட்சியிலிருந்து

கொண்டே காங்கிரசில் சேர்ந்து, அதனுடன் தொடர்புகளை வைத்துக் கொள்ள வேண்டும். அதேபோல, காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியிலும் சேர்ந்து பணியாற்ற வேண்டும் என குறிப்பிடப்பட்டிருந்தது. இதன்படி கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்கள் ஒருபக்கம் கம்யூனிஸ்ட்டுகள் என்ற முறையில் ரகசியமாக சந்தித்து திட்டங்களை உருவாக்குவது, காங்கிரஸ் உறுப்பினர் என்ற முறையில் கூட்டங்கள், மாநாடுகள், இயக்க வேலைகளில் பங்கெடுப்பது, காங்கிரஸ் சோசலிஸ்ட் உறுப்பினர் என்கிற முறையில் அதன் மாநாடுகளில் கலந்து கொள்வதோடு வெகுஜன அமைப்புகளை உருவாக்கி தீவிரமாக பணியாற்ற வேண்டுமென மூன்றுவித கடமைகளை நிறைவேற்றினார்கள். இந்த பணியில் பி. ராமமூர்த்தி, பி. சீனிவாசராவ் உள்ளிட்ட முக்கியத் தலைவர்கள் பங்கு வகித்தனர். இவர்களோடு பம்பாய் மாகாணத்திலிருந்து அரசாங்கத்தால் வெளியேற்றப்பட்ட எஸ்.வி. காட்டேவும் இணைந்து கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்குவதிலும், தொழிற்சங்கங்களை அமைக்கும் பணியிலும் ஈடுபடுத்திக் கொண்டனர்.

பெரியார் - ஜீவா

சோவியத் நாட்டில் பயணம் செய்து திரும்பி வந்த தந்தை பெரியார், பகுத்தறிவு கொள்கைகளுடன் சமதர்ம கொள்கைகளையும் இணைத்து பிரச்சாரம் செய்யப் போவதாக அறிவித்தார். இவரோடு ஜீவாவும், சிங்காரவேலரும் இணைந்து பிரச்சாரங்களை மேற்கொண்டனர். ஆனால் 1934ம் ஆண்டு வாக்கில் சமதர்ம பிரச்சாரத்தை தந்தை பெரியார் கைவிட்ட நிலையில் கருத்து வேறுபாடு கொண்டு ஜீவா தனித்து செயல்பட்டு வந்தார்.

இவரைத் தொடர்பு கொண்டு எஸ்.வி. காட்டே, பி. ராமமூர்த்தி, பி. சீனிவாசராவ் ஆகியோர் பல நாட்கள் விவாதத்திற்குப் பிறகு ஜீவா காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியில் இணைத்தார்; கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தை ஏற்றுக் கொண்டு தமிழகத்தில் சிறந்த கம்யூனிஸ்ட் பேச்சாளராகவும், எழுத்தாளராகவும் திகழ்ந்தார்.

போர்க்களமாக மாறிய தமிழகம்

1935-36ம் ஆண்டுகளில் தமிழகம் போர்க்களமாக மாறியது என்றால் மிகையல்ல. எண்ணற்ற தொழிலாளர்கள் போராட்டங்கள், விவசாயப் போராட்டங்கள், மாணவர்கள் - இளைஞர்கள் போராட்டங்கள் வெடித்துக் கிளம்பின. இப்போராட்டங்களுக்கு தலைமை தாங்கி வழிநடத்திய பெருமை காங்கிரஸ் - சோசலிஸ்ட் கட்சியில் செயல்பட்டு வந்த கம்யூனிஸ்ட்டுகளையே சாரும். கள் இறக்கும் தொழிலாளர்கள் போராட்டம், சென்னை டிராம் தொழிலாளர்கள் போராட்டம், அச்சுத் தொழிலாளர்கள் போராட்டம், கோவை, திருச்சி, சேலம், மதுரை, தென்னாற்காடு, வடஆற்காடு மாவட்டங்களில் நடைபெற்ற தொழிலாளர்கள் போராட்டங்கள், அரசின் அடக்குமுறைகளை மீறி நடைபெற்றன.

எம்.ஆர்.வெங்கட்ராமன்

இப்போராட்டங்களுக்கு தேவையான சட்ட உதவிகள் செய்யும் பணியில் சிறந்த வழக்கறிஞரான எம்.ஆர். வெங்கட்ராமன் ஈடுபட்டார். பின்னர் அவரும் கம்யூனிஸ்ட் கொள்கைகளின் பால் ஈர்க்கப்பட்டு வழக்கறிஞர்

தொழிலை உதறிவிட்டு கட்சியின் முழுநேர ஊழியராக மாறினார். இதன் காரணமாக அவர் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். அந்த நேரத்தில் உடல்நலம் குன்றியிருந்த அவரது துணைவியாரை பார்ப்பதற்கு பரோலில் வெளியே வந்த எம்.ஆர்.வெங்கட்ராமன், துணைவியாரைப் பார்த்து ஆறுதல் கூறிவிட்டு சிறைக்கு திரும்ப இருந்த நேரத்தில் கட்சித் தலைமையிடமிருந்து அவருக்கு ஒரு தகவல் வந்தது. அவர் தலைமறைவாகச் சென்று கட்சிப் பணியாற்ற வேண்டுமென்றும், சிறைக்கு திரும்ப வேண்டாமெனவும் அந்த தகவல் தெரிவித்ததன் அடிப்படையில் அவர் தலைமறைவாகச் சென்று இயக்கப் பணிகளில் ஈடுபட்டார். அடுத்த சில நாட்களில் அவரது துணைவியார் மரணமடைந்தார். தலைமறைவான எம்.ஆர். வெங்கட்ராமனை கைது செய்ய காவல்துறை அவரது வீட்டைச் சுற்றி காத்திருந்த காரணத்தினால் மனைவியின் இறுதி நிகழ்ச்சியில் கூட எம்.ஆர். வெங்கட்ராமன் கலந்து கொள்ளவில்லை.

முத்துராமலிங்கத் தேவர்

கோவையில் லட்சுமி மில் தொழிலாளர்கள் போராட்டம், மதுரையில் மகாலெட்சுமி மில் தொழிலாளர்கள் போராட்டங்கள் வெடித்தன. மதுரையில் தொழிற்சங்கத் தலைவராக இருந்த முத்துராமலிங்கத் தேவர் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். ஜீவா, பி. ராமமூர்த்தி ஆகியோர் மதுரைக்குச் சென்று அந்தப் போராட்டங்களை தலைமை தாங்கி நடத்தினர். இதேகாலத்தில் நெல்லிக்குப்பம் பாரி மிட்டாய் தொழிற்சாலை, ராணிப்பேட்டை உள்ளிட்ட பல இடங்களில் போராட்டங்கள் நடைபெற்றன.

## கீழத் தஞ்சையில்…

மறுபக்கம் கிராமப்புறங்களில் ஜமீன்தார்கள், பண்ணையார்கள் செய்த கொடுமைகள் தாங்காமல் விவசாயப் போராட்டங்கள் வெடித்துக் கிளம்பின. கந்து வட்டி கொடுமையையும் எதிர்த்தும், குத்தகை விவசாயிகள் நிலவெளியேற்றம், பண்ணையார் அடக்குமுறை, சமூக ஒடுக்குமுறை உள்ளிட்டவற்றை எதிர்த்தும் பல போராட்டங்கள் நடைபெற்றன. கீழத்தஞ்சையில் இக்கொடுமைகளுக்கு ஆளாக்கப்பட்ட விவசாயிகளையும், விவசாயத் தொழிலாளர்களையும் திரட்டுகிற பணியில் பி. சீனிவாசராவ் ஈடுபட்டார். கண்மூடித்தனமான கொடுமைகளுக்கு உள்ளாகியிருந்த பண்ணை அடிமைகளையும், குத்தகை விவசாயிகளையும் திரட்டி வீரஞ்செறிந்த போராட்டத்தை நடத்திய பெருமை பி. சீனிவாசராவ் அவர்களையே சாரும். சாணிப்பால், சவுக்கடிக்கு உள்ளான இம்மக்களை “அடித்தால் திருப்பி அடி” என ஆவேச முழக்கமிட்டு நம்பிக்கை நட்சத்திரமாக திகழ்ந்தார். தனது இறுதி மூச்சு வரை இப்போராட்டத்தில் ஈடுபட்டார்.

## மாணவர் எழுச்சி

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து இதர மக்களைப் போலவே மாணவர்களும் களமிறங்கி போராடத் துவங்கினர். இதேகாலத்தில் அண்ணாமலைப் பல்கலைக்கழக மாணவர்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடத்திய போராட்டங்களில் பல மாணவர்கள் கைது செய்து சிறையில் அடைக்கப்பட்டனர். பாலதண்டாயுதம், கே.

முத்தையா, ஆர். உமாநாத் போன்றவர்கள் பல்கலைக்கழகத்திலிருந்து வெளியேற்றப்பட்டதுடன் அவர்கள் படிப்பைத் துறந்து கம்யூனிஸ்ட் இயக்கத்தில் முழுநேர ஊழியராக மாறினார்கள். இதனைத் தொடர்ந்து மதுரை மாவட்டத்தில் நடைபெற்ற மாணவர்கள் போராட்டங்களுக்கு மதுரை அமெரிக்கன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த என். சங்கரய்யா தலைமை தாங்கி மாணவர்களைத் திரட்டி விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுத்தினார். தோழர் என். சங்கரய்யா மற்றும் மாணவர் தலைவர்களும் படிப்படியாக கம்யூனிஸ்ட்டுகளாக மாறி, முழுநேர ஊழியர்களாகி மக்கள் பணிகளில் ஈடுபடுத்திக் கொண்டனர். இத்தகைய பிரம்மாண்டமான மக்கள் எழுச்சி போராட்டக் களத்தில் பூத்த மலராகவே 1936ம் ஆண்டு முதல் கம்யூனிஸ்ட் கட்சி கிளை உருவாக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து தமிழகத்தின் பல பகுதிகளில் கம்யூனிஸ்ட் இயக்கம் வேர்விட்டு மலர்ந்தது.

கம்யூனிஸ்ட்டுகள் ஏகாதிபத்திய நுகத்தடியிலிருந்து இந்திய நாட்டை மீட்டெடுக்கவும், அதேசமயம் உள்நாட்டு, வெளிநாட்டு முதலாளிகளின் சுரண்டல் கொடுமைகளிலிருந்து தொழிலாளர்களையும், நிலப்பிரபுத்துவ பண்ணையடிமை முறையை தகர்த்து கிராமப்புற விவசாயிகளையும், விவசாயத் தொழிலாளிகளையும் விடுவிக்கும் மகத்தான போராட்டங்களை தலைமை தாங்கி நடத்தினார்கள். அரசின் அடக்குமுறைகள், தடைகள், சிறைச்சாலைகள், தண்டனைகள், காவல்துறை நேரடித் தாக்குதல்கள் அனைத்தையும் நெஞ்சுறுதியுடன் எதிர்த்துப் போராடிய வீரப்பாரம்பரியம் மிக்கதே கம்யூனிஸ்ட் கட்சியாகும்.

தொடக்கம் முதல் இன்று வரை இந்த மகத்தான தியாக பாரம்பரியத்தில் பயணித்து வரும் கம்யூனிஸ்ட் கட்சியின் வீர வரலாற்றை இன்றைய தலைமுறைக்கு எடுத்துச் செல்ல வேண்டிய பொறுப்பினை இந்த நூற்றாண்டு முழுவதும் நிறைவேற்ற பாடுபடுவோம்.

# தாஷ்கண்ட்டில் முதல் குழு உருவாகிறது

- என்.ராமகிருஷ்ணன்

-அக்டோபர் 19, 2019




…

இவ்வாண்டு அக்டோபர் 17ஆம் தேதியன்று இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்கம் தனது நூறாவது ஆண்டில் நுழைந்துள்ளது என்பதை காணும் போது ஒவ்வொரு கம்யூனிஸ்டும் மட்டற்ற மகிழ்ச்சி அடைவர். சரியாகச்

சொன்னால் 1920ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ஆம் தேதியன்று அன்றைய புரட்சிகர ரஷ்ய நாட்டின் ஒரு பகுதியாக விளங்கிய தாஷ்கண்ட் நகரில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் கிளை உருவாக்கப்பட்டது என்பது பெருமைக்குரியச் செய்தியாகும்.

ஒரு கேள்வி எழுகிறது. காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை பரந்துபட்ட இந்திய நாட்டில் முதல் கம்யூனிஸ்ட் கிளை உருவாகா மல் தாஷ்கண்ட் நகரில் உருவானது ஏன்? என்ற கேள்வி எழுவது இயற்கையே. அதற்கு விடை காண வேண்டுமென்றால், சென்ற நூற்றாண்டின் துவக்கத்திலிருந்து இந்திய அரசியல் வரலாற்றை காண்பது அவசியம். சென்ற நூற்றாண்டின் துவக்கத்தில் இந்தியாவின் வங்காள மாகாணத்தில் தேசிய இயக்கம் வீறுகொண்டு எழுந்தது. ஆங்கிலேய ஆட்சி ஒழிய வேண்டும், நாடு விடுதலை யடைய வேண்டும் என்ற முழக்கம் அந்த வங்காள மாகாணம் முழுவதும் எதிரொலி த்தது. எட்டு கோடி மக்களைக் கொண்ட அந்த மாகாணத்தில் மூன்றேமுக்கால் கோடிப் பேர் முஸ்லிம்கள். நாலேகால் கோடி பேர் இந்து க்கள். இந்த இரண்டு பகுதியினரும் தேசிய இயக்கத்தில் மிகுந்த ஒற்றுமையோடு ஈடுபட்டிருந்தனர்.

அன்று வங்காள மாகாண ஆளுநராக இருந்த கர்ஸன் பிரபு என்பவர் இந்த இந்து முஸ்லிம் ஒற்றுமையைக் கண்டு அஞ்சினார். இந்த உணர்வு நாடு முழுவதும் பரவினால் அது எதிர்காலத்தில் இந்தியாவின் ஆங்கி லேய ஆட்சிக்கு ஆபத்தாக முடியும் என்று அஞ்சி ஒரு சதித் திட்டம் தீட்டினார். முஸ்லிம் கள் அதிகம் வசிக்கும் கிழக்கு வங்காளம் என்றும், இந்துக்கள் அதிகம் வசிக்கும் வங்காளம் என்றும் அந்த வங்காள மாகா ணத்தை

1905ஆம் ஆண்டில் பிரித்தார். இது அந்த வங்க மக்கள் அனைவரையும் கொதித்தெழச் செய்தது. குறிப்பாக வாலி பர்களை, மாணவர்களை மற்றும் அறிவுஜீவி களை ஒரு அதிரடி நடவடிக்கைக்கு இட்டுச் சென்றது. இந்த ஆங்கிலேய ஆட்சியை அமைதியாக எதிர்த்து விரட்ட முடியாது. அவ ர்களை விரட்ட ஆயுதமேந்த வேண்டும், வெடி குண்டுகள் செய்ய வேண்டும். ஆங்கிலேய அதிகாரிகளை சுட்டுக் கொல்ல வேண்டும் போன்ற பயங்கரவாத போக்கிற்கு இட்டுச் சென்றது. இதன் விளைவாக அனுசீலன் சமிதி, ஜுகாந்தர் குழு போன்ற பயங்கரவாதக் குழுக்கள் தோன்றின. ஏராளமாக வெடி குண்டுகள் செய்யப்படலாயின. அரசாங்க உயர் அதிகாரிகளை துப்பாக்கியால் சுட்டுக் கொல்லும் போக்கு அதிகரித்தது. இதன் விளை வாக பல இளைஞர்கள் கைது செய்யப்பட்டு தூக்கில் போடப்பட்டனர். பலர் சுட்டுக் கொல்லப்பட்டனர். ஆயிரக்கணக்கானோர் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டு சிறைச்சாலைகளில் அடைக்கப்பட்டனர். இவையனைத்தும் அந்த இயக்கத்தை ஒடுக்க முடியவில்லை. மாறாக, புதிது புதிதாக ஏராளமான இளைஞர்கள் இந்த பயங்கரவாத இயக்கத்தில் பங்கெடுக்களாயினர்.

பல ஆண்டு காலம் கடும் சிறை வாசம் அனுபவித்து விடுதலையான இந்த இயக்கத் தைச் சார்ந்த அறிவு ஜீவிகள் பலர் இந்தியாவி லிருந்து கொண்டு இந்த ஆங்கிலேய ஆட்சி யை வீழ்த்த முடியாது, அதற்கு ஆங்கிலேயரின் எதிரி நாடான ஜெர்மனிக்குச் சென்று அந்த அரசாங்கத்தின் உதவியுடன் ஆயுதங்கள் சேகரித்து ஆங்கிலேயருக்கு எதிராகப் போராட வேண்டும் என்ற முடிவுக்கு வந்து, பலர் அங்கே சென்றனர். இவர்களில்

வங்காளத்தவர் மட்டுமல்ல, வங்காள எழுச்சி யால் ஈர்க்கப்பட்ட, பயங்கரவாத மனோபாவம் கொண்ட பிற மாநிலத்தவர் பலரும் இந்த முடிவுக்கு வந்தனர். இவ்வாறு வங்காளத்தைச் சேர்ந்த எம்.என்.ராய், அரவிந்த கோஷ், அபனி முகர்ஜி, சௌகத் உஸ்மானி, பூபேந்திர நாத் தத்தா போன்றோரும் வீரேந்திரநாத் சட்டோபாத்யாயா, முகமது பரக்கத்துல்லா, சென்னையைச் சேர்ந்த எம்.பி.டி. ஆச்சார்யா, செண்பகராமன் பிள்ளை மற்றும் ராஜா மகேந்திர பிரதாப் போன்றோரும் ஜெர்மன் நாட்டிற்குச் சென்றனர். வேறு சிலர் இங்கிலாந்து அரசாங்கத்திற்கும் பிரான்ஸ் அரசாங்கத்திற்கும் இடையிலான வேறுபாட்டை பயன்படுத்தி பாரீஸ் நகரத்திற்கும் புதுச்சேரிக்கும் சென்றனர்.

1914ஆம் ஆண்டில் துவங்கி 1918 ஆண்டு வரை நடைபெற்ற முதல் உலகப் போரின் போது, இந்தியாவின் இந்த பயங்கரவாத புரட்சி யாளர்களுக்கும், ஜெர்மனி அரசாங்கத் திற்கும் ஒரு உடன்பாடு ஏற்பட்டது. இங்கி லாந்தின் எதிரி நாடான ஜெர்மனி நாட்டின் அரசாங்கம் இந்த இந்திய புரட்சியாளர் களுக்கு ஏராளமாக பணமும், ஆயுதமும் கொடுப்பது என்றும், அதைக் கொண்டு அவர்கள் இந்தியாவில் ஆயுதப் புரட்சியை நடத்துவதென்றும் முடிவு செய்யப்பட்டது. ‘இந்திய - ஜெர்மன் சதி’ என்று அழைக்கப் பட்ட இந்தத் திட்டத்தின்படி கிழக்கிந்திய நாடு களில் ஆயுதப் புரட்சியை உருவாக்கும் பொறுப்பு எம்.என்.ராய்க்கு கொடுக்கப்பட்டது. அவருக்கு ஜெர்மன் அரசாங்கம் ஏராளமாக பணமும் கொடுத்தது. இந்தத் திட்டத்தின்படி அவர் இந்தோனேசியாவுக்கு சென்றார். பின்னர் அங்கிருந்து அமெரிக்காவுக்குச் சென்றார். அதன்பின் அவருடைய

அமெரிக்க மனைவி எவ்லின் டிரெண்டுடன் மெக்சிகோ நாட்டிற்கு சென்று அங்கே இரண்டரை வருடங்கள் தங்கியிருந்தார். அந்நாட்டில் சோசலிஸ்ட் கட்சியை உருவாக்கினார்.

1917ஆம் ஆண்டு நவம்பர் மாதம் மகத்தான ரஷ்ய புரட்சி லெனின் தலைமை யில் வெற்றி பெற்றபின் 1918ஆம் ஆண்டில் லெனின் மூன்றாவது அகிலம் என்ற கம்யூ னிஸ்ட் அகிலத்தை உருவாக்கினார். இதன் நோக்கம் முழுவதும் உலகில் மார்க்சியத்தை பரப்பி தொழிலாளிகளையும், இளைஞர் களையும், மாணவர்களையும் ஈர்ப்பது என் பதை முதன்மையான நோக்கமாக கொண்டி ருந்தது. அச்சமயத்தில்தான் எம்.என்.ராயை கம்யூனிஸ்ட் அகிலத்தின் தலைவர்களில் ஒரு வரான பரோடின் என்பவர் மெக்சிகோவில் சந்தித்துப் பேசி மார்க்சியம் குறித்து அவருக்கு விளக்கினார். மார்க்சிய நூல்களைக் கொடுத்து அவரை படிக்க வைத்தார். இதன் மூலம் அவரை கம்யூனிஸ்ட் ஆதரவாளராக்கினார். பரோடினின் முக்கிய வேலை என்பது ஐரோப்பா முழுவதும் சென்று அங்குள்ள கல் லூரிகள், பல்கலைக்கழகங்கள் போன்றவற் றில் பயிலும் மாணவர்களில் முற்போக்கு சிந்த னையுள்ளவர்களை, அறிவுஜீவிகளை, புரட்சி கர போர்க்குணம் கொண்ட மாணவர்களை ஈர்ப்பது, அவர்களுடன் விவாதிப்பது, மார்க்சியத்தை அவர்களுக்கு விளக்கிக் கூறுவது, மார்க்சிய நூல்களை படிக்க வைப் பது, பின்னர் அவர்கள் குறித்து கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு தகவல் அனுப்புவது, கம்யூ னிஸ்ட் அகிலம் அவர்களை மாஸ்கோ விற்கு அனுப்பும்படி கூறியவுடன் அவர்களை அங்கே அனுப்பி வைப்பது போன்றவற்றை

அவர் செய்வார். அவ்வாறு மாஸ்கோ சென்ற வர்களுடன் கம்யூனிஸ்ட் அகிலத்தின் தலைவர்கள் விவாதித்து அவர்களுக்கு மார்க்சிய தத்துவார்த்தப் பயிற்சியளித்து, அவர் களை கம்யூனிஸ்ட் ஆக்கி அவர்கள் நாட்டிற்கே திருப்பி அனுப்புவார்கள். அவர்கள் தங்கள் நாட்டில் மார்க்சியத்தை பரப்புவார்கள். எம்.என்.ராய் குறித்து பரோடின், கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு தகவல் அனுப்பி யதும், உடனே அவரை மாஸ்கோவிற்கு அனுப்பும்படி அங்கிருந்து தகவல் வந்தது. ராயின் முன்முயற்சியால் மெக்சிகோ சோச லிஸ்டுக் கட்சி தன்னை கம்யூனிஸ்ட் கட்சி என்று மாற்றிக் கொண்டது. ராய் அக்கட்சி யின் சார்பில் மாஸ்கோ சென்றார். அதன்படி இப்பொழுது எம்.என்.ராயும், அவர் துணைவி யார் எவ்லின் டிரெண்ட்ராயும், மாஸ்கோ சென்றனர். அவர்கள் அங்குள்ள கம்யூனி ஸ்ட் அகிலத்தின் தலைவர்களால் நேசத்துடன் வரவேற்கப்பட்டனர்.

மாஸ்கோவில் 1919ஆம் ஆண்டு ஜூலை 19 முதல் ஆகஸ்ட் 7 ஆம் தேதி வரை நடை பெற்ற கம்யூனிஸ்ட் அகிலத்தின் இரண்டா வது காங்கிரசில் (பேராயத்தில்) ராய் கலந்து கொண்டார். அதேபோல் கம்யூனிஸ்ட் அகி லத்தின் மேற்கு ஐரோப்பிய தலைமைக்குழு அனுப்பிய அபனி முகர்ஜி என்பவரும் இந்தி யாவின் சார்பாக பிரதிநிதியாக கலந்துகொண்டார். கம்யூனிஸ்ட் அகிலத்தின் இரண்டாவது பேராயத்திற்குப் பிறகு இந்தியப் புரட்சி யாளர்களை ஒன்றுதிரட்டி இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கும் பொறுப்பு எம்.என்.ராய்க்குக் கொடுக்கப்பட்டது. எம்.என்.ராய் இப்பொழுது தன்னைப் போலவே ரஷ்யாவிற்கு வந்திருந்த

இந்திய புரட்சியாளர் எம்.பி.டி. ஆச்சார்யாவை தொடர்புகொண் டார். அதேபோல ரஷ்யப் புரட்சியால் ஈர்க்கப் பட்டு ரஷ்யாவிற்கு வந்திருந்த இந்தியப் புரட்சி யாளர்களான முகமது அலி மற்றும் முகமது ஷாபி சித்திக்கி ஆகியோரை தொடர்பு கொண்டு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் கிளையை தாஷ்கண்ட் நகரில் உருவாக்கி னார்.

இதில் பங்கு பெற்றவர்கள்:

1. எம்.என்.ராய், 2. எவ்லின் டிரெண்ட் ராய் (எம்.என்.ராயின் மனைவி), 3. அபனி முகர்ஜி, 4. ரோஸா பிட்டிங்காப் (அபனி முகர்ஜியின் மனைவி), 5. முகமது அலி, 6. முகமது ஷாபிக் சித்திக்கி, 7. எம்.பி.டி. ஆச்சார்யா. *பரீட்சார்த்த உறுப்பினர்களுக்கான கவனிப்பு காலம் மூன்று மாதங்களாகும்*. முகமது ஷாபிக் செயலாளராகத் தேர்ந்தெடு க்கப்பட்டார்.

இந்த முதல் கூட்டத்தில் எடுக்கப்பட்ட தீர்மானம் வருமாறு:

“மூன்றாவது அகிலம் பிரகடனம் செய்த கோட்பாடுகளை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி ஏற்றுக் கொள்கிறது என்பதுடன் இந்திய நிலைமைகளுக்கேற்றார் போல் ஒரு திட்டத்தை உருவாக்கும் பணியை செய்வது என்று உறுதிபூணுகிறது.

எம்.பி.டி. ஆச்சார்யா எம்.என்.ராய்
(தலைவர்) (செயலாளர்)

தாஷ்கண்ட் அக்டோபர் 17, 1920

இதுதான் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் கிளை தாஷ்கண்ட் நகரில் உருவான சுருக்கமான வரலாறு.

# ம.சிங்காரவேலர்

- என்.ராமகிருஷ்ணன்

-அக்டோபர் 20, 2019






…

இந்திய கம்யூனிஸ்ட் இயக்க முன்னோடிகள் - 1

தாஷ்கண்ட்டில் எம்.என்.ராய் முதல் கிளையை உருவாக்கி வந்த நேரத்திலேயே இந்தியாவில் மூன்று கம்யூனிஸ்ட்டுகள் மூன்று நகரங்களில் தோன்றினர்.

இவர்கள் தாம் இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் துவக்கக் கால முன்னோடிகள் என்ற பெருமைக்குரியவர்கள் ம. சிங்காரவேலர், எஸ்.ஏ.டாங்கே, முசாபர் அகமது ஆகிய மூவர் ஆவர். இவர்களில் மூத்தவர் ம. சிங்காரவேலர். அவர் 1860 ஆம் ஆண்டில் சென்னையில் ஒரு வசதி படைத்த மீனவக் குடும்பத்தில் பிறந்தார். அவர் லெனின் மற்றும் காந்தியை விட வயதில் மூத்தவர். 1894ஆம் ஆண்டில் இளங்கலைப் பட்டத்தை முடித்து பின்னர் வழக்கறிஞர் பட்டம் பெற்றார். 1907ஆம் ஆண்டில் சென்னை உயர்நீதிமன்ற வழக்கறிஞரானார். தேசிய இயக்கத்தால் ஈர்க்கப்பட்ட அவர் தீவிர மான காங்கிரஸ் ஊழியரானார். 1917ஆம் ஆண்டின் ரஷ்யப் புரட்சி அவர் மீது பெரும் தாக்கம் செலுத்தியது. லெனின் தலைமை குறித்தும் ரஷ்யப் புரட்சியின் சாதனைகள் குறித்தும் கிடைத்த விவரங்கள் அனைத்தையும் படித்தார். அவற்றை சேகரித்தும் வைத்தார். அதைத் தொடர்ந்து இந்தியாவிற்குள் கொண்டு வரப்பட்ட மார்க்ஸ், ஏங்கெல்ஸ், லெனின் நூல்களைப் படித்து மார்க்சியவாதியானார். 1918ஆம் ஆண்டில் அவ ரது நெருங்கிய தோழரும், தமிழறிஞரும் தேச பக்தரு மான திரு.வி. கல்யாண சுந்தரனார் (திரு.வி.க) சென்னை பின்னி மற்றும் கர்னாட்டிக் மில் தொழி லாளருக்காக ‘சென்னை தொழிலாளர் சங்கத்தை’ துவக்கினார். அவர் தன் நெருங்கிய நண்பர் சிங்கார வேலரும், அந்த சங்கக் கூட்டங்களுக்கு வந்து தனக்கு உதவி செய்ய வேண்டுமென கேட்டுக் கொண்டார். அதையேற்று சிங்கார வேலர் அந்தச் சங்கத்தின் செயல்பாடுகளில் தீவிர ஆர்வம் காட்ட லானார். படிப்படியாக அந்த தொழிலாளர்களின் கூட்டங்களில் மார்க்சிய தத்துவம் குறித்து எளிமை யாக விளக்கவும் ஆரம்பித்தார்.

உழைப்பு என்றால் என்ன? முதலாளி என்பவர் யார்? அவர் எவ்வாறு தொழிலாளிகளின் உழைப்புச் சக்தியை கூலிக்கு வாங்கி அதிகம் லாபம் பெறுகிறார் என்பதையும் தொழிலாளிகள் எவ்வாறு ஒன்றுபட்டு அந்த முதலாளிக்கெதிராகப் போராட வேண்டும் என்பதைப் பற்றியும் மிக எளிய முறையில் அவர்களுக்கு விளக்கிக் கூறினார். அச்சமயத்தில் இந்த இரண்டு மில்களிலும் சுமார் 14 ஆயிரம் தொழிலாளர்கள் வேலை செய்து வந்தனர். தொழி லாளிகளின் ஊர்வலங்களிலும் அவர் பங்கெ டுத்தார். 1920 ஆம் ஆண்டு டிசம்பர் 10ஆம் தேதியன்று ஆங்கிலேய காவல்துறை பின்னி மில் தொழிலாளர் மீது துப்பாக்கிச் சூடு நடத்தி இரண்டு தொழிலாளி களைக் கொன்றது. அவர்களின் அடக்க நிகழ்ச்சி யின் போது அவர்கள் உடல்களைத் தூக்கிச் சென்ற வர்களில் சிங்காரவேலரும் ஒருவராவார். அதன் பின் 1921ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 29ஆம் தேதியன்று காவல்துறையினர் நடத்திய மற்றொரு துப்பாக்கிச் சூட்டில் ஒரு பெண் உள்பட ஏழு பின்னி மில் தொழிலாளிகள் கொல்லப்பட்டனர். அவர் களில் இறுதி நிகழ்ச்சியில் கலந்து கொண்ட சிங்கார வேலர் அதைக்குறித்து ஒரு உருக்கமான கட்டுரை எழுதி பத்திரிகைகளுக்கு அனுப்பினார்.

சென்னையில் சிங்காரவேலர் இவ்வாறு மார்க்சியப் பிரச்சாரம் செய்து வரும் காலத்தில் பம்பாயில் எஸ்.ஏ.டாங்கே என்ற இளைஞரும், கல்கத்தாவில் முசாபர் அகமது என்ற இளைஞரும், மார்க்சியத்தால் ஈர்க்கப்பட்டு அந்தக் கருத்தை விளக்கி பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் மூவர்தான் இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் முன்னோடிகள் ஆவர். ஏற்கெனவே சொன்னபடி

இந்தியாவில் கம்யூ னிஸ்ட் இயக்கத்தை உருவாக்கும் பொறுப்பு அகி லத்தால் கொடுக்கப்பட்ட எம்.என்.ராய் இப்பொழுது இவர்கள் மூவரையும் தொடர்புகொண்டு ஒன்றி ணைக்கத் தொடங்கினார். சென்னையில் சிங்காரவேலர் மார்க்சியத் தத்துவத்தை தொழிலாளிகளிடையே பரப்பு வதற்காக 'தொழிலாளன்' என்ற பத்திரிகையை யும், 'லேபர் கிஸான் கெஜட்' என்ற பத்திரிகையை யும் தொடங்கினார். 1922ஆம் ஆண்டில் இன்றைய பீகார் மாநி லத்தில் உள்ள கயா நகரில் நடைபெற்ற காங்கிரஸ் கட்சியின் அகில இந்திய மாநாட்டில் அவர் தொழி லாளி வர்க்கத்தின் பிரச்சனைகளை எடுத்துக் கூறினார். அந்த மாநாட்டில் தொழிலாளர் குறித்து கொண்டு வரப்பட்ட தீர்மானத்தை வழிமொழிந்து அவர் எழுச்சிமிக்க உரையாற்றினார். "உலகக் கம்யூனிஸ்ட்டுகளின் சிறப்பிற்குரிய வரிசை முறை யில் உலக நலனில் அக்கறையுள்ள மாபெரும் இயக்கத்தின் பிரதிநிதியாக இங்கு வந்துள்ளேன்" என்ற அறிவிப்புடன் தன் உரையை தொடங்கிய சிங்காரவேலர் இந்திய முதலாளித்துவ வர்க்கத்தின ருக்கு ஓர் எச்சரிக்கை விடுத்தார். "ஆகையால் பூர்ஷ்வாக்களே! கவனித்துக் கேளுங்கள். நான் சொல்வதை உற்றுக் கேளுங்கள். இந்தியத் தொழி லாளர்கள் விழிப்புற்றுள்ளனர் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். வெளிநாட்டிலுள்ள அவர்களின் தோழர்களைப் போலவே. குன்றுகளுக்கப்பால், கடல்களுக்கப்பால், பெருங்கடல்களுக்கப்பால் அவர்கள் காண்கின்றனர். உலகத் தொழிலாளர் எல்லோருடனும் உண்மையான தோழமையு ணர்வு கொள்கின்றனர் என்பதை அறிந்து கொள்க. நீங்கள் இன்று அவர்களைப் புறக்கணிக்க முடி யாது. இவர்கள்

தங்கள் வலிமையை இப்போது உணர்ந்துள்ளனர்” என்று எச்சரிக்கை விடுத்தார்.

1923ஆம் ஆண்டில் இந்தியாவிலேயே முதன்முறையாக மே தினத்தை சென்னையில் இரண்டு இடங்களில் சிறப்பாகக் கொண்டாடினார். அதே நாளில் தொழிலாளர் - விவசாயிகள் கட்சி என்ற தொழிலாளி வர்க்கக் கட்சியை உருவாக்கி னார். அரசியல் கட்சி இருந்தால்தான் தொழிலாளி களை அமைப்பு ரீதியாக ஒன்றுபடுத்தி அவர்களுக்கு மார்க்சிய அரசியல் வழிகாட்டல் கொடுக்க முடியும் என்று அவர் கருதினார். 1925ஆம் ஆண்டில் சத்யபக்தா என்பவரின் முன்முயற்சியால் கான்பூர் நகரில் ஒரு கம்யூ னிஸ்ட் மாநாடு கூட்டப்பட்டது. அந்த மாநாட்டிற்கு தலைமை வகித்து சிங்காரவேலர் ஓர் அற்புதமான உரையாற்றினார். அந்த உரையின் நிறைவாக அவர் கூறினார்:

“தோழர்களே! இந்தியாவில் கம்யூனிஸ்டு களாகிய நாம் குறிக்கோளாகக் கொள்ள வேண்டி யது எது? எல்லோருக்கும் எளிய வாழ்க்கை, அன்றாட உணவு பற்றிய கவலையற்ற வாழ்வு, அகால மரணத்திலிருந்தும், உடல்நலக் கேட்டி லிருந்தும், விடுதலை பெற்ற வாழ்வு, அறியாமை நீங்கிய வாழ்வு ஆகியவைகளே. கம்யூனிசக் கொள்கைகளைப் படிப்படியாகவும் அமைதியாக வும் கடைப்பிடிப்பதால், இந்தியாவில் மக்களுக்குச் சிறந்த வாழ்க்கையைக் கொண்டு வர முடியும் என கம்யூனிஸ்ட்டுகளாகிய நாங்கள் நம்புகிறோம். இந்தியாவின் எதிர்காலம் நம் கைகளிலுள்ளது. மிக உயர்ந்த இந்தியாவைக் காண நாம் கனவு காண்கிறோம். ஆகையால் எளியோரை வலி யோர் சுரண்டல், நம்

வாழ்க்கையில் கடும் உழைப்பினால் ஏற்படும் கலையின்மை, பட்டினி, நோய், சாவு ஆகியவைகளிலிருந்து விடுதலை பெற்ற நம் எண்ணங்கள் எத்தடையும் இடையூறு மின்றி வெளிப்படுத்த கலையுருவாக்கும் மிக உயர்ந்த பொருட்கள், விஞ்ஞானம், கலாச்சாரம் ஆகியவைகளை அனுபவிக்கும் உரிமையுள்ள தொழிலாளர் தம் புரட்சிக் கீதத்தை இசைக்கும் சுதந்திர இந்தியா பற்றிய கனவை நிறைவேற்ற முயல்வோம்....”

1928ஆம் ஆண்டில் தென்னிந்திய ரயில்வே தொழிலாளர்களின் மாபெரும் போராட்டம் சிங்கார வேலர் தலைமையில் நடைபெற்றது. அது நாகப் பட்டினத்திலிருந்த ரயில்வே தொழிற்சாலையை பொன்மலைக்கு மாற்றக் கூடாது என்ற கோரிக்கை யிலிருந்து உருவானது. பலநாட்கள் ரயில் ஓட வில்லை. கடுமையான தடியடி, சித்ரவதைகள் தொழிலாளிகள் மீது நடத்தப்பட்டன. ஆங்கிலேய அரசாங்கம் சிங்காரவேலரை கைது செய்து பத்தாண்டு சிறைத் தண்டனை விதிக்கச் செய்தது. அது மேல்முறையீட்டில் இரண்டு ஆண்டுகளாக குறைந்தது. 1930ஆம் ஆண்டில் அவர் விடுதலை யானபோது அவருக்கு 70 வயது. அத்துடன் பக்க வாத நோய் ஏற்பட்டது. எனவே வெளியே சென்று செயல்பட முடியவில்லை. வீட்டிலிருந்தவாறே மார்க்சியத் தத்துவம், பொருளாதாரம், அரசியல், சமூக சீர்திருத்தம் போன்றவை குறித்து ஏராளமான கட்டுரைகள் எழுதி வழிகாட்டினார்.

1931ஆம் ஆண்டு பெரியார் அவர்கள் ஓராண்டு உலகப் பயணம் மேற்கொண்ட பொழுது, தான் வரும்வரை தனது பத்திரிகை ‘குடியரசு’ ஏட்டிற்கு சிங்காரவேலர் கட்டுரைகள் எழுதி வழிகாட்ட வேண்டுமென

கேட்டுக் கொண்டார். அதையேற்று சிங்காரவேலர் ‘கடவுளும் பிரபஞ்சமும்’, ‘கடவுள் என்ற பதமும், அதன் பயனும்’, ‘மனிதனும் பிரபஞ்சமும்’, ‘பிரபஞ்சப் பிரச்சனைகள்’, ‘மெய்ஞான முறையில் மூட நம்பிக்கைகள்’, ‘மூட நம்பிக்கைகளின் கொடுமை’, ‘பகுத்தறிவு என்றால் என்ன?’ போன்ற அற்புதமான கட்டுரை கள் எழுதி உதவினார். இந்திய நாட்டில் உள்ள பெரும் சமூகப் பிரச்சனைகளான சாதி, மதம், தீண்டாமை மற்றும் பெண் உரிமை இல்லாதி ருத்தல் போன்ற பிரச்சனைகளை அவர் மார்க்சியப் பார்வையிலிருந்து விளக்கினார். தீண்டாமை பற்றி குறிப்பிடும் போது சிங்காரவேலர் அதை மார்க்சிய அடிப்படையில் ஆராய்ந்து இந்தியாவில் அடிப்படையான சமூக மாற்றமின்றி, அதாவது பொருளாதார மாற்றமின்றி, தீண்டாமை ஒழியாது என்பதைச் சுட்டிக்காட்டினார்.

அவர் கடைசியாக 1945ஆம் ஆண்டு ஜூன் மாதம் 24ஆம் தேதியன்று சென்னை அச்சுத் தொழிலாளர் மாநாட்டில் பேசினார்: “எனக்கு வயது 84. ஆயினும் தொழிலாளி வர்க்கத்திற்கு என் கடமையைச் செய்ய நான் இங்கே வந்துள்ளேன். உங்கள் மத்தியில் நான் இறந்தாலும் அதைவிட எனக்குக் கிடைக்கக்கூடிய பாக்கியம் வேறென்ன? கம்யூனிஸ்ட் கட்சிதான் உங்களுடைய சரியான அரசியல் தலைமை” என்று அவர் முழங்கினார். இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் முதல் பெரும் தலைவரும், மார்க்சிய அறிஞருமான சிங்காரவேலர் 1946ஆம் ஆண்டு பிப்ரவரி 11ஆம் தேதி சென்னையில் காலமானார். தான் மரண மடைவதற்கு முன்பு தன் வாழ்நாள் முழுவதும் சிரமப்பட்டு சேர்த்து வைத்திருந்த 10 ஆயிரம் அரிய

புத்தகங்கள் கொண்ட நூலகத்தை கம்யூ னிஸ்ட் கட்சிக்கு அவர் அன்பளிப்பாகக் கொடுத்தார்.

# முசாபர் அகமது

- என்.ராமகிருஷ்ணன்

-அக்டோபர் 22, 2019




…

இந்திய கம்யூனிஸ்ட் இயக்க முன்னோடிகள் - 2

தாஷ்கண்ட்டில் எம்.என்.ராய் முதல் கிளையை உருவாக்கி வந்த நேரத்திலேயே இந்தியாவில் மூன்று கம்யூனிஸ்ட்டுகள் மூன்று நகரங்களில்

தோன்றினர். அவர்களில் ஒருவர் வங்கத்தில் தோன்றிய, மக்களால் ‘காகா பாபு’ என்று அன்போடு அழைக்கப்பட்ட தோழர் முசாபர் அகமது.

சிங்காரவேலருக்கு அடுத்த படியாக மூத்த இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத் தலைவரான முசாபர் அகமது, இன்றைய வங்க தேசத்தில் உள்ள முசாபர்பூரில் 1889ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 5ஆம் தேதி பிறந்தார். அவரது தந்தையார் மன்சூர்அலி நீதிமன்ற வழக்கறிஞர் ஆவார். ஆனால் முசாபர்அகமது சிறுவனாக இருந்தபொழுதே அவர் இறந்துவிட்டார். முசாபர் அகமது சாந்த்விப் கார்கில் உயர்நிலைப்பள்ளியிலும், பின் நவகாளி மாவட்டப் பள்ளியிலும் படித்து 1913ஆம் ஆண்டின் மெட்ரிக்குலேசன் தேர்வில் வெற்றி பெற்றார். அதே ஆண்டில் ஹூக்ளியில் உள்ள கல்லூரி ஒன்றில் சேர்ந்த முசாபருக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டதால் படிப்பைத் தொடர முடியவில்லை. பின்னர் அவர் கல்கத்தா மாநகராட்சி ஊழியரானார். தொடர்ந்து டியூசன் சொல்லிக் கொடுத்தார். அவருக்கு அச்சமயத்திலேயே வங்காளி, ஆங்கிலம், உருது, அரபு மற்றும் பாரசீக மொழிகளில் நல்ல பரிச்சயம் இருந்தது. அதே சமயத்தில் வங்காளத்தில் பரவி வந்த தேசிய இயக்கம் அவரை ஈர்த்தது. எழுத்து ஆர்வம் கொண்டிருந்த அவர் கல்கத்தாவில் செயல்பட்டு வந்த முஸ்லிம் சாகித்ய சமிதியிலும் பின்னர் வங்காள சாகித்ய சமிதியிலும் உறுப்பினரானார். அரசாங்கத் தலைமை நிலையத்தில் எழுத்தராகவும், மொழி பெயர்ப்பாளராகவும் பணியாற்றினார்.

1916ஆம் ஆண்டிலிருந்தே காங்கிரஸ் கட்சிக் கூட்டங்களிலும், ஆர்ப்பாட்டங்களிலும் பங்கேற்க ஆரம்பித்த முசாபர் 1917ஆம் ஆண்டில்

காங்கிரஸ் மற்றும் முஸ்லிம் லீக் கட்சியின் மாநாடுகளிலும் பார்வையாளராக கலந்து கொண்டார். 1918ஆம் ஆண்டு முதல் 1920ஆம் ஆண்டு வரை 'வங்காள முஸ்லிம் சாகித்ய சமிதியின்' முழு நேர ஊழியரானார். இலக்கியமா அல்லது அரசியலா எந்தப் பணியை தேர்ந்தெடுப்பது என்று சிந்தித்த முசாபர் இறுதியில் அரசியல் பணியை தேர்ந்தெடுப்பது என முடிவு செய்தார். இதைத் தொடர்ந்து அவரும் அவருடைய நெருங்கிய நண்பர் கவிஞர் நஸ்ரூல் இஸ்லாம் மற்றும் பஸ்நூல் கக் ஆகிய மூவரும் சேர்ந்து 'நவயுகம்' என்ற பெயரில் ஒரு பத்திரிகை தொடங்கினர். இதில் தொழிலாளர்களை குறித்து கட்டுரை எழுதுவதற்காக முசாபர் துறைமுகத்திற்கு சென்று அங்குள்ள தொழிலாளிகளை சந்தித்துப் பேசி விவரம் சேகரித்தார். ஒரு முறை தொழிலாளிகள் மீது காவல்துறை கடும் அடக்குமுறையை ஏவியபொழுது இந்தப் பத்திரிகை அதை வன்மையாக கண்டித்தது. இதனால் கோபமடைந்த ஆங்கிலேய அரசாங்கம் அந்தப் பத்திரிகையின் காப்புத்தொகையை பறிமுதல் செய்தது.

1921ஆம் ஆண்டு நவம்பர் மாதம் அவர் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது. காலேஜ் சதுக்கத்தில் உள்ள புத்தகக் கடை ஒன்றில் தொழிலாளர் பிரச்சனை குறித்த புத்தகங்கள் விற்கப்படுகின்றன என்ற தகவல் முசாபருக்கு கிடைத்ததும் அவர் அங்கே விரைந்து சென்றார். அங்கே லெனின் எழுதிய 'போல்ஷிவிக்குகள் நீடித்து ஆள முடியுமா?', 'இடதுசாரி கம்யூனிசம் ஒரு இளம்பருவக் கோளாறு' ஆகிய புத்தகங்களையும் 'மக்களுடைய மார்க்ஸ்' எந்த நூலையும் வாங்கினார். அது அவருக்கு

மார்க்சியம் குறித்து ஒரு கருத்தை ஏற்படுத்தியது. அதன்பின் “வான்கார்ட்” (முன்னணிப்படை), ‘அட்வான்ஸ் கார்ட்’ (முன்னணி காவலன்), ‘சர்வதேச செய்தி பரிமாற்றம்’, ‘இந்திய மக்கள்’, ‘கம்யூனிஸ்ட் அகிலம்’ போன்ற பல கம்யூனிஸ்ட் இதழ்கள் அயல்நாட்டிலிருந்து வர ஆரம்பித்தன. இவையனைத்தும் முசாபருக்கு சர்வதேச நிலைமையையும் கம்யூனிஸ்ட் அகிலத்தின் செயல்பாடுகளையும் புரிந்து கொள்ள உதவி செய்தது. 1923ஆம் ஆண்டு பிப்ரவரி 8ஆம் தேதி கம்யூனிஸ்ட் அகிலத்தைச் சேர்ந்த சௌகத் உஸ்மானி என்பவர் கல்கத்தாவிற்கு வந்த முசாபர் அகமதைச் சந்தித்துப் பேசினார். முசாபர் குறித்து ஏற்கெனவே எம்.என்.ராய் கேள்விப்பட்டிருந்தார். எனவே அவர் இப்பொழுது உஸ்மானியை அனுப்பி முசாபருடன் தொடர்பு கொண்டார். இந்த விபரங்கள் கல்கத்தா காவல்துறைக்கு தெரியவந்தவுடன் அவர்கள் முசாபரை தொடர்ந்து பின்தொடர ஆரம்பித்தார்கள். முசாபர் அயல்நாடுகளுக்கு வரவேண்டுமென எம்.என்.ராய் அழைத்தார். கல்கத்தா துறைமுகத்திலிருந்து அயல்நாடுகளுக்குச் செல்லும் கப்பலில் எடுபிடி வேலைக்காக ஆட்கள் எடுப்பார்கள். அவ்வாறு ஐரோப்பா செல்லலாம் என முசாபர் முடிவு செய்தார். ஆனால் தொற்றுநோயால் பாதிக்கப்பட்டவர்கள் கப்பலில் பணி செய்ய முடியாது. எனவே வறுமையில் வாடிவந்த முசாபருக்கு உடல் முழுவதும் சிரங்குகள் இருந்ததால் அவர் செல்ல இயலவில்லை.

923 ஆம் ஆண்டு மே மாதம் 9ஆம் தேதியன்று சௌகத் உஸ்மானி கைது செய்யப்பட்டார். ஒரு நாள் கழித்து முசாபர் அகமதுவும் கைது

செய்யப்பட்டார். முசாபர் அகமது புது அலிப்பூர் மத்திய சிறைச்சாலையில் பாதுகாப்பு கைதியாக அடைக்கப்பட்டார். பின்னர் டாக்கா மத்திய சிறைச்சாலைக்கு கொண்டு செல்லப்பட்டார். இவரை செய்தது போன்றே ஆங்கிலேய அரசாங்கம் செளகத் உஸ்மானியையும் குலாம் உசேனையும் விசாரணையின்றி சிறையிலடைத்தது.

இந்தியாவில் கம்யூனிசக் கருத்துக்கள் பரவி வருவதைக் கண்ட ஆங்கிலேய அரசாங்கம் அது தனது ஆதிக்கத்திற்கு ஆபத்து என்று கருதி அதை முளையிலேயே கிள்ளி எறிவது என்று திட்டமிட்டது. இதன் பொருட்டு கம்யூனிச அகிலத்துடன் நேரடியாகவும், கடிதம் மூலமும் தொடர்பு கொண்டுள்ள இந்தியர் அனைவரையும் சிறையில் அடைக்க ஒரு குற்றப் பட்டியலை தயாரித்தது. அதில் எம்.என்.ராய், முசாபர் அகமது, எஸ்.ஏ.டாங்கே, சிங்காரவேலர் போன்ற பலரை சேர்த்திருந்தது. ஆனால் எம்.என்.ராய் வெளிநாட்டில் இருந்ததால் அவரை கைது செய்ய முடியவில்லை. சிங்காரவேலருக்கு அப்பொழுது கடுமையான டைபாய்டு காய்ச்சல். எனவே அரசாங்க மருத்துவர்கள் அவரை கான்பூருக்கு கொண்டு செல்லக்கூடாது என்று தடை விதித்துவிட்டனர். எனவே அரசாங்கம் பின்வரும் பட்டியலை தயாரித்தது.

1. முசாபர் அகமது
2. எஸ்.ஏ.டாங்கே
3. நளினி குப்தா
4. செளகத் உஸ்மானி

ஆகிய நான்கு பேர் மீது கான்பூர் கம்யூனிஸ்ட் சதி வழக்கை அரசாங்கம் நடத்தியது. இந்த நால்வரும் அந்நியர் தூண்டுதலால் சதி செய்து அரசாங்கத்தை கவிழ்க்க முயற்சி செய்தனர் என்று காவல்துறை குற்றம் சாட்டியது. இந்த விசாரணையின் தீர்ப்பு 1924ஆம் ஆண்டு மே மாதம் 20ஆம் தேதி வழங்கப்பட்டது. முசாபருக்கு 4ஆண்டு சிறைத் தண்டனை, இதரருக்கு வெவ்வேறு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. முசாபர் ரேபரெய்லி சிறைச்சாலையில் அடைக்கப்பட்டார். இந்த தண்டனை விதிக்கப்பட்டவர்களுக்கு தண்டனை குறைப்பு கிடையாது, யாருக்கும் கடிதம் எழுத அனுமதி கிடையாது, பிறரிடமிருந்து கடிதங்கள் பெற முடியாது, யாரும் மனு போட்டு அவர்களைச் சந்தித்து பேச முடியாது என்ற நிபந்தனைகளும் விதிக்கப்பட்டன. ஆனால் சிறையில் அடைக்கப்பட்ட சிலமாத காலத்தில் முசாபர் ரத்த வாந்தி எடுத்தார். அவரை பரிசோதித்த ஆங்கிலேய மருத்துவர் அவருக்கு காச நோய் ஏற்பட்டுள்ளது என்றும் அவர் இறந்து விடுவார் என்றும் அரசாங்கத்திற்கு கடிதம் எழுதியதால் முசாபர் 1925ஆம் ஆண்டு செப்டம்பர் 12ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டார்.

சிறிது காலம் கழித்து சத்யபக்தா என்பவர் முசாபர் அகமதுவுக்கு 30 ரூபாய் மணியாடர் மூலம் அனுப்பிவைத்து தான் கான்பூரில் ஒரு கம்யூனிஸ்ட் மாநாடு நடத்துகிறேன் என்றும் அதில் தாங்கள் கலந்து கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். அதையேற்று முசாபர் அந்த மாநாட்டில் கலந்து கொண்டார். சிங்காரவேலர் தலைமையில் 1925ஆம் ஆண்டில் நடைபெற்ற அந்த மாநாட்டில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி

உருவாக்கப்பட்டது. எஸ்.வி.காட்டே அதன் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த மாநாடு முடிந்ததும் முசாபர் 1926 ஜனவரி முதல் வாரத்தில் கல்கத்தா திரும்பினார். அதன் பின் அவர் ஏற்கெனவே நடத்தப்பட்டு வந்த ‘லாங்கல்’ என்ற வங்காள வார இதழை நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். பின் அது ‘கனவாணி’ என்று பெயர் மாற்றப்பட்டது. சிறிது காலம் கழித்து அதன் ஆசிரியர் பொறுப்பையும், பதிப்பாளர் பொறுப்பையும் முசாபரே ஏற்றுக் கொண்டார். இந்த பத்திரிகையில்தான் முசாபர் மார்க்ஸ், ஏங்கெல்ஸ் எழுதிய கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கையை வங்க மொழியில் மொழிபெயர்த்து வெளியிட்டார். 1927ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் (ஏஐடியுசி) மாநாடு நடைபெற்றது. இதில் முசாபர் பங்கேற்றார். பின்னர் அதே ஆண்டில் தில்லியில் நடைபெற்ற ஏஐடியுசி மாநாட்டில் முசாபர் அதன் உதவித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1927ஆம் ஆண்டு மே மாதம் 11ஆம் தேதியன்று பம்பாய் நகரில் கம்யூனிஸ்ட்களின் மாநாடு ஒன்று நடைபெற்றது. இதில் கட்சிக்கு அமைப்பு விதிகளும், கொள்கைப் பிரகடனமும் உருவாக்கப்பட்டன. முசாபர் இம்மாநாட்டில் கட்சியின் நிர்வாகக்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1928ஆம்ஆண்டு டிசம்பர் மாதத்தில் கல்கத்தாவில் தொழிலாளர் - விவசாயிகள் கட்சியின் அகில இந்திய மாநாடு நடைபெற்றது. முசாபர் மாநாட்டின் அமைப்பாளர்களில் ஒருவராகச் செயல்பட்டார். கட்சியின் மத்தியக்குழுவிற்கு தேர்ந்தெடுக்கப்பட்டார். அதே ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஜாரியாவில் நடைபெற்ற ஏஐடியுசி

மாநாட்டில் முசாபர் அதன் உதவித் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். 1927ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் இந்திய தேசிய காங்கிரசின் மாநாடு சென்னையில் நடைபெற்றது. இம்மாநாட்டில் பங்கு பெற சென்னை வந்த முசாபர் சிங்காரவேலர் இல்லத்தில் நடைபெற்ற இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் நிர்வாகக் குழு கூட்டத்திலும் கலந்து கொண்டார்.

1928ஆம் ஆண்டு மார்ச் 31ஆம் தேதி தொழிலாளர்- விவசாயிகள் கட்சியின் 3வது மாநாடு வங்கத்தின் 24 பர்கானா மாவட்டம் பாட்பாராவில் நடைபெற்றது. அதில் முசாபர் அகமது கட்சியின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1929 ஆம் ஆண்டு ஜனவரியில் கம்யூனிஸ்டுகளின் ஒரு ரகசிய கூட்டம் கல்கத்தாவில் நடைபெற்றது. தலைமறைவாகச் செயல்பட்டு வந்த கம்யூனிஸ்ட் கட்சி சீரமைக்கப்பட்டது. முசாபர் கட்சியின் நிர்வாகக்குழுவிற்கு தேர்ந்தெடுக்கப்பட்டார். முசாபரின் பரிந்துரையின் பெயரில் பி.சி.ஜோஷியும் சோகன் சிங் ஜோசும் கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினராக்கப்பட்டனர். இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கம் வேகமாக பரவுவதைக் கண்ட ஆங்கிலேய அரசாங்கம் அதிர்ச்சியடைந்து 1929ஆம் ஆண்டு முசாபர் உள்ளிட்டு 31 பேரைக் கைது செய்து மீரட் சிறைச்சாலையில் அடைத்து கம்யூனிஸ்ட் சதி வழக்கு ஒன்றை நடத்தியது. அதாவது அவர்கள் ஆங்கிலேய அரசாங்கத்தை சதி செய்து கவிழ்க்க முயற்சித்தார்கள் என்று கூறி இந்த வழக்கு தொடரப்பட்டது. இந்த வழக்கு நான்காண்டு காலம் நடைபெற்றது. இறுதியில் முசாபர் அகமதுவுக்கு ஆயுள் தண்டனையும், இதரர்களுக்கு வெவ்வேறு கால தண்டனையும் விதிக்கப்பட்டது. மேல்முறையீட்டில்

முசாபருக்கும் மற்றவருக்கும் தண்டனை குறைக்கப்பட்டு 1934 ஆம் ஆண்டில் அனைவரும் விடுதலையானார்கள்.

பின்னர் கல்கத்தா வந்த முசாபர் தொழிற்சங்க இயக்கத்தை உருவாக்குவதிலும், விவசாய சங்கத்தை உருவாக்குவதிலும் கம்யூனிஸ்ட் கட்சியை பலப்படுத்துவதிலும் தன் நேரத்தைச் செலவிட்டார். ஏராளமான கட்சி ஊழியர்களை உருவாக்கினார். 1948ஆம் ஆண்டில் கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்டபோது, கைது செய்யப்பட்ட அவர், 1951ஆம் ஆண்டில்தான் விடுதலையானார். ஒன்றுபட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் 110 பேர் கொண்ட தேசிய கவுன்சிலின் உறுப்பினராக 1964ஆம் ஆண்டு வரை செயல்பட்டார். 1962ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் இந்திய- சீன எல்லை மோதல் ஏற்பட்ட போது முசாபர் ஆறு மாத காலம் சிறையில் இருந்தார். 1964 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் கம்யூனிஸ்ட் கட்சி அரசியல் தத்துவார்த்த மாறுபாடு காரணமாக இரண்டாக உடைந்தபோது அவர் சுந்தரய்யா, ஜோதிபாசு, புரமோத்தாஸ் குப்தா, இஎம்எஸ் போன்ற தோழர்களுடன் சேர்ந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கினார். அதே ஆண்டு அக்டோபர் மாதத்தில் கைது செய்யப்பட்ட அவர் 16மாதம் கழித்துத்தான் விடுதலை செய்யப்பட்டார்.

தன் இறுதிக் காலம் வரை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் குழு உறுப்பினராக இருந்த அவர் 1973 ஆம் ஆண்டு டிசம்பர் 8ஆம் தேதி காலையில் காலமானார். அன்று மாலை கல்கத்தாவில் நடைபெற்ற அவரது இறுதி ஊர்வலத்தில் லட்சக்கணக்கான மக்கள் பங்கேற்றனர். தோழர்

முசாபர் அகமது அவர்களின் அற்புதமான கம்யூனிஸ்ட் பங்களிப்பை அவரது சக தோழர் ஜோதிபாசு விவரிக்கிறார்:

“வாழ்நாள் முழுவதும் கடினமான சூழ்நிலையில் பெரும் கஷ்டங்களுக்கிடையே கட்சியை உருவாக்கும் பணியில் அவர் ஈடுபட நேர்ந்தது. இதன் காரணமாக அடிக்கடி அவரது ஆரோக்கியம் கெடும். எவ்வளவோ கஷ்டங்களை அவர் அனுபவித்திருக்கிறார். ஆனால் ஒரு போதும் அவர் சலனமடைந்து நான் பார்த்ததில்லை. அவரிடம் ஒருபோதும் தயக்கம் அல்லது நிச்சயமற்ற மனநிலை இருந்ததில்லை. அவர் மிகவும் நிதான தன்மையுள்ள மனிதர். தாம் சரியென்று கருதுவதைத் தயக்கமின்றிச் செய்வார். வெளிப்படையாகச் சொல்வார். அவரது செயல்பாடும் அப்பழுக்கின்றி இருக்கும். கம்யூனிஸ்ட் இயக்கத்தில் இப்போது ஏற்பட்டுள்ள பெரும் முன்னேற்றத்திற்கான அடித்தளம் அமைப்பதில் தோழர் முசாபர் அகமதுவின் பங்களிப்பு, தியாகம், முயற்சிதான் முதலில் என் நினைவுக்கு வருகிறது.”

# எஸ்.ஏ.டாங்கே

- என்.ராமகிருஷ்ணன்

-அக்டோபர் 24, 2019




…

இந்திய கம்யூனிஸ்ட் இயக்க முன்னோடிகள் - 3

இந்தியத் தொழிற்சங்க இயக்கத்தின் தொட்டில் (Cradle of Indian Trade Union Movement) என்று கூறப்படும் பம்பாய் நகரின் தொட்டிலை உருவாக்கியதில் கணிசமான பங்கு எஸ்.ஏ.டாங்கே அவர்களுக்கு உண்டு. சுதந்திரப்

போராட்ட வீரர், கம்யூனிஸ்ட் தலைவர், பிரபலமான தொழிற்சங்கத் தலைவர், இலக்கியவாதி, எழுத்தாளர், சிறந்த நாடாளுமன்றவாதி மற்றும் சிறந்த பேச்சாளர் என்ற பல்வேறு திறன் படைத்த ஸ்ரீபாத அம்ருத் டாங்கே என்ற எஸ்.ஏ.டாங்கே 1899ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 10ஆம் தேதி மகாராஷ்டிரா மாநிலம் நாசிக் நகரில் பிறந்தார்.

அவர் 1919ஆம் ஆண்டு பம்பாய் வில்சன் கல்லூரியில் படிக்க ஆரம்பித்தபோது, அங்கே மராத்தி இலக்கியக் கழகத்தை துவக்கினார். மகாத்மா காந்தி தலைமையிலான தேசிய இயக்கத்தால் ஈர்க்கப்பட்ட டாங்கே அதில் தீவிர பங்குகொண்டார். வெளிநாட்டில் வாழும்படி நிர்ப்பந்திக்கப்பட்ட பிரபல காங்கிரஸ் தலைவர் லாலா லஜபதிராய் இந்தியா திரும்பியபோது அவருக்கு பம்பாயில் பிரபல காங்கிரஸ் தலைவர் பாலகங்காதர திலகர் தலைமையில் டாங்கே ஒரு மாபெரும் வரவேற்புக்கு ஏற்பாடு செய்தார். இதைக் கண்ட கல்லூரி நிர்வாகம் அவரை 1920ஆம் ஆண்டு அதிலிருந்து வெளியேற்றியது. இதே சமயத்தில் டாங்கே பத்திரிகைகளில் வெளி வந்து கொண்டிருந்த ரஷ்யப் புரட்சி அரசாங்கத்தின் செயல்பாடுகள், லெனினைப் பற்றிய தகவல்கள், அனைத்தையும் படித்து ‘லெனினுக்கும் காந்திக்கும் உள்ள வித்தியாசம்’ என்று ஒரு சிறு பிரசுரம் எழுதினார். அதில் ஒரு பக்கம் காந்தியின் அணுகுமுறையையும், மறுபக்கம் லெனினின் அணுகுமுறையையும் தான் புரிந்து கொண்ட அளவுக்கு டாங்கே எழுதியிருந்தார். இது அவரை மிகவும் பிரபலமாக்கியது.

சர்வதேச அளவிலும் இப்பிரசுரம் பற்றி பேசப்பட்டதாக தகவல்கள் கூறுகின்றன. படிப்படியாக மார்க்சியம்தான் சிறந்தது என்ற முடிவுக்கு வந்த

டாங்கே அதுகுறித்து கிடைத்த புத்தகங்களை எல்லாம் படிக்க ஆரம்பித்தார். இச்சமயத்தில் என்.என்.ராயும் ரஷ்யாவிலிருந்து அவருடன் தொடர்பு கொண்டார். 1922ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் 'சோசலிஸ்ட்' என்ற ஏட்டை டாங்கே வெளியிட்டார். இதன்பின் அவ்வாண்டு நவம்பர் 7ஆம் தேதி ரஷ்யாவின் பெட்ரோ கிராடு நகரில் கம்யூனிஸ்ட் அகிலத்தின் மாநாடு நடைபெற்றது. அதில் கலந்து கொள்ளும்படி டாங்கே அழைக்கப்பட்டார். ஆனால் அவர் அங்கே செல்ல இயலவில்லை. இக்காலகட்டத்தில் அவருக்கு சென்னையின் மார்க்சிய அறிஞர் சிங்காரவேலருடன் தொடர்பு கிடைத்தது. அவர் உருவாக்கிய தொழிலாளி- விவசாயி கட்சிக்கு டாங்கே ஆதரவளித்தார். 1922ஆம் ஆண்டில் கயா நகரில் நடைபெற்ற காங்கிரஸ் கட்சி மாநாட்டில் சிங்காரவேலரும், டாங்கேயும் சேர்ந்து எம்.என்.ராய் உருவாக்கியிருந்த முதல் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் திட்டத்தை அங்கே பிரதிநிதிகளுக்கு விநியோகித்தனர்.

இந்தியாவில் கம்யூனிஸ கருத்துக்கள் பரவுவதைக் கண்டு ஆத்திரமடைந்த ஆங்கிலேய அரசு ஒரு அதிரடி நடவடிக்கை எடுத்தது. இதைத் தொடர்ந்து முசாபர் அகமது, டாங்கே, சௌகத் உஸ்மாணி, நளினி குப்தா ஆகிய நால்வரையும் கைது செய்து கான்பூர் கம்யூனிஸ்ட் சதி வழக்கை நடத்தியது. இந்த வழக்கில் டாங்கேக்கு நான்காண்டு கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டு அவர் சீத்தாபூர் சிறைக்கு அனுப்பப்பட்டார். பின்னர் பம்பாய் ஆர்தர்ரோடு சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டார். தண்டனை முடிந்து 1927ஆம் ஆண்டு மே மாதம் 24ஆம் தேதி விடுதலையான அவருக்கு சிறை வாயிலில் பிரபல காங்கிரஸ் தலைவர்கள் சரோஜினி

நாயுடுவும், சௌகத் அலியும் மற்றும் ஏராளமான தொழிலாளிகளும் பெரும் வரவேற்பு கொடுத்தனர். அதே ஆண்டில் டாங்கே, செவிலியரான இளம் விதவை உஷாதாய் பாவே என்பவரை திருமணம் செய்து கொண்டார்.

1928ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 16ஆம் தேதி துவங்கிய ஆறுமாத காலம் நீண்ட பம்பாய் ஜவுளி ஆலை தொழிலாளிகள் மாபெரும் வேலை நிறுத்தத்தை அவர் தலைமை தாங்கி நடத்தினார். இதைத் தொடர்ந்து கிர்ணி காம்கார் சங்கம் (ஜவுளி ஆலைத் தொழிலாளர் சங்கம்) என்ற ஆசியாவிலேயே மிகப்பெரிய சங்கத்தை டாங்கே உருவாக்கினார். பின்னர் மராத்தி மொழியில் கிராந்தி (புரட்சி) என்ற சோசலிச ஏட்டை தன்னை ஆசிரியராகக் கொண்டு டாங்கே வெளியிட்டார். இந்தியாவின் பிரபல பேச்சாளர்களுள் ஒருவரான டாங்கே இந்தி, மராட்டி மொழிகளில் மிக எளிய முறையில் பம்பாய் தொழிலாளிகளுக்கு வர்க்கப் போராட்டத்தை விவரித்து அவர்களை ஈர்த்தார். இது அவரை பம்பாய் தொழிலாளி வர்க்கத்தின் மிகப் பிரபலமான தலைவராக்கியது. பம்பாயில் கம்யூனிஸ்ட் தொழிற்சங்க இயக்கம் பல்லாயிரக்கணக்கான தொழிலாளிகளைக் கொண்டு பலமடைந்து வருவதையும், நீண்ட காலம் நீடித்த வேலைநிறுத்தத்தை நடத்தியதையும் கண்டு கவலை கொண்ட ஆங்கிலேய அரசாங்கம் இளம் கம்யூனிஸ்ட்டுகள் மீது மீண்டும் ஒரு கடும் தாக்குதலைத் தொடுக்க திட்டமிட்டது. அதுதான் 1929ஆம் ஆண்டின் மீரட் சதிவழக்கு. இதில் டாங்கே, முசாபர் அகமது, பி.சி.ஜோஷி, டாக்டர் ஜி.அதிகாரி,

எஸ்.எஸ். மிராஜ்கர் உள்ளிட்டு 31 பேரை கைது செய்து மீரட் என்ற சிறிய நகரில் உள்ள சிறைச்சாலையில் அடைத்து சதி வழக்கை நடத்தியது.

இச்சமயத்தில் ஒரு சம்பவம் நடைபெற்றது. அக்டோபர் 27ஆம் தேதியன்று மகாத்மா காந்தி மீரட் சிறைச்சாலைக்கு வந்து அங்கிருந்த கம்யூனிஸ்ட்டுகளைச் சந்தித்தார். தான் துவக்கப்போகும் புதிய இயக்கத்திற்கு கம்யூனிஸ்ட்டுகள் ஆதரவு தர வேண்டுமென கேட்டுக் கொண்டார். அச்சமயத்தில் கம்யூனிஸ்ட்டுகள் சார்பாக டாங்கே எழுந்து ஒரு கேள்வி கேட்டார். 1920ஆம் ஆண்டின் ஒத்துழையாமை இயக்கம் பலமாக நடைபெற்று வரும் போது, சௌரி சௌரா என்ற இடத்தில் நடைபெற்ற ஒரு சம்பவத்தை வைத்து நீங்கள் அந்த இயக்கத்தையே நிறுத்தியதுபோல் இப்பொழுதும் ஏதாவது சம்பவம் ஏற்பட்டால் நிறுத்தி விடுவீர்களா? என்று டாங்கே ஒரு கேள்வியைக் கேட்கவும், காந்தி பதில் கூறினார்: ‘அவ்வாறு ஏதாவது சிறு சம்பவம் ஏற்பட்டால் நான் இந்த இயக்கத்தை நிறுத்தி விடமாட்டேன்’ என்று மகாத்மா காந்தி உறுதி கூறினார். அதைக் கேட்ட கம்யூனிஸ்ட்கள் உங்கள் இயக்கத்திற்கு எங்கள் முழு ஆதரவும் உண்டு என்று உறுதி கூறினர். இந்த வழக்கு நீண்ட காலம் நடக்கப்போகும் வழக்கு என்று முசாபர் அகமது கூறியதைக் கேட்ட கம்யூனிஸ்ட்டுகள் ஜெர்மனியின் கொலோன் நீதிமன்றத்தில் மார்க்சும், ஏங்கெல்சும் அந்த நீதிமன்றத்தைப் பயன்படுத்தி கம்யூனிசப் பிரச்சாரம் செய்ததுபோல இங்கேயும் செய்வது என முடிவு செய்தனர். டாங்கே உள்ளிட்டு பலரும் தனித்தனியாக வாக்குமூலம் கொடுத்தனர். டாங்கே 1931ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 26ஆம் தேதி முதல் 1932ஆம் ஆண்டு

ஜனவரி மாதம் 5ஆம் தேதி வரை வாக்குமூலம் கொடுத்தார். இதில் உலக நிலைமை, இந்திய அரசியல் நிலைமை, தொழிலாளி வர்க்கத்தின் போராட்டம், கம்யூனிஸ்ட்டுகளின் லட்சியம் போன்றவற்றை விளக்கி இந்த வாக்குமூலம் கொடுத்தார். அவருடைய வாக்குமூலம் 507 முழு பக்கங்களைக் கொண்ட ஆவணமாக உள்ளது. இறுதியில் 1933ஆம் ஆண்டில் நீதிமன்றம் அவருக்கு 12 ஆண்டுகால கடுங்காவல் தண்டனை விதித்தது. மேல்முறையீட்டில் அது 3 ஆண்டுகளாகக் குறைக்கப்பட்டது. சிந்து மாகாணத்தில் உள்ள ஹைதராபாத் நகரின் சிறைச்சாலையில் அடைக்கப்பட்ட அவர் 1935ஆம் ஆண்டு மே மாதம் விடுதலையாகி வெளிவந்தார். அவருக்கு பம்பாயில் மாபெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது.

பெரோஸ்பூர் காங்கிரஸ் மாநாட்டில் டாங்கே மிகப் பெரும் காங்கிரஸ் தலைவரான சங்கர் ராவ் தேவ்வை தோற்கடித்து அகில இந்திய காங்கிரஸ் குழுவின் உறுப்பினராக வெற்றி பெற்றார். 1938ஆம் ஆண்டில் அவர் கிர்னி காம்கார் சங்கத்தின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1939ஆம் ஆண்டு ஏப்ரல் 11ஆம் தேதியன்று பம்பாய் போனிக்ஸ் மில்லில் பெரும் வேலைநிறுத்தம் டாங்கே தலைமையில் நடைபெற்றது. இதில் தான் முதன் முறையாக முதலாளியை சுற்றி வளைக்கும் போராட்டம் (கேரோ) நடைபெற்றது. இதில் டாங்கே கைது செய்யப்பட்டு அவருக்கு ஆறு மாதம் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது. முதல் கேரோ போராட்டத்தை இந்தியாவில் முதலில் நடத்தியது டாங்கேயே ஆவார்.

1939ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 1ஆம் தேதி இரண்டாவது உலக யுத்தம் துவங்கியது. இது ஏகாதிபத்திய யுத்தம், இதை எதிர்க்க வேண்டும் என்று தலைமறைவாகச் செயல்பட்டு வந்த கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல் விடுத்தது. இதைத் தொடர்ந்து அக்டோபர் 2ஆம் தேதியன்று பம்பாயில் லட்சக்கணக்கான தொழிலாளிகள் பங்கேற்ற மாபெரும் யுத்த - எதிர்ப்பு வேலைநிறுத்தம் நடைபெற்றது. இதில் டாங்கேயின் பங்கு மிகப்பெரியது. இதைத் தொடர்ந்து ஆங்கிலேய அரசாங்கம் டாங்கேயையும் இதர தலைவர்களையும் கைது செய்து ராஜஸ்தானில் உள்ள தியோலி முகாம் சிறையில் அடைத்தது. அவருடன் பி.டி.ரணதிவே, ஜெயப்பிரகாஷ் நாராயணன், ஹர்கிசன் சிங் சுர்ஜித், ராகுல் சாங்கிருத்தியாயன், சென்னை கம்யூனிஸ்ட் தலைவர் ஏ.எஸ்.கே. (ஐயங்கார்) போன்ற ஏராளமானோரை அடைத்தது. அங்கிருக்கும் பொழுதுதான் டாங்கே தன் புகழ்பெற்ற நூலான பண்டைக் கால இந்தியா என்ற நூலை எழுத ஆரம்பித்தார். சிறிது காலத்திற்குப் பிறகு டாங்கேயும், பி.டி.ரணதிவேயும் ஆஜ்மீர் சிறைச்சாலைக்கு மாற்றப்பட்டனர். அங்கே இருவரும் கை ரேகை பதிய மறுத்ததால் தனிமைச் சிறையில் அடைக்கப்பட்டனர். 1943ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் அனைத்து கம்யூனிஸ்ட்டுகளும் விடுதலையாயினர். அவ்வாண்டு மே மாதம் 1ஆம் தேதி நடைபெற்ற அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் (ஏஐடியுசி) மாநாட்டில் டாங்கே அதன் அகில இந்தியத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதே மே மாதம் 22ஆம் தேதி பம்பாயில் நடைபெற்ற அகில இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் மாநாட்டிற்கு அவர் தலைமை வகித்து இலக்கியமும் மக்களும்

என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார். அது தனிப்புத்தகமாகவே வந்துள்ளது.

1946 ஆம் ஆண்டு நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலில் அவர் பம்பாய் ஜவுளித் தொழிலாளர் தொகுதியிலிருந்து பம்பாய் சட்டமன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்டார். அங்கே அவர் தொழில் தகராறு மசோதா குறித்து ஆற்றிய உரை வரலாற்று பிரசித்தமானது. சிறிது காலத்திற்குப் பிறகு மராத்தி சாகித்ய சம்மேளனம் நடத்திய மாநாட்டிற்கு தலைமையேற்று மராத்தி இலக்கிய வரலாறு என்ற தலைப்பில் பேருரை நிகழ்த்தினார். 1948ஆம் ஆண்டு மார்ச் மாதம் மத்திய காங்கிரஸ் அரசாங்கம் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியையும், அதன் சார்பு தொழிற்சங்க, விவசாயிகள் சங்க அமைப்புகள் போன்றவற்றையும் தடை செய்தது. ஆயிரக்கணக்கான கம்யூனிஸ்ட்டுகளைக் கைது செய்து பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் சிறையிலடைத்தது. டாங்கேயும் கைது செய்யப்பட்டு அடுத்த இரண்டு ஆண்டு காலம் ஆர்தர்ரோடு சிறைச்சாலை, எரவாடா சிறைச்சாலை, புனே மத்திய சிறை மற்றும் நாசிக் மத்திய சிறை போன்றவற்றில் அடைக்கப்பட்டார். சிறைச்சாலையில் நடைபெற்ற தடியடிக்கும் ஆளானார். 1950 ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் அவர் பம்பாய் உயர்நீதிமன்றத்தில் ஆள்கொணர்வு மனுவை (ஹேபிஎஸ் கார்பஸ் மனுவை) தாக்கல் செய்து விடுதலையானார். அச்சமயத்தில் கம்யூனிஸ்ட் கட்சிக்குள் நடைமுறை கொள்கை குறித்து பல்வேறு கருத்தோட்டங்கள் நிலவின. எனவே கட்சியின் மத்தியக்குழு, சோவியத் கட்சித் தலைவர் ஜே.வி.ஸ்டாலினைச் சந்தித்து யோசனை கேட்பதென முடிவு செய்தது. அதன் பொருட்டு

எஸ்.ஏ.டாங்கே, அஜய் கோஷ், சி.ராஜேஸ்வரராவ் மற்றும் எம்.பசவபுன்னையா ஆகிய நால்வர் கொண்ட குழுவை மாஸ்கோவிற்கு அனுப்பியது. அவர்கள் ஸ்டாலினை சந்தித்து நாடு திரும்பினர்.

1956ஆம் ஆண்டில் குஜராத்தும், மகாராஷ்டிரமும் ஒன்றாக இருந்த பம்பாய் மாகாணத்தைப் பிரித்து மகாராஷ்டிராவை தனி மாநிலமாக்க வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சியும், இதர ஜனநாயக கட்சிகளும் கோரின. இதன் பொருட்டு அக்கட்சிகளும் டாக்டர் அம்பேத்கரும் சேர்ந்து சம்யுக்த மகாராஷ்டிரா சமிதி என்ற அமைப்பை உருவாக்கி பெரும் போராட்டங்களை நடத்தினர். இந்த அமைப்புக்குத் தலைவராக டாங்கே செயல்பட்டார். இப்போராட்டத்தில் ஏராளமான பேர் சுட்டுக் கொல்லப்பட்டனர். டாங்கே கைது செய்யப்பட்டு எட்டு மாத காலம் சிறையிலடைக்கப்பட்டார். இறுதியில் இந்தப் போராட்டம் வெற்றி பெற்று மகாராஷ்டிரா மாநிலம் தனியாக அமைக்கப்பட்டது. 1957ஆம் ஆண்டு மார்ச் மாதம் நடைபெற்ற இரண்டாவது பொதுத் தேர்தலில் டாங்கே பம்பாய் தொகுதி ஒன்றிலிருந்து நாட்டிலேயே மிக அதிக வாக்குகள் பெற்று வெற்றி பெற்றார். நாடாளுமன்றத்தில் கம்யூனிஸ்ட் கட்சிக்குழுவின் தலைவராகவும், மக்களவையில் எதிர்க்கட்சித் தலைவராகவும் செயல்பட்டார். உழைக்கும் மக்கள் பிரச்சனைகள் குறித்து மிக அற்புதமான உரைகள் ஆற்றினார். அச்சமயத்தில் இஎம்எஸ் நம்பூதிரிபாத் தலைமையில் செயல்பட்டு வந்த முதல் கேரள கம்யூனிஸ்ட் அரசாங்கத்தை கவிழ்ப்பதற்காக பிரதமர் நேருவின் மகள் இந்திராகாந்தி அசுரத் தனமாக செயல்பட்டு வந்தார். கேரளாவிலிருந்த சாதிய மதவாத சக்திகளுடன்

சேர்ந்து கொண்டு அந்த அரசாங்கத்தை கவிழ்ப்பதற்காக அடிக்கடி அங்கே சென்று குழப்பம் ஏற்படுத்தி வந்தார். மக்களவையிலும், வெளியிலும் டாங்கே, இந்திராகாந்தியின் போக்கை கடுமையாக கண்டித்துப் பேசினார். மக்களவையில் 1959ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் 'கேரள சதி' என்பது குறித்து டாங்கே ஆவேசமிக்க உரை நிகழ்த்தினார். நேருவின் மகள் என்ற தகுதியை மட்டும் வைத்துக் கொண்டு இந்திராகாந்தி ஆவேசமாக அந்த அரசாங்கத்தைத் தாக்கி வருவதை அவர் இரண்டே வரிகளில் அம்பலப்படுத்தினார். 'அறிவு என்பது பரம்பரையாக வருவது அல்ல' (wisdom is not hereditary) என்று கிண்டலாகக் கூறி இந்திராகாந்தி விவேகமற்றவர் என்பதை சுட்டிக்காட்டினார். இந்தச் சொற்றொடர் பல காலம் பலரால் மேற்கோள் காட்டப்பட்டது.

1962ஆம் ஆண்டில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளராக இருந்த அஜய்கோஷ் மரணமடைந்ததைத் தொடர்ந்து ஹைதராபாத்தில் நடைபெற்ற கம்யூனிஸ்ட் கட்சியின் உயர்மட்ட அமைப்பான தேசிய கவுன்சில் ஒரு மாற்றத்தைச் செய்தது. புதிதாக தலைவர் என்ற பதவியை டாங்கேவுக்காக உருவாக்கியது. கட்சியின் பொதுச் செயலாளராக இஎம்எஸ் நம்பூதிரிபாத்தைத் தேர்ந்தெடுத்தது. 1964 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தத்துவார்த்த ரீதியில் கருத்து மாறுபாடு ஏற்பட்டு இரண்டாக உடைந்தது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உருவானது. டாங்கே தொடர்ந்து இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவராக பல ஆண்டுகள் செயல்பட்டார். ஆனால் 1981ஆம் ஆண்டு அக்கட்சியின் முடிவை மீறியதால் டாங்கே அக்கட்சியிலிருந்து

நீக்கப்பட்டார். தமிழக கம்யூனிஸ்ட் தலைவர் எம்.கல்யாண சுந்தரம், தேஷ்பாண்டே போன்றோருடன் இணைந்து இந்தியன் கம்யூனிஸ்ட் கட்சியை (ஐசிபி) உருவாக்கினார். அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1989ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் முதல் நோய்வாய்ப்பட்ட டாங்கே பம்பாய் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். அச்சமயத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் இஎம்எஸ் நம்பூதிரிபாத் அந்த மருத்துவமனைக்குச் சென்று அவர் உடல் நலம் பற்றி விசாரித்தார். நீண்ட சிகிச்சை பலனின்றி 1990 ஆம் ஆண்டு மே மாதம் 22ஆம் தேதி டாங்கே காலமானார். என்.எம்.ஜோஷி, வி.வி.கிரி, பி.பி.வாடியா மற்றும் சக்கரைச் செட்டியார் போன்ற இந்திய முதல் தலைமுறை தொழிற்சங்கத் தலைவர்கள் பெயருடன் எஸ்.ஏ.டாங்கேயின் பெயரும் நீடித்திருக்கும்.

# கலிபாவிற்காகப் போராடிய மாபெரும் கிலாபத் இயக்கம்

- என்.ராமகிருஷ்ணன்

-அக்டோபர் 25, 2019







…

1910ஆம் ஆண்டுகளின் பிற்பகுதியிலும், 1920ஆம் ஆண்டுகளின் முற்பகுதியிலும் இந்திய நாட்டின் அரசியல் வாழ்வில் ஒரு திருப்பு முனை ஏற்பட்டது. இதுதான் வரலாற்றுப் பிரசித்தி பெற்ற கிலாபத் இயக்கம்.

அதற்கு ஒரு நீண்ட பின்னணி உண்டு. 1914ஆம் ஆண்டு ஜூலை மாதம் 28ஆம் தேதி முதல் உலக யுத்தம் துவங்கியது. இதில் இரண்டு அணிகள் மோதின. ஒரு அணி ரஷ்யா, இங்கிலாந்து, பிரான்ஸ், இத்தாலி, அமெரிக்கா ஆகிய நாடுகள் சேர்ந்தது. இதற்கு எதிரான அணி ஆஸ்திரியா ஹங்கேரி, ஜெர்மன் நாடு, ஆட்டோமான் பேரரசு என்ற துருக்கி, பல்கேரியா போன்ற நாடுகளாகும். பல லட்சக்கணக்கான உயிர்களைப் பலி கொண்ட இந்த முதல் போர் 1918ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 11ஆம் தேதியன்று முடிவுற்றது. இதில் இங்கிலாந்து அணி வெற்றி பெற்றது. ஜெர்மன் அணி தோற்றது. இதன் விளைவாக ஜெர்மன் நாடு ஏராளமான நிலப்பகுதிகளை இழந்தது. வெற்றி பெற்ற இங்கிலாந்து நாட்டு அணி ஆட்டோமான் பேரரசு என்று அழைக்கப்பட்ட துருக்கி நாட்டை உடைத்து பல பகுதிகளாக்கி கைப்பற்றிக் கொண்டது. இங்கிலாந்து நாடு துருக்கியைப் பழிவாங்க வேறொரு காரியத்தையும் செய்தது. துருக்கி நாட்டின் தலைவரான கலிபாவை வீட்டுக் காவலில் வைத்தது. இது உலகம் முழுவதும் இருந்த முஸ்லிம் மக்களை கொதித்தெழ வைத்தது. ஏனென்றால் துருக்கி கலிபாதான் உலக முஸ்லிம்களின் தலைவர். கொந்தளித்தெழுந்த முஸ்லிம் மக்கள் மீண்டும் கலிபாவை அதிகாரத்தில் உட்கார வைப்பதற்காக, அவர் பொருட்டு ஆயுதமேந்திப் போராட தயாரானார்கள்.

ஒவ்வொரு நாட்டிலும் இத்தகைய குழுக்கள் உருவாக்கப்பட்டன. அந்தக் குழுக்கள் துருக்கியை நோக்கி கலிபாவிற்காக யுத்தம் நடத்தச் சென்றன. இந்தியாவிலும், கலிபாவிற்காக ஆயுதமேந்திப் போராட குழுக்கள் உருவாயின. அது பெரும் இயக்கமாகவே உருவெடுத்தது. இதுதான்

புகழ்பெற்ற கிலாபத் இயக்கம். இச்சமயத்தில் இந்தியாவின் தேசிய இயக்கத்திற்குத் தலைமை தாங்கி வழிகாட்டி வந்த மகாத்மா காந்தி இந்த நிலைமையைக் கண்டு ஒரு முடிவெடுத்தார். தேசிய இயக்கத்தில் முஸ்லிம் மக்களையும் பெருமளவில் ஈர்க்க வேண்டுமென்று கருதி வந்த அவர், இப்பொழுது கிலாபத் இயக்கத்திற்கு காங்கிரஸ் கட்சியின் முழு ஆதரவும் உண்டு என்று பகிரங்கமாக அறிவித்தார். இது இந்திய முஸ்லிம் மக்களை மகிழ்ச்சிக்குள்ளாக்கியது. இதைத் தொடர்ந்து இந்தியக் கிலாபத் குழுவின் தலைவராக மகாத்மா காந்தி தேர்ந்தெடுக்கப்பட்டார். காங்கிரஸ் இயக்கம்-கிலாபத் இயக்கம் இரண்டும் சேர்ந்து தேசியப் போராட்டத்திற்கு ஒரு உத்வேகம் கொடுத்தது. ஏராளமான முஸ்லிம் மக்கள் காங்கிரஸ் இயக்கத்துடன் நெருங்கி வந்தனர். மற்ற நாடுகளைப் போலவே இந்தியாவிலிருந்தும் ஏராளமான முஸ்லிம் மக்கள் துருக்கியை நோக்கிச் செல்ல ஆரம்பித்தனர். இவர்கள் முகாஜிர்கள் என அழைக்கப்பட்டனர். அதாவது பிறந்தநாட்டைத் துறந்து பிற நாடுகளில் தஞ்சம் புகுந்தவர்கள் என்பதாகும். இவர்கள் துருக்கி செல்வதற்கு இந்தியாவிலிருந்து ஆப்கானிஸ்தான் சென்று, அங்கிருந்து துருக்கி நோக்கி செல்ல வேண்டும். ஆப்கானிஸ்தான் முஸ்லிம் மன்னர் துருக்கி கலிபா மீது மிகுந்த பற்றுக் கொண்டவர்.

துருக்கி செல்லும் போராட்டக்காரர்கள் ஒவ்வொருவருக்கும் அதேபோன்று துருக்கியிலிருந்து திரும்பும் ஒவ்வொரு போராட்டக்காரருக்கும் வழிச் செலவுக்காக ஒரு தங்கக் காசு கொடுப்பார். இவ்வாறு போராட்ட உணர்வு படைத்த இந்திய முஸ்லிம் மக்கள் ஆப்கானிஸ்தான் வழியாகச் செல்வதை

அறிந்த மாஸ்கோவிலிருந்த கம்யூனிஸ்ட் அகிலத் தலைவர்கள் ஒரு ஏற்பாட்டைச் செய்தனர். கம்யூனிஸ்ட் அகிலத்தைச் சேர்ந்த ஊழியர்கள் பலர் ஆப்கானிஸ்தான் தலைநகரான காபூலில் முகாமிட்டனர். இந்த முகாஜிர்கள் காபூல் வழியாகச் செல்லும் போது அகிலத்தின் ஊழியர்கள் அவர்களைச் சந்தித்துப் பேசினர். பக்கத்தில் உள்ள ரஷ்ய நாடு லெனின் தலைமையில் புரட்சி அரசாங்கத்தை உருவாக்கியுள்ளது. நீங்கள் அங்கே சென்றால், உங்களுக்கு ஆயுதப் பயிற்சி அளிக்கப்படும், நீங்கள் துருக்கி சென்று போராட ஆயுதங்கள் கொடுக்கும் என்று அவர்களுக்கு கூறி, ஒரு யோசனையையும் கொடுத்தனர். “நீங்கள் ஏன் முதலில் ரஷ்யா சென்று அங்கே ஆயுதப் பயிற்சி பெற்று துருக்கிக்குச் செல்லக்கூடாது, அவ்வாறு செய்தால் நன்றாகப் போராடலாமே” என்று ஒரு யோசனை கூறினர். அதையேற்ற பல முகாஜிர்கள் அதற்குச் சம்மதித்து ரஷ்யாவை நோக்கிப் பயணமாயினர். அவர்கள் செல்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அகிலத் தோழர்கள் செய்தனர். பின் அவர்கள் தாஷ்கண்ட் சென்று அங்கே அவர்களுக்காக துவக்கப்பட்டிருந்த ராணுவப் பயிற்சியில் பயிற்சி பெற்று சிறிது காலத்திற்குப் பின்னர் மாஸ்கோ கிழக்கத்தியப் பல்கலைக்கழகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

1917ஆம் ஆண்டு ரஷ்யப் புரட்சி வெற்றி பெற்றபின் அந்நாட்டின் தலைவரான லெனின் கீழ்திசை நாடுகளின் சுதந்திரப் போராட்ட வீரர்களைத் திரட்டி அவர்களுக்கு ஏகாதிபத்திய - எதிர்ப்பு உணர்வையும், மார்க்சிய போதனையையும் அளித்து கம்யூனிஸ்டுகளாக்கி மீண்டும் அவர்கள் தங்கள் சொந்த நாட்டிற்குச் சென்று அங்கே மார்க்சியத்தைப்

பரப்பி கம்யூனிஸ்ட் கட்சிகளை உருவாக்குவதற்காக ஒரு ஏற்பாடு செய்தார். ‘கீழ்த்திசை பல்கலைக்கழகம்’ என்ற அமைப்பை உருவாக்கி அங்கே இத்தகைய போராட்ட வீரர்களுக்கு பயிற்சியளிக்க ஏற்பாடு செய்தார். அவர்களுக்கு மார்க்சியத் தத்துவார்த்தப் பயிற்சியுடன் இதர பயிற்சிகளும் அளிக்கப்பட்டன. இப்பொழுது இந்தியாவிலிருந்து சென்ற இந்த முகாஜிர்கள் அங்கே தங்கி பயிற்சி பெற ஆரம்பித்தனர். அவர்களுக்கு மார்க்சியம் மட்டுமல்ல, உலக வரலாறு, உலக நிலைமை, மக்கள் நிலைமை, ஏகாதிபத்தியம் குறித்து விளக்கம் அளிக்கப்பட்டது.

தேச விடுதலை, சோசலிசம் போன்றவை குறித்து எடுத்துக் கூறப்பட்டது. பல மாதங்களுக்கு அவர்கள் உலகைப் பற்றிய புதிய புரிதலுடன், மார்க்சிய தத்துவ தெளிவுடன், வர்க்கப் போராட்டம் என்பதுதான் மனித வாழ்வின் உந்துசக்தி என்ற புரிதலுடன், தங்கள் இந்திய நாட்டிற்குச் சென்று அங்கே மார்க்சியத்தைப் பரப்ப வேண்டும், கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்க வேண்டும் என்ற உணர்வுடன் இந்தியாவிற்குள் திரும்பி வர ஆரம்பித்தனர். கலிபாவிற்காகப் போராடச் சென்றவர்கள் கம்யூனிஸ்ட்டுகளாக தங்கள் பெஷாவர் மாகாணத்துக்கு திரும்பி வந்தனர். இந்தியாவின் ஆங்கிலேய அரசாங்கம் இந்த நிகழ்ச்சிப் போக்கைக் கண்டு ஆத்திரம் கொண்டது. ரஷ்யாவின் போல்ஷ்விக் கொள்கை இந்தியாவில் பரவி தங்கள் ஆட்சிக்கு சவால் விடும் என்று உணர்ந்த அந்த அரசாங்கம் மிகப் பெரும் தாக்குதலை இந்த கம்யூனிஸ்ட்டுகள் மீது தொடுத்து அவர்களை ஒழித்துக் கட்ட வேண்டுமென்று திட்டமிட்டது. அதுதான் இந்தியாவின் முதல் கம்யூனிஸ்ட் சதி வழக்கான பெஷாவர் சதிவழக்கு!

# நான்கு பெஷாவர் சதி வழக்குகள்

- என்.ராமகிருஷ்ணன்

-அக்டோபர் 26, 2019




…

ரஷ்யாவில் மார்க்சியப் பயிற்சி பெற்று இந்தியா திரும்பும் கம்யூனிஸ்டுகளை ஆரம்பத்திலேயே ஒடுக்கி விடுவதென்று தீர்மானித்த ஆங்கிலேய அரசாங்கம் தனது முதல் தாக்குதலை பெஷாவரில் துவங்கியது. மாஸ்கோவிலிருந்து இந்தியா திரும்ப முயன்றவர்களில் ஒருவர் முகமது அக்பர். அவரும் அவருடன் வந்த பகதூரும் பெஷாவர்

நகரை அடைய முயன்றபோது 1921 செப்டம்பர் 25ஆம் நாள் கைது செய்யப்பட்டனர். இவர்களுடன் முகமது அக்பரின் தந்தையார் ஹபீஸ்சுல்லாகானும் கைது செய்யப்பட்டார். இதுதான் பெஷாவர் சதி வழக்கு. இதற்கு தாஷ்கண்டிலிருந்த ராணுவப் பள்ளியில் முகமது அக்பர் பயின்றார் என்பதே முக்கிய ஆதாரமாகச் சொல்லப்பட்டது. அந்த வழக்கை விசாரித்த நீதிபதி பிரேசர் பின்வருமாறு கூறினார். “அமைக்கப்பட்ட அரசுகளையெல்லாம் அகற்றுவது என்பதே போல்ஷ்விக்குகளின் போக்கு என்பது ஒரு பொது அறிவு ஆகும். இந்த பொது அறிவினை வைத்தே தீர்ப்பினை வழங்க முடியும்…”

(அருணன் எழுதிய ‘இந்திய கம்யூனிச இயக்க வரலாறு’ நூலில் மேற்கோள்)

அகமது அக்பர்கான் (26 வயது), அவருடைய தந்தையார் ஹபீஸ்சுல்லாகான் (வயது 52) மற்றும் பகதூர் (வயது 18) ஆகிய மூவரும் பெஷாவர் சிறையில் அடைக்கப்பட்டனர். இம்மூவர் மீதும் இந்தியத் தண்டனைப் பிரிவுச்சட்டம் 121ஏயின் கீழ் சதி வழக்கு போடப்பட்டது. இச்சட்டப் பிரிவானது இங்கிலாந்து மன்னரும், பேரரசருமானவர் மீது யுத்தம் தொடுப்பதற்கு சதி செய்தனர் என்பனவாகும். ஜே.எச். பிரேசர் என்ற ஐ.சி.எஸ். அதிகாரியை நீதிபதியாகக் கொண்ட நீதிமன்றம் முகமது அக்பர்கானுக்கு மூன்றாண்டு கடுங் காவல் தண்டனையும், பகதூருக்கு ஓராண்டு கடுங் காவல் தண்டனையும் விதித்தது. ஹபீசுல்லாகான் மீதான குற்றம் நிரூபிக்கப்படவில்லை என்று கூறி அவர் விடுதலை செய்யப்பட்டார். இதுதான் முதல் பெஷாவர் சதிவழக்கு.

## இரண்டாவது பெஷாவர் சதி வழக்கு

முதல் பெஷாவர் சதி வழக்கில் தண்டனை விதிக்கப்பட்ட முகமது அக்பர்கான் மீதும் அவருடன் ஹாசன் மற்றும் குலாப் மகபூப் ஆகிய இருவரையும் சேர்த்து போடப்பட்ட வழக்குதான் இரண்டாவது பெஷாவர் சதிவழக்கு. குற்றச்சாட்டு என்ன? மூன்றாண்டு கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டு முகமது அக்பர்கான் சிறையிலிருந்தபோது அதிகாரிகளுக்கு தெரியாமலேயே வெளியில் உள்ளவர்களுக்கு ஏழு அல்லது எட்டுக் கடிதங்கள் அனுப்பினார் என்பதுதான். இந்தக் கடிதத்தை அந்த மாகாணத்திற்கு வெளியில் உள்ளவர்களுக்கு அனுப்பினார் என்றும், இது ராஜ துரோகம் என்றும் குற்றம் சாட்டப்பட்டது. இந்தக் கடிதங்கள் ஒரு ரயில் நிலைய மேடையில் நின்று கொண்டிருந்த குலாம் மகபூப் என்பவரிடமிருந்ததால் அவரும் கைது செய்யப்பட்டார். இந்தக் கடிதங்களை பணத்திற்காக நகல் எடுத்ததற்காக முகமது ஹாசன் கைது செய்யப்பட்டார்.

இப்பொழுது இந்த மூவர் மீதும் ராஜத் துரோக வழக்கு போடப்பட்டது. இதில் முகமது அக்பர்கானுக்கு 7 ஆண்டு கடுங் காவல் தண்டனையும், அதுவும் தனிமைச் சிறையில் மூன்று ஆண்டு வைக்கப்பட வேண்டுமென்று நீதிபதி பிரேசர் உத்தரவிட்டார். மற்ற இருவருக்கும் 5 ஆண்டு கடுங் காவல் தண்டனையும், இதில் அவர்கள் மூன்று மாதம் தனிமைச் சிறையில் அடைக்கப்பட வேண்டுமென்றும் உத்தரவிடப்பட்டது.

## மூன்றாவது சதி வழக்கு

இந்த மூன்றாவது பெஷாவர் சதி வழக்கு என்பது ‘மாஸ்கோ சதி வழக்கு’ என்ற பெயரிலும் அழைக்கப்பட்டது. இது 1922 - 23ஆம் ஆண்டுகளில் நடத்தப்பட்டது. இந்த வழக்கில் பின்வருபவர்கள் குற்றம் சாட்டப்பட்டார்கள்:

1. முகமது அக்பர் ஷா (23 வயது)
2. முகமது கவுகார் ரஹ்மான் கான் (27)
3. மீர் அப்துல் மஜித் (21)
4. ஹபீப் அகமது
5. ரபீக் அகமது (24)
6. சுல்தான் அகமது (24)
7. பெரோசுதீன் மன்சூர் (21)
8. அப்துல் காதிர்கான்

இந்தச் சதி வழக்கில் 1923ஆம் ஆண்டு மே 18ஆம் தேதி தீர்ப்பு வழங்கப்பட்டது. இதில் முகமது அக்பர்கான், கவுகார் ரஹ்மான்கான் ஆகிய இருவருக்கும் இரண்டாண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அப்துல் மஜீத், பெரோசுதீன் மன்சூர், ஹபீப் அகமது, ரபீக் அகமது, சுல்தான் அகமது ஆகிய ஐவருக்கும் ஓராண்டுக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அப்துல் காதிர்கான் விடுவிக்கப்பட்டார். பெரோசுதீன் மன்சூர் பின்னாட்களில் வடமேற்குப் பகுதியில் பிரபல கம்யூனிஸ்ட் தலைவராக விளங்கினார்.

நான்காவது பெஷாவர் சதி வழக்கு

தாஷ்கண்ட் நகரில் கூட்டப்பட்ட முதல் இந்தியக் கம்யூனிஸ்ட் குழுவின் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட முகமது ஷாபிக் 1923ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 10ஆம் தேதி பெஷாவருக்கு வந்தார். உடனே அவர் கைது செய்யப்பட்டு அவருக்கு மூன்றாண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. இந்தக் கம்யூனிஸ்ட்டுகளை ஏன் தண்டிக்கிறோம் என்பதற்கு அந்த நீதிபதி பிரேசர் கூறிய காரணம் பின்வருமாறு:

“உண்மையான கம்யூனிசக் கோட்பாட்டை
ஏற்றுக் கொண்டவர்கள் என்ற காரணத்தினால்
இவர்களுக்கு இந்த தண்டனை வழங்கப்படவில்லை.
மாறாக ராயும், போல்ஷ்விக்குகளும் பின்பற்றும்
கம்யூனிசத்தின் தூதுவர்கள் என்கிற
காரணத்தால்தான் இந்த தண்டனை!”

இந்திய நாட்டில் மார்க்சியத்தைப் பரப்புவது என்ற லட்சியத்தை மனதார ஏற்றுக் கொண்டு அப்பணியில் இறங்கிய இளம் முஸ்லிம் தோழர்கள் ஏற்றுக்கொண்ட தண்டனைகளும், சித்ரவதைகளும் கொடூரமானவை. இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கத்திற்காக எண்ணற்ற வேதனைகளையும் துன்பங்களையும் தாங்கி இந்திய மண்ணில் அதற்கு வித்திட்ட நமது இளம் முஸ்லிம் தோழர்களை கரம் உயர்த்தி வாழ்த்துவோம். அவர்தம் நினைவைப் போற்றுவோம்.

ஆதாரம் : முசாபர் அகமது எழுதிய
Myself and the Communist Party of India

# அமீர்ஹைதர்கான்

- ச.வீரமணி

-அக்டோபர் 27, 2019




…

இந்திய கம்யூனிஸ்ட் இயக்க முன்னோடிகள்

இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் நிறுவனத் தலைவர்களின் பட்டியலை எடுத்தோமானால் அவர்களில் பலர் மிகவும் வசதிபடைத்த நிலவுடைமையாளர்கள் குடும்பங்களிலிருந்து வந்தவர்களாக

இருப்பார்கள். தோழர்கள் இ.எம்.எஸ்., எம். பசவபுன்னையா, பி.சுந்தரய்யா, ஜோதிபாசு, பி.ராமமூர்த்தி போன்ற தலைவர்கள் எல்லாம் வசதியுடன் வாழ்ந்தவர்கள். இவர்கள் தங்கள் வசதியான குடும்பப் பின்னணியை உதறித்தள்ளிவிட்டு, கம்யூனிஸ்ட்டுகளாக மாறி கம்யூனிஸ்ட் இயக்கத்தைக் கட்டி வளர்த்தவர்கள்.
ஆனால் மிகவும் வறிய நிலையில் பிறந்து, வளர்ந்து, கம்யூனிஸ்ட் இயக்கத்தைக் கட்டி வளர்த்த தோழர்களும் உண்டு. அவர்களில் மிகவும் குறிப்பிடத்தக்க தோழர் அமீர் ஹைதர்கான். தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தைத் தோற்றுவித்தவர் அமீர் ஹைதர்கான்.

இன்றைய பாகிஸ்தானின் ராவல்பிண்டிக்கு அருகில் ஒரு குக்கிராமத்தில் பிறந்த அமீர் ஹைதர்கானின் பெற்றோர் கல்வியறிவற்ற ஏழை விவசாயிகள். அவரது தந்தை அமீர் ஹைதர்கான் சிறுவயதாக இருக்கும்போதே இறந்துவிட்டார். பின்னர் அவரது தாயார் இரண்டாம் திருமணம் செய்துகொள்கிறார். அமீர் ஹைதர்கான், தன்னுடைய மாற்றாந் தந்தையிடம் பட்ட கொடுமைகளை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாதவைகளாகும். ஆயினும் கல்வி கற்கும் தணியாத ஆவலால் அவர்வீட்டைவிட்டு வெளியேறி பல்வேறு சிரமங்களுக்கு ஆளானார். பம்பாயில் தெருவோரச் சிறுவர்களுடன் அவர் வசித்தபோது, கப்பலில் அவருக்கு வேலை கிடைத்தது. அவரது வாழ்க்கை அதன்பின்னர் தலைகீழாக மாறிவிட்டது. அமீர், தொழிலாளியாக மாறி தன் ஸ்தாபனத்திறமைகளை கப்பலிலேயே வெளிப்படுத்தினார். அமெரிக்காவில் சில காலம் வசித்தார். தன் கல்வித் தகுதிகளை வளர்த்துக்

கொண்டார். அமெரிக்காவில் அமெரிக்கத் தொழிலாளர் கட்சியுடன் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டார். அந்தக் கட்சி அவரை முழுமையான மார்க்சிய லெனினியக் கல்வி பயில்வதற்காக மாஸ்கோவிலிருந்த கீழைத் தொழிலாளர்கள் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பி வைத்தது. அங்கே கம்யூனிஸ்ட் அகிலத்துடன் தொடர்பு ஏற்பட்டது. கம்யூனிஸ்ட் அகிலத்தைச் சேர்ந்த தோழர்கள் அவரை நுட்பமாக விசாரணை செய்துவிட்டு, கம்யூனிஸ்ட் அகிலத்திற்குள் அவரை அனுமதித்தனர். அவர் பெயரையும் சகாரோவ் என்று மாற்றினார்கள்.

அமீர் ஹைதர்கான் ரஷ்யாவில் இருந்த சமயங்களில் கம்யூனிஸ்ட் அகிலத் தலைவர்களிடம் தாங்கள் சீனத்தில் கட்சியைக் கட்டி எழுப்புவதற்கு உதவி செய்யக்கூடிய அளவிற்கு அதற்கு இணையாக இருக்கின்ற இந்தியாவிற்கு ஏன் உதவி செய்வதில்லை என்று சண்டை போட்டிருக்கிறார். அவ்வாறு சண்டை போட்டபோதுதான் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி, சீனத்திற்கு உதவுவது போலவே இந்தியாவிற்கும் உதவி வந்திருக்கிறது என்பதையும், ஆனால் அந்த உதவிகள் சரியான விதத்தில் சரியான தலைவர்களிடம் இந்தியாவிற்கு வந்து சேரவில்லை என்பதையும் அவர் உணர்ந்தார். பின்னர் அவரையே சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி இந்தியாவிற்கு அனுப்பி வைத்தது. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி, 1920இல் தாஷ்கண்டில் அமைக்கப்பட்டது. அதில் எம்.என்.ராய், எவ்லின் டிரெண்ட்ராய், அபனி முகர்ஜி, ரோசா ஃபிட்டிங்கோவ், முகமது அலி, முகமது சபீக், எம்.பி.பி.டி.ஆச்சார்யா ஆகியோர் உறுப்பினர்களாக இருந்தார்கள். முகமது சஃபீக் செயலாளராகத் தேர்வு செய்யப்பட்டார். இந்த விவரங்கள் அமீர்

ஹைதர்கானுக்குத் தெரிவிக்கப்பட்டது. இந்தக் கட்சியை லெனினும், ஸ்டாலினும் அங்கீகரித்தார்கள்.

பின்னர் அமீர் ஹைதர்கானுக்கு அங்கே ஆயுதப்பயிற்சி மூன்று மாதங்களுக்கு அளிக்கப்பட்டது. இது அமீருக்கு புதிய உற்சாகத்தை அளித்தது. இந்திய விடுதலைக்காக ஆயுதப்போராட்டத்தில் இணைய விரும்பினார். 1927இல் நவம்பர் புரட்சியின் பத்தாம் ஆண்டு நிறைவு கொண்டாடப்பட்டது. உலகம் முழுவதிலுமிருந்து தலைவர்கள் வந்திருந்தனர். இந்தியாவிலிருந்து மோதிலால் நேரு, ஜவஹர்லால் நேரு, சரோஜினி நாயுடுவின் இளைய சகோதரி சுஹாசினி வந்திருந்தார்கள். சுஹாசினி பல்கலைக் கழகத்தில் மாணவராகச் சேர்க்கப்பட்டு அமீர் ஹைதர்கானுக்கு அறிமுகப்படுத்தப்பட்டார். 1927 இறுதியில் அமீர் ஹைதர்கான் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினராகச் சேர்ந்தார். பின்னர் அமீர் ஹைதர்கான் செஞ்சேனையின் மூத்த அதிகாரி ஒருவரின் தலைமையில் சில தொழிற்சாலைகள், அருங்காட்சியகங்கள், கிரெம்ளின், லெனின்கிராட் ஆகிய இடங்களுக்குப் பயணமாகச் சென்றனர். புரட்சிப் படைகள், புரட்சியை வழிநடத்திய ஸ்மோலன்க் நிறுவனத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். குளிர்கால அரண்மனைக்கும், புரட்சியின் முதல் குண்டை வெடித்த கப்பலான அரோராவுக்கும் அவர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர். புரட்சிக்கு முன் புரட்சியாளர்கள் சிறை வைக்கப்பட்டிருந்த பாதாளச் சிறைகளுக்கும் அவர்கள் சென்றனர்.

பல்கலைக் கழகத்தில் அமீர் ஹைதர்கானின் கல்வி முடிந்திருந்தது. சீனாவில் கம்யூனிஸ்ட்டுகள் பின்வாங்கிய பிறகு எம்.என்.ராய் கம்யூனிஸ்ட்

அகிலத்தின் அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் விடுவிக்கப்பட்டு, அந்தப் பதவி காலியாக இருந்தது. அந்தப் பொறுப்பை தற்காலிகமாக பெட்ரோவ்ஸ்கி பார்த்து வந்தார். இப்போதைய கேள்வி அமீர் ஹைதர்கான் எங்கு செல்ல வேண்டும் என்பதாகும். அமீர் ஹைதர்கான், பெட்ரோவ்ஸ்கியிடம் "நான் இந்தியாவுக்குத் திரும்ப விரும்புகிறேன்" என்றார். மகிழ்ச்சியடைந்த பெட்ரோவ்ஸ்கி, "இந்தியாவில், முறையான கம்யூனிஸ்ட் கட்சி இல்லை. நீங்கள் அங்கு கடினமாக உழைக்க வேண்டும். பிரிட்டிஷ் உளவு அமைப்பிடம் வலுவானவிதத்தில் வலைப் பின்னல் உள்ளது. உலகம் முழுதும் எல்லா மூலைகளிலும் அது இருக்கிறது. அவர்களது கடற்படையும் மிக வலிமையாக உள்ளது. உலகின் பெரும்பாலான துறைமுகங்களில் அவர்களது கப்பல்கள் நங்கூரமிட்டுள்ளன. நீங்கள் இந்தியாவில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்," என்று கூறி அமீர் ஹைதர்கான் இந்தியாவுக்கு அனுப்பி வைக்கப்பட்டார். இவ்வாறு அந்தக் காலத்தில் சர்வ தேச அளவில் உலகில் உள்ள அனைத்து நாடுகளிலும் இருந்துவந்த கம்யூனிஸ்ட் கட்சிகளின் ஒருங்கிணைப்புக் குழுவாக அன்றைய தினம் செயல்பட்டுவந்த கம்யூனிஸ்ட் அகிலத்தால், இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கத்தைக் கட்டி எழுப்புமாறு அனுப்பிவைக்கப்பட்டவர்தான் அமீர் ஹைதர்கான்.

அவர் இந்தியா வந்தபிறகும் அவரால் அவ்வளவு எளிதாக இங்கே செயல்படமுடியவில்லை. செயல்படவிடவில்லை. அவற்றை விவரமாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்பினால், "அமீர் ஹைதர்கான் – காவியம் படைத்த கம்யூனிஸ்ட்" என்ற தலைப்பில் வெளியான நூலை

படிக்க வேண்டும். ஆமீர் ஹைதர்கானின் வாழ்க்கை வரலாற்றை அவரிடம் நேரிடையாகக் கேட்டுப் பெற்ற டாக்டர் அயூப் மிர்சா என்பவர் எழுதிய நூலை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினராக இருந்த முகமது அமீன் மிகச் சிறப்பாகச் சுருக்கி ஆங்கிலத்தில் அளித்திருந்தார். அதை கி.ரமேஷ், மிக அற்புதமாகத் தமிழாக்கம் செய்து பாரதி புத்தகாலயம் வெளியிட்டிருக்கிறது. அமீர்ஹைதர்கானின் வாழ்க்கை வரலாற்றை ஒவ்வொருவரும் அவசியம் அறிந்துகொள்ள வேண்டும்.

# ரஷ்யப் புரட்சியை வரவேற்ற முதல் உலகக் கவிஞன்

- என்.ராமகிருஷ்ணன்

-அக்டோபர் 29, 2019




…

மகத்தான ரஷ்யப் புரட்சி வெற்றி பெற்ற பின், அதைக்குறித்து பல்வேறு நாடுகளின் கவிஞர்கள், எழுத்தாளர்கள் அதற்குப் புகழ்மாலை சூட்டியுள்ளனர். ஆனால் சென்ற நூற்றாண்டின் துவக்கத்திலிருந்தே ரஷ்ய

நிலைமையை உன்னிப்பாகக் கவனித்து வந்த தமிழகத்தின் மகாகவி சுப்ரமணிய பாரதியார் அந்த புரட்சி வெற்றி அடைந்த வுடனேயே வாழ்த்துப் பா பாடிய உலகின் முதல் கவிஞராவார். பத்திரிகையாளராக தன் வாழ்வைத் துவங்கியதி லிருந்து உலக அரசியலில் ஆர்வம் கொண்டிருந்த பாரதி, இரண்டு போராட்டங்களை உன்னிப்பாகக் கவனித்து வந்தார். ஒன்று, 700 ஆண்டுகளாக நடைபெற்று வந்த அயர்லாந்து விடுதலைப் போர், மற்றொன்று ஜார் மன்னனுக்கெதிரான ரஷ்ய மக்களின் போராட்டம். 1905ஆம் ஆண்டில் தன்னிடம் கோரிக்கை மனு அளிக்க வந்த ரஷ்ய மக்களை ஜார் மன்னன் நூற்றுக்கணக்கில் சுட்டுக் கொன்றதைக் கண்ட பாரதி, தான் நடத்தி வந்த ‘இந்தியா’ பத்திரிகையில் பின்வருமாறு எழுதினார்:

சுயாதீனத்தின் பொருட்டும் கொடுங்கோன்மை நாசத்தின்

பொருட்டும் நமது ருஷ்யத் தோழர்கள் செய்து வரும்
உத்தமமான முயற்சிகள் மீது ஈசன் பேரருள்
செலுத்துவாராக”

இச்சம்பவம் நடந்த 12ஆண்டுகளுக்குப் பின்னர் 1917ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ரஷ்யாவில் முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சி நடைபெற்று ஜார் மன்னன் பதவியிலிருந்து அகற்றப்பட்டு கெரன்ஸ்கி என்பவன் தலைமையில் அரசாங்கம் அமைந்தபோது, பாரதி தன் பத்திரிகையில் காக்காய் ‘பார்லிமெண்ட்’ என்ற கட்டுரையில் எழுதினார்: “கேட்டீர்களா, காகங்களே, அந்த ருஷ்யா தேசத்து ஜார் சக்கரவர்த்தியை

இப்போது அடித்துத் துரத்தி விட்டார்களாம். அந்த ஜார் ஒருவனுக்கு மாத்திரம் கோடான கோடி சம்பளமாம்" இந்தக் கட்டுரையை பாரதி எழுதி 7 மாத காலத்திற்குள்ளாகவே அவ்வாண்டு நவம்பர் 7ஆம் தேதி மகத்தான ரஷ்யப் புரட்சி லெனின் தலைமையில் வெற்றி பெற்றது. அதைக் கண்டு மகிழ்ச்சியடைந்த பாரதி பாடினார்:

"மாகாளி பராசக்தி உருசிய நாட்

டினிற் கடைக்கண் வைத்தாளங்கே

ஆகாவென் றெழுந்தது பார் யுகப்புரட்சி

கொடுங்கோலன் அலறி வீழ்ந்தான்..."

லெனின் புகழை பாரதி மற்றொரு பாடல் மூலம் வெளிப்படுத்துகிறார்: 'காலைப் பொழுது' என்ற பாடலில் குருவியும், காக்கையும் பேசிக்கொள்வது போலவும், குருவி அப்பொழுது 'கற்றறிந்த காக்கையே பேசுக நீ' என்பதாகவும். உடனே காக்கை பேசுவதாகவும் பாரதி ஒரு கவிதை எழுதியிருக்கிறார்:

"அப்போது காக்கை, அருமையுள்ள தோழர்களே செப்புவேன் கேளீர்! சில நாளாகக் காக்கையுள்ளே நேர்ந்த புதுமைகளை நீர் கேட்டறியீரோ? சார்ந்து நின்ற கூட்டமங்கு சாலையின் மேற்கண்டீரே? மற்றந்தக் கூட்டத்து மன்னவனை காணீரே? கற்றறிந்த ஞானி கடவுளையே நேரவான்; எழுநாள் முன்னே இறைமகுடந் தான் புனைந்தான் வாழியவன் எங்கள் வருத்த மெலாம் போக்கிவிட்டான் சோற்றுக்குப் பஞ்சமில்லை, போரில்லை,

துன்பமில்லை போற்றற் குரியான் புதுமன்னன் காணீரோ?” என்று காக்கை மூலம் லெனினைப் புகழ்கிறார் பாரதி.

ரஷ்யா குறித்து வெளிவரும் தகவல்களை, உள்நாட்டு மற்றும் வெளிநாட்டு எதிரிகளை லெனின் சிரமத்துடன் சமாளிப்பதைக் கண்ட பாரதி லெனின் மேல் இரக்கம் கொண்டு கூறுகிறார்: “… பிறகு எனக்கு ருஷ்யக் குடியரசின் தலைவனாகிய லெனின் என்பவனுடைய ஞாபகம் வந்தது. உரலுக்கு ஒரு பக்கம் இடி, மத்தளத்துக்கு இரண்டு பக்கம் இடி, ஸ்ரீமான் லெனினுக்கோ லட்சம் பக்கத்திலே….” 15 கோடி மக்களை ரஷ்யாவில் ஈர்த்துள்ள பொது வுடைமை லட்சியம் 30 கோடி மக்களைக் கொண்ட இந்தியாவிற்கு வந்தால் எத்தகைய புதுமை ஏற்படும் என்று கற்பனை செய்த பாரதி “பாரத சமுதாயம் வாழ்கவே.. வாழ்க வாழ்க…” என்ற பாடலில் பாடுகிறார்:

“பாரத சமுதாயம் வாழ்கவே- வாழ்க, வாழ்க
பாரத சமுதாயம் வாழ்கவே - ஜய ஜய ஜய ஜய
பாரத சமுதாயம் வாழ்கவே
முப்பது கோடி ஜனங்களின் சங்க
முழுமைக்குப் பொது உடைமை
ஒப்பி லாத சமுதாயம்
உலகத்துக் கொரு புதுமை - வாழ்க!
மனித ருணவை மனிதர் பறிக்கும்
வழக்க மினி யுண்டோ?
மனிதர் நோக மனிதர் பார்க்கும்
வாழ்க்கை மினி யுண்டோ?

இனியொரு விதி செய்வோம் - அதை

எந்த நாளுங் காப்போம்

தனி யொருவனுக் குணவில்லை யெனில்

ஜகத்தினை யழித் திடுவோம்

எல்லாரு மோர் நிறை எல்லாருமோர் விலை

எல்லாரும் இந்நாட்டு மன்னர் நாம்

எல்லாரும் இந்நாட்டு மன்னர் ஆம்

எல்லாரும் இந்நாட்டு மன்னர்

பாரத சமுதாயம் வாழ்கவே! ஜய ஜய ஜய"

பாரத சமுதாயம் அவருடைய கடைசிப் பாடல்களில் ஒன்றாகும்.

ரஷ்யப் புரட்சியானது மாபெரும் மாறுதலை உருவாக்கப் போகிற மகத்தான சக்தி என்று பாரதி தன் வாழ்வின் இறுதி வரை உறுதியான நம்பிக்கை கொண்டி ருந்தார். அவர் மறைவதற்கு சில மாதங்கள் முன்பு, 1921ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் 'சுதேசமித்திரன்' ஏட்டில் தான் எழுதிய கட்டுரையில் தனது ஆழ்ந்த நம்பிக்கையை வெளியிட்டுள்ளார்.

"இந்தப் பூமியில் நாமே நெடுநாள் இருந்து பலவித நியாயங்கள்

நடந்து நிறைவேறுவதைப் பார்க்கப் போகிறோம்

"பூமியில் நல்ல யுகம் தோன்றப் போகிறது

"மனித ஜாதி முழுமைக்கும் விடுதலை உண்டாகப் போகிறது

"ருஷ்ய ராஜ்யப் புரட்சியானது இனி வரப்போகிற நற்காலத்தின் முன்

அடையாளங்களில் ஒன்று. “பூமி தூளாகாது

“மனிதர் ஒருவருக்கொருவர் செய்யும் அநீதி தூளாகும்.”

இந்தக் கட்டுரைக்கான ஆதாரம் :

தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

# சௌகத் உஸ்மானி

- ச.வீரமணி

-அக்டோபர் 30, 2019




…

இந்திய கம்யூனிஸ்ட் இயக்க முன்னோடிகள் - 5

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி உருவாவதற்கு முன்பே, நாட்டில் ஆட்சி செய்துவந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளுக்கு எதிராக நாடு முழுதும் பல்வேறு மையங்களில் பல்வேறு தோழர்கள்

செயல்பட்டுவந்திருக்கின்றனர். அவர்களில் சௌகத் உஸ்மானியும் ஒருவராவார். சௌகத் உஸ்மானி ராஜஸ்தான் மாநிலம் பிகானீரில் 1901இல் பிறந்தார். அவரது இயற் பெயர் மௌலா பக்ஷ் அவர் மௌலானா சௌகத் அலி அவர்களின் தீவிர அபிமானி யாக மாறியதால் தன் பெயரை சௌகத் உஸ்மானி என மாற்றிக்கொண்டார். சௌகத் உஸ்மானிக்கு, பத்து வயதாக இருக்கும்பொழுது, அவரது பாட்டி 'கத்தார்' ('Ghaddar') எனப்படும் 1857 கலகம் உருவான சமயத்தில் நம் மக்கள் மீது பிரிட்டிஷ் ஆட்சி யாளர்கள் கட்டவிழ்த்துவிட்ட பயங்கர மான அட்டூழியங்களைக் கதை, கதையாக விவரித்து, அவரிடம் பிரிட்டிஷ் ஆட்சியாளர் களுக்கு எதிராக, மிகவும் ஆழமானமுறையில் வெறுப்பை விதைத்திருந்தார். ஆயினும் சௌகத் உஸ்மானியிடம் 1917இல்தான் ஒரு தெளிவான அரசியல் விழிப்புணர்வு ஏற்பட் டது. இதனை அவர் மிகவும் விரிவான வகையில் சுமார் 552 பக்கங்களில் சுயசரிதை யாக எழுதி இருக்கிறார். அது, அன்றைக் கிருந்த சோவியத் யூனியனிலும் (USSR) மற்றும் ஜெர்மன் ஜனநாயகக் குடியரசிலும் (GDR) கிழக்கத்தியப் பிரிவில் ஓர் ஆய்வுப் பொரு ளாக (research study) மாறி இருந்தது.

1917இல் நடைபெற்ற மாபெரும் நவம்பர் புரட்சி, அநேகமாக அனைத்து ஒடுக்கப்பட்ட மற்றும் காலனியாதிக்க நாடுகளி லும் நடைபெற்ற விடுதலைப் போராட்டங் களின் மீது ஓர் ஆழமான தாக்கத்தை ஏற் படுத்தியது. அந்த சமயத்தில், ரஷ்யாவில் தொழிலாளர்கள்-விவசாயிகளின் செஞ்சேனை பெற்ற வரலாற்றுச்சிறப்புமிக்க வெற்றிகள் சௌகத் உஸ்மானியிடம் எழுச்சி யினையும் ஆர்வத்தினையும் ஏற்படுத்தின. இதன்

பாதிப்பின் காரணமாக சோவியத்யூனி யனில் நடைபெற்றதைப்போல ஒரு செம்படைப் புரட்சியை இந்தியாவிலும் நடத்த வேண்டும் என்று சௌகத் உஸ்மானி விருப்பம் கொண்டார். இதே போன்ற கருத்து கொண்ட இளைஞர்கள் பலருடன் இந்தியாவிலிருந்து, சோவியத் யூனியனுக்கு நடந்தே சென்றார். 1920 மே மாதத்தில் இந்தியாவிலிருந்து வெற்றிகரமாக வெளியேறி, சோவியத் நாட்டிற்குப் போய்ச் சேர்ந்தார். இவரும், இதர இந்திய இளைஞர்களும், (மொத்தம் 36 பேர்) செஞ்சேனையின் ஓர் அங்கமாகவே மாறினார்கள்.

செஞ்சேனையில் சேர்ந்தபின் சில எதிர்ப் புரட்சிக் குழுக்களுக்கு எதிராக நடை பெற்ற போர்களில் பங்குகொண்டு வெற்றி பெற்றிருக்கிறார்கள். சோவியத் யூனியனில் சௌகத் உஸ்மானி கற்ற கல்வி, அவருக்குள்ளே மார்க்சிய-லெனினியத்தின் உண்மையான போதனை களைப் படிப்படியாகப் புகட்டி அவரைத் தெளிவுபடுத்தியது. சோவியத் யூனியன் அவருக்கு உத்வேகமூட்டும் ஒரு நாடாக மாறியது. புகழ்மிக்க அந்நாட்டின்மீது அவருக்கிருந்த அளவிடற்கரிய அன்பு மூன்று முறை அந்நாட்டிற்குச் சென்று வர அவரைக் கட்டாயப்படுத்தியது. இந்த அனுபவங்கள் அனைத்தையும் அவர் ஒரு புத்தகமாக வெளியிட்டிருக்கிறார். இந்தப் பயணங்கள், வெவ்வேறான மூன்று கால கட்டங்களில், வெவ்வேறான சூழ்நிலை களில் மேற்கொள்ளப்பட்டன. ஒவ்வொரு முறையும் அந்நாட்டிற்குச் சென்று அந்நாட்டு மக்களுடன் இரண்டறக் கலந்தபின் அவ ருடைய சிந்தனைகளும் செயல்பாடுகளும் அபரிமிதமான அளவில் வளம் பெற்றன.

இதன்காரணமாகத்தான் 1923இல் கான்பூரில் நடைபெற்ற போல்ஷ்விக் சதி வழக்கில் குற்றம்சாட்டப்பட்டு விசாரணைக் கைதியாக ஒவ்வொருநாளும் 15 மைல்கள் அவரை நடக்க வைத்தே கூட்டிச் சென்ற போதும்கூட அந்தத்துன்பங்கள் எல்லாம் அவருக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. ஒரு புரட்சியாளனின் வரலாற்றுச் சிறப்பு மிக்க பயணங்கள் (சோவியத் யூனியனில் சிறிது காலம் தங்கியிருத்தல்) என்ற தலைப்பில் சௌகத் உஸ்மானி தன் பயணங்கள் குறித்த அனுபவங்களைத் தொகுத்து எழுதி யிருக்கிறார். முதல் பயணத்தை சௌகத் உஸ்மானி பெஷாவரிலிருந்து மாஸ்கோவிற்கு மேற்கொண்டார். அப்போதுதான் தாஷ்கண்ட் சென்றிருக்கிறார். மாஸ்கோ உச்சி மாநாட்டில் கலந்துகொண்டிருந்திருக்கிறார். சோவியத் யூனியன் பின்பற்றிய புதிய பொருளாதாரக் கொள்கைகளின் அதிசயங்களைக் கண்டு வியந்திருக்கிறார். இரண்டாவது பயணம் கராச்சியிலிருந்து மாஸ்கோவிற்குச் சென்றதாகும். இந்த சமயத்தில்தான் அவர் கம்யூனிஸ்ட் அகி லத்தின் ஆறாவது பேராயத்தில் (காங்கிரசில்) பங்கேற்றார். இதுபற்றி ‘சோவியத் யூனியனில் எனது அனுபவங்கள் (1920-21)’ என்ற சிறு நூல் வெளியிட்டிருக்கிறார்.

மூன்றாவது பயணத்தை தில்லியிலிருந்து மாஸ்கோவிற்கு மேற்கொண்டிருக்கிறார். 1928-ஆம் ஆண்டு மே மாத தொடக்கத்தில், சௌகத் உஸ்மானி தில்லியில் இருந்து உத்தரப் பிரதேசத்திற்குச் சென்று, அங்கு, பண்டித ஜவகர்லால் நேரு உள்ளிட்ட பலரை சந்திக்க விரும்பினார். சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டின் போது பல முறை அவரை சந்தித்திருந்தாலும், அவருடன் தனித்துப் பேசுவதற்கு சந்தர்ப்பம்

வாய்க்க வில்லை. அலகாபாத்தில் உள்ள அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அலுவல கத்தில் நேருவை சந்திக்க ஏற்பாடு செய்து தரப்பட்டது. ‘ரஷ்யப் புரட்சியின் ஒரு பக்கம்’ (A page from the Russian Revolution) என்ற தனது நூலின் கையெழுத்துப் படியை நேரு விடம் காண்பித்து, அதற்கு ஒரு அறிமுக உரை எழுதித்தரக் கோரியபோது, கனிவுடன் இணங்கிய நேரு, அவ்வாறே எழுதி, அதை அன்று மாலையிலேயே சௌகத் உஸ்மானி யிடம் வழங்கினார். அந்த அருமையான அறிமுக உரையுடன் அந்த நூலின் கையெழுத்துப் பிரதி, நாடு முழுவதும் தேடுதல் வேட்டையில் ஈடுபட்டிருந்த காவல்துறை யின் கைகளில் சிக்காமல், மாஸ்கோவைச் பாதுகாப்பாக சென்றடைந்தது.

சௌகத் உஸ்மானி, கம்யூனிஸ்ட் அகி லத்தின் மூன்றாவது காங்கிரஸ் (பேராயம்) மாஸ்கோவில் நடைபெற்றபோது இந்தியாவி லிருந்து சென்ற வீரேந்திரநாத் சட்டோ பாத்யாயா (சரோஜினி நாயுடுவின் சகோதரர்), புபேந்திரநாத் தத்தா (ஸ்வாமி விவேகானந் தரின் சகோதரர்), பி. கங்கோஜி, டாக்டர் தரக்னாத் தாஸ், டாக்டர் அப்துல் வகித், குலாம் அம்பியா கான் லுஹானி, நம்பியார், செண்பகராமன் பிள்ளை, தாஸ்குப்தாக்கள், அக்னேஸ் ஸ்மெட்லி (பெண்) முதலான தோழர்களைச் சந்தித்திருக்கிறார். என்.என்.ராய், சௌகத் உஸ்மானிக்கு பேராயத்தில் கலந்துகொள்வதற்கான அனு மதிச்சீட்டை வாங்கிக் கொடுத்திருந்தார். தோழர் சௌகத் உஸ்மானி சென்னை வந்திருந்த சமயத்தில் உடல்நலிவுற்று, சிங்காரவேலர் இல்லத்தில்தான் தங்கியிருந் தார். அதேபோன்று பகத்சிங் மற்றும்

அவருடன் இணைந்து செயல்பட்ட தோழர்களுடனும் சௌகத் உஸ்மானி நெருங்கிய தொடர்பினை வைத்திருந்தார்.

பிரிட்டிஷார் இந்தியாவை ஆண்ட போது, லண்டனில் உள்ள பிரிட்டிஷ் நாடாளு மன்றமான ஹவுஸ் ஆப் காமன்ஸ் (House of Commons) அவைக்கு இந்தியாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஆசியாவைச் சேர்ந்த முதல் எம்.பி. தாதாபாய் நௌரோஜி. இவருக்கு அப்போது ஜின்னா தீவிரமாகப் பிரச்சாரம் செய்து அவரை வெற்றி பெறவைத் தார். அதேபோன்று சௌகத் உஸ்மானியும், இந்தியாவிலிருந்து ஹவுஸ் ஆப் காமன்ஸ் அவைக்கு போட்டி போட்டார்.

1929இல் மீரட் சதி வழக்கிற்காக கைது செய்யப்பட்டு, சிறையில் இருந்த சௌகத் உஸ்மானியை, கிரேட் பிரிட்டன் கம்யூனிஸ்ட் கட்சி தனது வேட்பாளராக நிறுத்தியது. இந்தி யாவில் பிரிட்டிஷார் ஆட்சி செய்துவந்த அக்கிரமங்களை ஆங்கில மக்கள் மத்தியில் கொண்டு செல்ல வேண்டும் என்பதற்காக கிரேட் பிரிட்டன் கம்யூனிஸ்ட் கட்சி இவரை நிற்க வைத்தது. இவர் எதிர்த்துப் போட்டியிட்ட வேட்பாளர் வேறு யாருமில்லை. சர் ஜான் சைமன் என்பவர்தான். (இந்தப்பேர்வழிதான் பின்னர் 1930இல் இந்தியாவிற்கு வந்தார். அவர் தலைமையில் சைமன் கமிஷன் அமைக்கப்பட்டது.) எனினும் சௌகத் உஸ்மானி தோல்வியடைந்தார். பின்னர் 1931இல் ஹவுஸ் ஆக் காமன்ஸ்க்கு தேர்தல் நடைபெற்றபோதும் சௌகத் உஸ்மானி கிரேட் பிரிட்டன் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தேர்தலில் போட்டியிட்டார். லண்டனி லிருந்து கம்யூனிஸ்ட்டுகள் அனைவரும் ஒன்று

திரண்டு சௌகத் உஸ்மானிக்காகப் பிரச்சாரம் மேற்கொண்டனர். அப்போதும் சௌகத் உஸ்மானி சிறையில்தான் இருந்தார்.

எம்.என்.ராயின் கட்டளைகளுக்கிணங்க சௌகத் உஸ்மானி கான்பூரிலும், பனாரஸி லும் இயக்க வேலைகளைச் செய்து வந்தார். பின்னர் 1978இல் இறந்தார். இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கம் உருவாவதற்கு முன்பே, 1917க்குப்பின் தோழர் சௌகத் உஸ்மானி போன்று எண்ணற்ற தோழர்கள் இந்திய விடுதலைப் போராட்டத்திற்காக தங்கள் உடல்-பொருள்-ஆவி அனைத்தையும் அளித்துள்ளனர். அவர்களுடைய வாழ்க்கை நம் எதிர்கால நடவடிக்கைகளுக்கு உந்து சக்தியாக இருந்திடும் என்பது திண்ணம்.

# கான்பூர் சதி வழக்கு

- என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 1, 2019




…

1921 - 24ஆம் ஆண்டுகளில் பெஷாவரில் கம்யூனிஸ்ட் சதி வழக்குகள் நடைபெற்று வந்தபோது, சென்னையிலும், பம்பாயிலும் மற்றும் கல்கத்தாவிலும் கம்யூனிஸ்ட் கருத்துப் பிரச்சாரம் பிரபலமாகி வந்தது. ஏற்கெனவே சொன்னதுபோல் சென்னையில் சிங்காரவேலர் தமிழ், ஆங்கிலப் பத்திரிகைகளையும் பம்பாயில் டாங்கே ‘சோசலிஸ்ட்’ என்ற

பத்திரிகையையும் கல்கத்தாவில் முசாபர் அகமது ஒரு பத்திரிகையையும் நடத்தி ஆங்கிலேய - எதிர்ப்புப் பிரச்சாரத்தையும் மார்க்சிய பிரச்சாரத்தையும் நடத்தி வருவதையும் இந்த இடங்களில் கம்யூனிஸ்ட் குழுக்கள் உருவாகி வருவதையும் கண்டு ஆத்திரம் கொண்ட ஆங்கிலேய அரசாங்கம் சிங்காரவேலர், டாங்கே மற்றும் முசாபர் அகமது ஆகிய மூவரையும் மையமாக வைத்து தொடுத்த வழக்குதான் கான்பூர் சதி வழக்கு.

1923ஆம் ஆண்டு மே மாதத்தில் முசாபர் அகமது, சௌகத் உஸ்மானி, குலாம் உசேன் ஆகிய மூவரும் வெவ்வேறு இடங்களில் கைது செய்யப்பட்டனர். சென்னையில் காவல்துறையினர் சிங்கார வேலரைக் கைது செய்ய வந்தபோது, அவர் டைபாய்டு காய்ச்சலில் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தார். அவரைப் பரிசோதித்த ஆங்கிலேய அரசாங்க பெரிய மருத்துவர் சிங்காரவேலரை கான்பூர் கொண்டு செல்ல அனுமதி தரவில்லை. ஆங்கிலேய அரசாங்கம் ஏற்கெனவே ஒரு திட்டம் வைத்திருந்தது. பெஷாவர் நகரில் ‘மாஸ்கோ வழக்கு’ என்ற கம்யூனிஸ்ட் சதி வழக்கு நடந்து கொண்டிருந்த நேரத்திலேயே அந்த வழக்கில் சௌகத் உஸ்மானியையும், முசாபர் அகமதுவையும் சேர்க்க அது திட்டமிட்டிருந்தது. ஆனால் வடமேற்கு எல்லை மாகாணத்தில் பிரதம கமிஷனராக இருந்த சர் ஜான் மாபே என்பவர் இதற்குச் சம்மதிக்க மறுத்தார். இந்த இரண்டு பேரையும் வழக்கில் சேர்த்தால் மீண்டும் துவக்கத்திலிருந்து விசாரணை நடைபெற வேண்டும், எனவே அதைச் செய்ய முடியாது என மறுத்துவிட்டார்.

இந்தியாவில் கம்யூனிசக் கருத்துக்கள் பரவுவது தனது ஆதிக்கத்திற்கு ஆபத்தானது என்று ஆங்கிலேய அரசாங்கம் கருதியதால் அது அந்த இயக்கத்தை அழிப்பதற்காக கம்யூனிஸ்ட் அகிலத்தோடு நேரடியாகவும், கடிதம் மூலமாகவும் தொடர்பு கொண்டுள்ள இந்தியர்கள் அனைவரையும், சிறையிலடைக்க ஒரு குற்றப் பத்திரிகையைத் தயாரித்தது. அந்த சதிவழக்குதான் கான்பூர் சதி வழக்கு. முதலில் 105 பேரை கைது செய்ய வேண்டுமென்று அது திட்டமிட்டது. பின்னர் அது படிப்படியாகக் குறைக்கப்பட்டு இறுதியில் பின்வரும் எட்டு பேர் மீது வழக்கு தொடர முடிவு செய்தது.

1. எம்.என்.ராய்
2. மௌலாபக் ஷ் என்ற சௌகத் உஸ்மானி
3. முசாபர் அகமது
4. குலாம் ஹூசேன்
5. நளினி குப்தா
6. ராம் சரண்லால் சர்மா
7. எஸ்.ஏ.டாங்கே
8. சிங்காரவேலர்

இந்த எட்டுப் பேர் மீதும் 1898ஆம் வருடத்திய குற்றப் பிரிவு சட்டத்தின் 196 பிரிவின்கீழ் கீழ்க்காண்போர் மீது மாவட்ட நீதிமன்றத்தின் வழக்கைத் தொடரும் படி இந்தியாவின் கவர்னர் ஜெனரல் 1923ஆம் ஆண்டு பிப்ரவரி 27ஆம் தேதி உத்தரவிட்டார். இந்த எட்டுப் பேரில் என்.என்.ராய் ஜெர்மனியில் இருந்ததால் அவரைக் கைது செய்ய முடியவில்லை.

அதேபோல் ராம் சரண்லால் சர்மா பிரெஞ்சுப் பிரதேசமான பாண்டிச்சேரியில் அடைக்கலம் புகுந்திருந்ததால் அவரைக் கைது செய்ய முடியவில்லை. ஏற்கெனவே சொன்னதுபோல் சிங்காரவேலரை மருத்துவ காரணத்தால் கைது செய்ய முடியவில்லை. குலாம் உசேன் என்பவர் பெஷாவர் சதி வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட முகமது ஷாபி என்பவருக்கு எதிராக சாட்சியம் தருவதாக வாக்களித்து அப்ரூவராக மாறினார். எனவே அவர் கைது செய்யப்படவில்லை. எனவே இறுதியாக சௌகத் உஸ்மானி, முசாபர் அகமது, நளினி குப்தா, எஸ்.ஏ.டாங்கே ஆகிய நால்வர் மீது மட்டும் குற்றப் பத்திரிகை சாட்டப்பட்டது. மணிலால் டாக்டர் என்ற வழக்கறிஞர் முசாபர் அகமதுவுக்காகவும், சௌகத் உஸ்மானிக்காகவும் வாதாடினார். கபில்தேவ் மாளவியா என்ற வழக்கறிஞர் டாங்கேவிற்காகவும், நளினி குப்தாவுக்காகவும் வாதாடினார். முதலில் லண்டனில் இருந்த கம்யூனிஸ்ட் பாதுகாப்புக்குழு இந்த வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர்களுக்காக பிரபல வழக்கறிஞர் முகமது அலி ஜின்னாவைத்தான் கேட்டுக் கொண்டது. ஆனால் அவர் 30 ஆயிரம் ரூபாய் வேண்டுமென்று கேட்டார். ஏனென்றால் அரசாங்க வழக்கறிஞருக்கு அரசாங்கம் தினமும் 1000 ரூபாய் கொடுத்தது. ஜின்னாவுக்கு கம்யூனிஸ்ட் பாதுகாப்புக்குழு அவ்வளவு பணம் தர இயலாத நிலையில் அவர் ஆஜராகவில்லை.

பெஷாவர் சதிவழக்கில் அந்த வழக்கு விபரம் வெளியே தெரியக்கூடாது என்று மூடி மறைத்த அரசாங்கம் இப்பொழுது இந்த வழக்கை பெரிதுபடுத்தி மக்கள் மத்தியில் பயத்தை உண்டுபண்ணுவதற்காக

பத்திரிகையாளர்களை நீதிமன்றத்திற்குள் நுழையவும், செய்தி சேகரிக்கவும் அனுமதித்தது. இந்தச் சதிவழக்கின் ஆரம்ப விசாரணை நாளன்று உளவுத்துறை இயக்குநர் கர்னல் சிசில்கேயி என்பவர் செய்தியாளர்களை அழைத்து இந்த வழக்கு முழுவதையும் ‘கான்பூர் போல்ஷ்விக் சதிவழக்கு’ என்ற தலைப்பில் செய்தி வெளியிடும் படி கூறினார். இதனால் இமயம் முதல் குமரி வரை போல்ஷ்விக் என்ற வார்த்தை பிரபலமாயிற்று. இந்த வழக்கில் தாக்கல்செய்யப்பட்ட ஆவணங்களின் சுருக்கம் பத்திரிகையில் வெளியானது. ஏராளமானோர் இவற்றைத் தொடர்ந்து படிக்கலாயினர்.

கான்பூரில் இருந்த மாணவர்களுக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. போல்ஷ்விக் என்றால் கொடூரமான தோற்றம் கொண்டவர்களா? எப்படிபட்டவர்கள் என்ற ஐயம் ஏற்பட்டது. இதேபோன்றே கான்பூர் நகரில் பெரியவர்களுக்கும் ஏற்பட்டது. எனவே அந்நகரின் இளைஞர்களும், பெரியவர்களும் தினமும் நீதிமன்றத்திற்கு வந்து முசாபரையும், மற்ற மூவரையும் பார்த்து ‘அடடே எல்லோரும் இந்தியர்கள்தான்’ என்று கூறிக்கொண்டே திரும்பினர்.

கீழமை நீதிமன்றத்தில் இந்த வழக்கு 1924ஆம் ஆண்டு மார்ச் மாதம் 17ஆம் தேதி துவங்கியது. பின்னர் அது செஷன்ஸ் நீதிமன்றத்திற்கு அனுப்பப்பட்டது.

இந்த வழக்கு நடைபெற்று வரும் போது பார்வையாளர் இருப்பிடத்தில் எஸ்.வி.காட்டே மற்றும் அப்துல் ஹலீம் என்ற பெயரிலான இரண்டு கம்யூனிஸ்ட்டுகளும் சத்ய பக்தா என்ற ஒருவரும் அமர்ந்திருந்தனர்.

காட்டேயும் ஹலீமும் முசாபர் அகமது மற்றும் டாங்கேவுக்காக உதவிசெய்ய வந்திருந்தனர். அவர்களை விசாரித்த சத்ய பக்தா அவர்கள் இருவருக்கும் கான்பூரில் தங்க இடமில்லை என்று புரிந்து அவர்களை தன் வீட்டிலேயே தங்கும்படி கேட்டுக் கொண்டார். அவர்களும் அதையேற்று வழக்கு முடியும் வரை அவர் வீட்டில் தங்கினர். வழக்கு என்பது மற்ற வழக்குகளைப் போலத்தான். ஆங்கிலேய அரசாங்கத்தைக் கவிழ்க்க சதி செய்வதுதான் இவர்கள் நோக்கம் என்று குற்றம் சாட்டப்பட்டது. பல மாதங்கள் வழக்கு விசாரணை நடந்து இறுதியில் 1924ஆம் ஆண்டு மே மாதம் 20ஆம் தேதி தீர்ப்பு வழங்கப்பட்டது. முசாபருக்கும், மற்ற மூவருக்கும் நான்காண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

தண்டனை வழங்கப்பட்ட சில நாட்களுக்குள்ளாகவே ‘போல்ஷ்விக் குற்றவாளிகளுக்கு விசேஷ வகுப்பு கிடையாது. அவர்கள் சாதாரண குற்றவாளிகளைப் போல நடத்தப்பட வேண்டுமென்று ஆங்கிலேய அரசாங்கம் உத்தரவிட்டது. இதனால் முசாபருக்கும் மற்ற மூவருக்கும் சிறிய கால்சட்டை அளிக்கப்பட்டது. கழுத்தைச் சுற்றி இரும்பு வளையம் மாட்டப்பட்டது. அதேபோல் காலிலும் இரும்புச் சங்கிலி மாட்டப்பட்டது. இதர கைதிகளுடன் சேர்த்து இவர்கள் அடைக்கப்படவில்லை. இவர்கள் நால்வரும் அரசாங்கத்திற்கு மனு அனுப்ப விரும்பினர். ஆனால் அனுமதி மறுக்கப்பட்டது. ஆகையால் அவர்கள் உண்ணாவிரதம் இருந்தனர். ஆனால் அன்று மதியத்திலேயே அந்த நால்வரும் வெவ்வேறு சிறைகளுக்கு பிரித்து அனுப்பப்பட்டனர். முசாபர் அகமது ரேபரேலி மாவட்டச் சிறைக்கும், செளகத் உஸ்மானி பரேய்லி சிறைக்கும், டாங்கே

சீத்தாபூர் மாவட்டச் சிறைக்கும், நளினி குப்தா கோரக்பூர் சிறைக்கும் அனுப்பப்பப்பட்டனர்.

டைபாய்டு காய்ச்சலால் பாதிக்கப்பட்ட சிங்காரவேலர் படிப்படியாக குணமடைந்தார். ஏப்ரல் 27ஆம் தேதியன்று இந்தியாவின் வைஸ்ராய்க்கு ஒரு மனு அனுப்பினார். அதில், தான் சற்று குணமடைந்து வருவதாகவும், அது நீடித்தால் ஜூலை 1ஆம் தேதி அளவில் தன் மீதான வழக்கு விசாரணையை பம்பாயிலோ அல்லது சென்னையிலோ தொடரலாம் என தெரிவித்தார். அந்த மனு சென்னை அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டது. அவர்கள் அந்த வழக்கை மாற்ற வேண்டியதில்லை. சிங்காரவேலர் கான்பூரிலேயே விசாரிக்கப்பட வேண்டும் என பதில் எழுதி அனுப்பினர். ஆனால் உளவுத்துறையின் பிரதான அதிகாரியிருந்த சிசில் கேயி வேறு மாதிரியாக கருதினார். கான்பூர் சதிவழக்கு வெற்றிகரமாக நடத்தப்பட்டு குற்றவாளிகள் தண்டிக்கப்பட்டதால் இந்திய அரசாங்கத்தின் குறிக்கோள் நிறைவேறிவிட்டது. எனவே இனி சிங்காரவேலர் மீது மட்டும் இந்த வழக்கை தனியாக நடத்துவதால் எந்த விதமான பலனும் கிடையாது என்று கருதுவதாக அவர் அரசாங்கத்திற்கு எழுதிவிட்டார். எனவே அரசாங்கம் அதையேற்று சிங்காரவேலர் மீது வழக்கு தொடராமல் கைவிட்டுவிட்டது.

ரேபரெய்லி சிறையில் மிகவும் கடுமையாக நடத்தப்பட்டதால் பலவீனமாயிருந்த முசாபர் அகமது மேலும் பலவீனமானார். இதன் விளைவாக ஜூலை மாதத்தின் ஒரு நாள் இரவில் ரத்தமாக வாந்தி எடுத்தார். அவர் இருந்த அறை முழுவதும் ரத்தமயமாக இருந்தது. இதைத் தொடர்ந்து சிறைச்சாலை மருத்துவர் டாக்டர் முகர்ஜி என்பவர் முசாபரைச்

சந்தித்து நோய் குறித்து விவரமாகக் கேட்டார். சிலநாட்கள் கழித்து அவர்மீண்டும் முசாபரை சந்தித்தார். முசாபரை அல்மோரா மாவட்டச் சிறைக்கு அனுப்பி வைப்பதாகவும் அங்கே சென்று நன்றாக உண்டு உடல் நலனை தேற்றிக் கொள்ள வேண்டும் என்று கூறினார்.

அதன்படி முசாபரை காவல்துறையினர் அல்மோரா சிறைக்கு அழைத்து வந்தனர். அந்தச் சிறையானது மலை உச்சியில் இருந்ததால் முசாபர் காவலர்கள் உதவியுடன் மிகுந்த சிரமத்துடன்தான் ஏறிச் செல்ல முடிந்தது. அடுத்தநாள், அதாவது 1925 செப்டம்பர் 12ஆம் தேதி காலையில் முசாபர் நிபந்தனையின்றி விடுதலை செய்யப்பட்டார். அவருக்கு தான் ஏன் விடுதலை செய்யப்பட்டோம் என்பது தெரியாது. என்ன நடந்தது என்றால், ரேபரேலி சிறையின் மருத்துவப் பொறுப்பாளரான டாக்டர் டி.கே.முகர்ஜி, முசாபர் உடல்நிலை குறித்து 1924 ஜூலை 8ஆம் தேதி அரசாங்கத்திற்கு ஒரு கடிதம் அனுப்பினார். அதில் முசாபருக்கு காசநோய் ஏற்பட்டிருக்கிறது என்றும், அவர் தொடர்ந்து சிறையில் இருந்தால் உயிருக்கே ஆபத்தாக முடியும் என்று முகர்ஜி கூறியிருந்தார். இந்தக் கருத்தை மாகாண அரசாங்கத்தின் உதவிச் செயலாளர் பென்னட் என்பவரும் ஆமோதித்து முசாபரை விடுதலை செய்யும்படி சிபாரிசு செய்திருந்தார். அரசாங்கம் அதையேற்று முசாபரை விடுதலை செய்தது. தான் விடுதலை செய்யப்பட்ட பின்னர்தான் தனக்கு காசநோய் ஏற்பட்டுள்ளது முசாபருக்கு தெரியும். இதைத் தொடர்ந்து அவர் அங்கேயே ஒரு நண்பர் வீட்டில் தங்கி சிகிச்சை மேற்கொண்டு ஓய்வெடுக்கலானார்.

சிலநாள் கழித்து அவருக்கு 30 ரூபாய் மணியாடர் வந்தது. அதை சத்ய பக்தா என்பவர் அனுப்பி, தான் 1925ஆம் ஆண்டு கான்பூரில் ஒரு கம்யூனிஸ்ட் மாநாட்டை கூட்டப்போவதாகவும், அதற்கு முசாபர் வர வேண்டுமென்றும், பயணச் செலவுக்காக இத்தொகையை அனுப்பியிருப்பதாகவும் தெரிவித்தார். முசாபர் அகமதுவுக்கு அவர் யார் என்று தெரியாது. இருந்தாலும் மாநாட்டுக்கு போவதென்று அவர் முடிவு செய்தார்.

# தேசிய ஒருமைப்பாடும் மொழிக் கொள்கையும்

- எம்.பசவபுன்னையா

-நவம்பர் 2, 2019




…

இந்திய தேசத்தில் மற்ற எல்லா அரசியல் கட்சிகளையும்விட, மொழிக் கொள்கைக்கும் தாய்மொழி வழி கல்வி மற்றும் மொழிவழி மாநிலம் உள்ளிட்ட கோட்பாடுகளுக்கும் உயரிய முக்கியத்துவம் அளித்து,

உயர்த்திப்பிடித்து வருகிற கட்சி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி. மொழிக் கொள்கை தொடர்பாக கட்சி தொடர்ந்து வலியுறுத்தி வருகிற நிலைப்பாடு பற்றி, புதிய தலைமுறையினருக்கு பல்வேறு தருணங்களில் குழப்பங்கள் எழுகின்றன. ஆனால் மார்க்சிஸ்ட் கட்சி என்றென்றும் தாய்மொழிப் பாதுகாப்பு; இந்தித் திணிப்பு எதிர்ப்பு என்ற நிலைப்பாட்டை உறுதியோடு கடைப்பிடித்து வந்திருக்கிறது. இதுபற்றி இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் மகத்தான தலைவர்களில் ஒருவரும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தாபகத் தலைவர்களில் ஒருவரும் முதல் அரசியல் தலைமைக்குழுவில் இடம்பெற்ற நவரத்தினங்களில் ஒருவரும் தலைசிறந்த மார்க்சிய - லெனினிய அறிஞருமான தோழர் எம்.பசவபுன்னையா எழுதிய கட்டுரை இது. 1981 ஜனவரி 4 முதல் 11 வரை மதுரையில் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்ற சமயத்தில் தீக்கதிர் நாளேடு வெளியிட்ட சிறப்பு மலரில் தோழர் பசவபுன்னையாவின் இக்கட்டுரை இடம்பெற்றுள்ளது.

இன்றும் தாய்மொழிக்கு பேராபத்து ஏற்பட்டிருக்கிறது. இந்தித் திணிப்பு, மத்திய பாஜக அரசால் தீவிரமாக முன்னெடுக்கப்படுகிறது. இதை எதிர்த்து நவம்பர் 5 அன்று “தாய்மொழிப் பாதுகாப்பு; இந்தித் திணிப்பு எதிர்ப்பு” என்ற முழக்கத்துடன் தென் மாநிலங்களின் மாநாட்டை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு மாநிலக்குழு நடத்துகிறது. கட்சியின் தமிழக, கேரள, ஆந்திர, தெலுங்கானா, கர்நாடக மாநில செயலாளர்கள் பங்கேற்கும் இந்த மாநாட்டையொட்டி தோழர் பசவபுன்னையா அவர்களின் இக்கட்டுரை வெளியிடப்படுகிறது. இக்கட்டுரையை ‘‘வளன்”

என்ற புனைபெயரில் தமிழில் தந்திருப்பவர், காப்பீட்டு ஊழியர் இயக்கத்தின் மறைந்த முதுபெரும் தலைவர் தோழர் இ.எம்.ஜோசப்.

ஒவ்வொரு அரசியல் கட்சியின் மொழிக் கொள்கை, அடிப்படையில் சரியானதா, அல்லது தவறானதா என்பதை எவ்வாறு தீர்மானிப்பது?

இந்திய நாட்டின் வேறுபட்ட மொழிகளைப் பேசுகின்ற பல்வேறு மக்களிடையே ஒற்றுமையை வளர்த்திட உதவுகிறதா? பல்வேறு இனங்கள் மற்றும் மதக் குழுக்கள் ஆகிய அனைத்துப்பகுதியினரின் ஒற்றுமையை வளர்த்திட துணை செய்யுமா, செய்யாதா என்ற அடிப்படையில்தான் அதைத் தீர்மானிக்க வேண்டும். இந்திய யூனியனின் (ஒன்றியத்தின்) ஒற்றுமைக்கு ஊறு விளைவிக்கக் கூடிய ஒரு மொழிக் கொள்கையை ஆதரித்துப் பேசுபவர்கள் கூட, நாட்டின் எதிர்காலத்துக்கு அத்தகைய கொள்கை விளைவிக்கும் கேடுகளைப் பற்றிச் சில வேளை அறியாமலிருக்கக் கூடும். அத்தகைய கொள்கையை ஜனநாயகப் பூர்வமானதாகவோ அறிவியல் பூர்வமானதாகவோ கொள்ள முடியாது.

ஒவ்வொரு ஆணாயினும், பெண்ணாயினும் தத்தம் தாய்மொழியை நேசிப்பவர்களே! தாய்மொழிப் பற்று இயல்பானதும் கூட. பல்வேறு மொழிகளையும், தேசிய இனங்களையும் கொண்ட இந்நாட்டில், ஒருவர் தன் தாய்மொழி மீது கொண்டிருக்கும் மரியாதை, மற்றவர்களின் தாய்மொழிகளை மதிப்பதற்கும் தூண்டுகோலாக இருக்க வேண்டும். அசோகர் காலத்திலோ அல்லது அக்பர் காலத்திலோ அல்லது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஆட்சிக் காலத்திலோ இருந்த ‘ஒன்றுபட்ட’

இந்தியாவும், இன்றிருக்கும் ‘இந்திய ஒன்றியம்’, அதனுடைய ஒற்றுமை மற்றும் ஒருமைப்பாடும் முற்றிலும் வேறுபட்ட அடிப்படையைக் கொண்டவை. அத்தகைய கடந்துவிட்ட யுகங்கள், மற்றும் வரலாற்றுக் கட்டங்களின் அடிப்படையில் சிந்தனையைத் தொடர்வது, எத்துணை நன்னோக்குடைத்தாயினும் பின்னோக்குப் பார்வைக்கும், பிற்போக்குத்தனத்துக்கும், யதார்த்தத்துக்குப் புறம்பான நிலைக்குமே வழிகோலும்.

பிரிட்டிஷாரின் பிரித்தாளும் கொள்கை நமக்குப் போதிக்கும் பாடம் என்ன?

மவுண்ட்பேட்டனின் அரசியல் தீர்ப்பை பல்வேறு கருத்தோட்டங்களைக் கொண்ட, தேசிய விடுதலை இயக்கத் தலைவர்களும் ஏற்றுக் கொண்டனர். அதன் பிறகு இந்திய நாடு விடுதலையடைந்தது. நமது தலைமுறை அக்கறை கொண்டிருக்கும் இந்திய ஒற்றுமை என்பது எது? அது இந்திய விடுதலைக்குப் பின் தோற்றுவிக்கப்பட்ட, இந்திய ஒன்றியத்தின் ஒற்றுமையேயாகும். மவுண்ட்பேட்டன் தீர்ப்பை ஏற்றுக் கொண்ட அன்றைய விடுதலைப் போராட்டத் தலைவர்கள், நாட்டை ‘இந்திய ஒன்றியம்’ என்றும் பாகிஸ்தான் என்றும் இரண்டாகப் பிரிப்பதற்கு ஒப்புக்கொண்டார்கள். இதன் பொருளென்ன? பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில், அதாவது விடுதலைக்கு முன்பிருந்த நாட்டின் ஒற்றுமையையும், ஒருமைப்பாட்டையும் இனிமேல் காக்கமுடியாது என்ற தங்கள் இயலாமையை அவர்கள் ஒப்புக் கொண்டார்கள் என்பதுதானே! இரு வகுப்பினரிடையேயும் ‘இந்து - முஸ்லீம்’ - குறிப்பாக, காலஞ்சென்ற

ஜின்னா மற்றும் அவர் தலைமை தாங்கிய முஸ்லீம் லீக் ஆகியோரின் வகுப்புவாதக் கண்ணோட்டத்தின் தீங்கான பாத்திரத்தையும், அனைத்துக்கும் மேலாக, இந்தியாவில் நெடுங்காலமாகவிருந்த பிரிட்டிஷ் ஆட்சியின் ‘பிரித்தாளும் கொள்கை’யின் ஒரு பகுதியான வகுப்புப் பிளவுகளை நீடித்து நிற்கச் செய்வதில் பிரிட்டிஷ் ஆட்சி வகித்த சதிகாரப் பங்கையும் குறைத்து மதிப்பிட முடியாது.

இறந்த காலத்தைப் பற்றிப் புலம்பிக் கொண்டிருப்பதில் பயனேதுமில்லை. வரலாற்றைத் திருத்தியமைப்பதும், விளைந்த சேதத்தை நிவர்த்தி செய்வதும் இயலாத ஒன்று. முன்னாள் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் ‘ பிரித்தாளும் கொள்கை’ மற்றும் மத அடிப்படையில் இந்தியா பிரிந்ததை தடுக்க முடியாத நமது இயலாமை ஆகியவற்றிலிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய பாடம் என்ன? மதச்சார்பற்ற ஜனநாயக அஸ்திவாரத்தின் மீது, இந்திய ஒன்றியத்தின் உண்மையான தேசிய ஒருமைப்பாட்டைக் கட்டும் வகையில் நாம் உழைக்க வேண்டும் என்பதே. மொழியின் பெயராலோ, மதத்தின் பெயராலோ, சாதிகளின் பெயராலோ, இந்திய ஒன்றியத்தின் ஒற்றுமைக்கு ஊறு விளைவிக்கும் எதையும் செய்யக் கூடாது என்பதே!

வரலாற்றில் ‘நாடுகளைத் துண்டாடுவது’ என்ற போக்கினை உடைய கொள்கையின் அடிப்படையில், இந்திய ஒன்றியத்தைத் துண்டாடுவதற்குச் செய்யப்படும் எந்த முயற்சியும், இந்திய ஒன்றியத்தில் வாழும் ஒவ்வொரு மத, மற்றும் இனக்குழுக்களுக்கு எதிராகவும், இந்திய ஒன்றியத்தின் அனைத்து மக்ககளுக்கெதிராகவும் புரியப்படும் குற்றமாகும்.

# அனைத்துமே ஆட்சிமொழிகளாக்கப்பட முடியும்

- எம்.பசவபுன்னையா

-நவம்பர் 3, 2019




…

தேசிய ஒருமைப்பாடும் மொழிக் கொள்கையும்

பொருளாதார - அரசியல் - சமூக மேம்பாடு பற்றி…

இந்திய ஒன்றியத்தின் பொருளாதார - அரசியல் - சமுதாய மேம்பாடு அடைவது எங்ஙனம்? நமது மக்களின் பொருளாதாரச் சார்புநிலை, பின்தங்கிய நிலை, தாழ்வுபடுத்தும் வறுமை ஆகியவற்றின் மீது இந்திய ஒன்றியத்தின் அனைத்து மக்களும் சேர்ந்து ஒன்றுபட்டுத் தாக்குவதன் மூலமே அந்த மேம்பாடு சாத்தியமாகும். தொழில் வளர்ச்சியடைந்த நாடுகளில் பத்தாவது இடத்தை வகிக்கும் நமது நாடு, தேசியச் செல்வ உற்பத்தியில், தனிநபர் சராசரியைக் கணக்கிடும்போது, உலகத்தின் கடைசி முப்பது நாடுகளில் ஒன்றாகவே இருக்கிறது. இந்த உண்மையை மறப்பது விபரீதமாகவே முடியும். வளர்ச்சியடைந்த பல்வேறு முதலாளித்துவ நாடுகளின் தனிநபர் சராசரி வருமானம் ரூபாய் இருபதாயிரத்திலிருந்து, ரூபாய் பத்தாயிரம் வரை இருக்கும்போது, இந்தியனின் சராசரி வருமானம் ரூபாய் ஐந்நூற்றி ஏழு மட்டுமே என்ற பரிதாபமான நிலையிலேயே இருக்கிறது. இது அண்டை நாடுகளான இலங்கை, பாகிஸ்தான் ஆகியவற்றின் சராசரியை விடக்குறைவு. இந்திய யூனியனில் வாழும் ஒவ்வொரு மொழிக் குழு, ஒவ்வொரு தேசிய இனம், மற்றும் மதக்குழுக்கள் ஆகியவற்றின் உய்வு, இந்தியா முழுவதுமாக உயிர்வாழ்வதில்தான் அடங்கியிருக்கிறது. ஏனெனில், நாட்டின் பல்வேறு மொழிவழி மாநிலங்கள் மற்றும் யூனியன் பிரதேசங்களின் பொருளாதாரம் ஒன்றையொன்று சார்ந்ததாகவும், ஒன்றுக்கொன்று உதவுவதுமாகவே அமைந்துள்ளது. எந்தவொரு மொழி மாநிலத்தையும், மற்றவற்றிலிருந்து பிரிப்பது, அந்தக் குறிப்பிட்ட மாநிலத்துக்கு மட்டுமல்லாமல், நாடு முழுமைக்குமே கேடு விளைவிப்பதாகும். மேலோங்கி நிற்கும் இந்தக்

காரணம்தான் இன்றைய இந்திய யூனியனின் மொழிப் பிரச்சனை பற்றிய அணுகுமுறையில் நம்மை வழி நடத்துவதாக இருக்க வேண்டும்.

அரசின் மொழிக் கொள்கையும், திணிப்பு முயற்சியும்

நமது நாட்டில் ஏறத்தாழ அறுபது மொழிகள் உள்ளன. இவைகளைத் தவிர, பல்வேறு கிளை மொழிகளும் உண்டு. இந்த மொழிகளில், நம் நாட்டு மக்கள் தொகையில் 90 சதம் மக்கள் பேசக்கூடிய 14 பெரிய மொழிகள் உள்ளன. நம் நாட்டு மக்களில் எந்தப் பிரிவினரும் சமஸ்கிருத மொழியைப் பேசாவிட்டாலும்கூட, அதையும் சேர்த்து மொத்தம் 15 மொழிகளை அரசியலமைப்புச் சட்டம் குறிப்பிடுகிறது. இந்த நிலைமையில், எந்த ஒரு மொழி பேசும் மக்களாவது தங்கள் மொழியை மற்ற மொழிகளைப் பேசும் மக்கள் மீது திணிக்க முற்படுவார்களானால், அது தேசிய ஒற்றுமைக்கும், ஒருமைப்பாட்டுக்கும் கேடு விளைவிப்பதாகும். மொழித்திணிப்பு என்ற பிரச்சனை எழுவது ஏன்? இந்தி பேசும் மக்களிடையேயுள்ள சில வெறியர்கள், இந்திய நாட்டுக்கு கட்டாயமாக ஒரு ஆட்சி மொழி வேண்டுமென்றும், அது இந்தியாகத்தான் இருக்க முடியுமென்றும், காரணம் அந்த மொழிதான் நாட்டின் மக்கள் தொகையில் பெரும்பான்மையினராக இல்லா விட்டாலும் கூட, பெரிய அளவு எண்ணிக்கையினரால் பேசப்படும், புரிந்து கொள்ளப்படும் மொழி என்றும் வாதிடுகின்றனர்.

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 343-வது பிரிவில் “இந்திய யூனியனுக்கு இந்தி ஆட்சி மொழியாக விருக்கும்” என்று

குறிப்பிடப்பட்டிருப்பதை இந்தி வெறியர்கள் பிடித்துக் கொண்டு தொங்குகிறார்கள். ஒரு குறிப்பிட்ட மொழி, குறிப்பிட்ட அந்தஸ்துக்கு உயர்த்தப்படும் அவசியம் இல்லை என்பதையும், அரசியலமைப்புச் சட்டத்தின் எட்டாவது அட்டவணையில் குறிப்பிடப்பட்டிருக்கும் 14 மொழிகள் அனைத்துமே ஆட்சி மொழிகளாக ஆக்கப்பட முடியும் என்பதையும் அவர்கள் முழுவதுமாக மறந்துவிடுகிறார்கள். ஒரு குறிப்பிட்ட மொழி அல்லது மொழிகளுக்கு மட்டும் ஆட்சிமொழி என்ற சிறப்புச் சலுகை வழங்கப்படுவதால் ஆளும் மொழி பேசும் மக்கள், ஆளப்படும் மொழி பேசும் மக்கள் என்று மக்களை இரு கூறாக்கும் அபாயம், இந்திய அரசமைப்பிற்குள் அறிமுகப்படுத்தப்படுகிறது என்ற உண்மையை அவர்கள் முற்றிலுமாக மறந்துவிடுகிறார்கள்.

முஸ்லிம் அரசர்கள் ஆட்சியின்போது, பாரசீக மற்றும் உருது மொழிகளை, அரசவை மொழியென்றும், ஆட்சி மொழியென்றும் அறிவித்ததும், பின்பு பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் ஆங்கிலத்தை ஆட்சி மொழி என்று திணித்ததும், இந்தியாவில் அன்று எதேச்சதிகார, ஜனநாயக விரோத ஆட்சிகள் நீடித்திருந்த போது சாத்தியமாயிருந்தன. அத்தகைய அரசமைப்பு, இந்தியத் துணைக் கண்டத்தின் மற்ற அனைத்து மொழிகளையும் புறக்கணித்து, அடக்கியாண்டது மட்டுமல்லாமல், நாட்டிலும் மற்றும் நாட்டு நிர்வாகத்திலும் அதன் விவகாரங்களிலும் பங்கு பெறுவதினின்றும், பின்பற்றுவதினின்றும் இந்த நாட்டைச் சேர்ந்த 99 சத மக்கள் தடுக்கப்பட்டனர். இவ்வாறு நம் நாட்டின் பெரும்பான்மை மக்களுக்கு ஜனநாயகமும், ஜனநாயக வாழ்வும், முற்றிலும்

மறுக்கப்பட்டது. அத்தகைய எதேச்சதிகார ஆட்சி, பல்வேறு மொழி பேசும் மக்களின் பொருளாதார - அரசியல் - கலாச்சார விருப்பங்களைப் புரிந்து கொள்ளாத நிலைக்கு இட்டுச் சென்றது. அது மட்டுமல்ல, ஆட்சியாளர்களுக்கும், ஆளப்பட்டவர்களுக்குமிடையில் தீர்க்கப்பட முடியாத பகைமைகளையும் வளர்த்தது.

உலக வரலாற்றை, குறிப்பாக கடந்த மூன்று நூற்றாண்டுகளின் வரலாற்றை சிறிது நோக்குவோமானால், ஒன்று புலப்படும். ஒன்று திரண்ட, நெருக்கமான தொடர்பு கொண்ட, ஒருங்கமைந்த, பல்வேறு மொழிகள் பேசும் பெருந்திரளான மக்களும், நிலப்பரப்புகளும் நிறைந்திருக்கும் ஒரு நாட்டில் ஒரு குறிப்பிட்ட மொழியை பலவந்தமாக ஆட்சி மொழியாகத் திணிக்கும் முயற்சிகள், சீர் குலைவுக்கும், சீர்கேட்டிற்குமே இட்டுச் சென்றன. பல மொழிகள் பேசும் இந்திய யூனியனில் ஜனநாயகம் என்பதும், அதற்கு தனி ஓர் ஆட்சி மொழி என்பதும் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாகும்.

6 கோடி மேற்கு வங்காளிகள், 2 கோடி ஒரியர்கள், 6 கோடி தெலுங்கர்கள், 6 கோடி தமிழர்கள், 2.5 கோடி மலையாளிகள், 2.5 கோடி கன்னடியர், 6 கோடி மராட்டியர் ஆகியோரைத் தவிர இந்தி பேசாத பல்வேறு மக்கள் பிரிவினரையும் உள்ளடக்கியது தான் இந்திய யூனியன். இப்படி பல்வேறு மொழிகள் பேசும் மக்கள் மீது, ஆட்சி மொழியென்று இந்தியைத் திணிப்பது, பிரிவினைவாதிகளுக்கும், சீர்குலைவுவாதிகளுக்கும் தான் வலுவூட்டுமேயன்றி, இந்திய ஒன்றியத்தில் வாழ்கின்ற பெருந்திரளான மக்ளின் ஒற்றுமைக்கும், தேசிய ஒருமைப்பாட்டிற்கும் உதவப்

போவதில்லை. இந்தியே ஆட்சி மொழி என்று வாதிடுபவர்கள், இந்த உண்மையைப் புரிந்து கொள்வதேயில்லை. மொழிப் பிரச்சனை என்பது, இந்திய ஒன்றியத்தின் தேசிய இனப் பிரச்சனையுடன், பிரிக்க முடியாதபடி தொடர்பு கொண்டதாகும்.

நாளை தொடரும்…

தஞ்சையில் நடந்த சிபிஎம் மாநில மாநாட்டில் பசவபுன்னையாவுடன்
அ.சவுந்தரராசன், பி.ஆர்.பரமேசுவரன்,
ஏ.கே.பத்மநாபன்.

# மொழிப் பிரச்சனை பற்றி நமது கட்சியின் நிலைப்பாடு

- எம்.பசவபுன்னையா

-நவம்பர் 4, 2019




…

…நேற்றைய தொடர்ச்சி

இந்திய ஒன்றியத்தின் முதன்மையான 14 மொழிகள் அனைத்தையுமே ஆட்சி மொழியாக்குவது, நடைமுறையிலும் சாத்தியமே. அவசியமானதும்

கூட. இந்தி மட்டுமே ஆட்சி மொழி என்று வாதிபடுபவர்கள் இதை உணர மறுக்கின்றனர். ஒரு சிறிய நாடான சுவிட்சர்லாந்து, கடந்த பல பத்தாண்டுகளாக மூன்று மொழிகளையும் ஆட்சி மொழிகளாகக் கொண்டு செயல்பட்டு வருகிறது என்ற உண்மையை அவர்கள் அறியவில்லை.

இந்திய நாடாளுமன்றம், மொழிக்குழப்ப மேடையாகிவிடும் என்பது அவர்கள் வாதம். இந்த வாதம் பொருளற்றது, அறிவுக்கு பொருந்தாதது. ஏனெனில், இந்திய யூனியன் என்பதே பல்வேறு பெரிய, சிறிய மொழிகள் பேசும் மக்களைக் கொண்டது. இத்தகைய யதார்த்த உலகிலிருந்து பிரிந்து, இந்திய நாடாளுமன்றம் மட்டும் தனியே சந்திரலோகத்தில் பறக்க முடியாது. தொழில்நுட்ப வளர்ச்சி விரைந்து முன்னேறிக் கொண்டிருக்கும் இன்றைய யுகத்தில், 14 பெரும் மொழிகளை ஆட்சி மொழிகளாகக் கொண்டு, மைய அரசாங்கத்தின் நிர்வாகமும், நாடாளுமன்ற நடவடிக்கைகளும் நடத்துவதில் பெரும் தடையாக இருக்க முடியாது. இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் கட்சித் திட்டம், மொழிப் பிரச்சனை பற்றிய கட்சியின் நிலையை, ஐயத்துக்கிடமின்றி மிகத் தெளிவாக விளக்குகிறது. அது பின்வருமாறு:

நாடாளுமன்றத்திலும், மத்திய நிர்வாகத்திலும் அனைத்துத் தேசிய மொழிகளும் சமமானவை என்று அங்கீகரிக்கப்பட வேண்டும்.

தங்களது பொருளாதார சமுதாய-அறிவுப் பரிமாற்றங்களின் வளர்ச்சிப் போக்கில், இந்தியாவிலுள்ள பல்வேறு மாநிலங்களிலுள்ள மக்கள்,

அவர்களது தேவைகளுக்கு மிகவும் பொருந்துகின்ற ஒரு தொடர்பு மொழியை அவர்களே நடைமுறையில் வளர்த்துக் கொள்வார்கள்.

நிர்வாகம், சட்டமியற்றுதல், நீதித்துறை, கல்வி புகட்டுதல் ஆகியவற்றில், ஆங்கிலம் அகற்றப்பட்டு அந்த இடத்தில் தேசியமொழிகள் இடம்பெற வேண்டும்.

கல்வி நிலையங்களில் தாய்மொழியில் கல்வி கற்கும் உரிமை இருக்க வேண்டும்.

அம்மாநிலத்தின் கல்வி நிலையங்களிலும் உச்ச கட்டக் கல்வி வரையிலும் மாநில மொழியே பயன்படுத்தப்பட வேண்டும்.

அனைத்துச் சட்டங்களும், அரசாங்க உத்தரவுகளும், தீர்மானங்களும், அனைத்துத் தேசிய மொழிகளிலும் கிடைக்கச் செய்ய வேண்டும். ஆட்சி மொழியாக இந்தி பயன்படுத்தப்படுவது கட்டாயமாக்கக் கூடாது.

தேவைப்படும் இடங்களில், அம்மாநிலத்தின் தேசிய மொழி தவிர, சிறுபான்மை மக்களின் மொழியும் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற ஏற்பாடு இருக்க வேண்டும்.

நாடாளுமன்றத்தில், எந்த தேசிய மொழியிலும் பேசுவதற்கு உறுப்பினர்களுக்கு உரிமை இருக்க வேண்டும். அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே, மற்ற அனைத்துத் தேசிய மொழிகளிலும் அவர்களது பேச்சு மொழி பெயர்க்கப்படுவதற்கு வகை செய்யப்பட வேண்டும்.

ஒரு குறிப் பிட்ட மொழி பேசும் மாநிலத்தில், அம்மாநிலத்தின் அனைத்து பொது நிறுவனங்கள் மற்றும் அரசு நிறுவனங்களின் நிர்வாகத்தில் அம்மாநிலத்தின் தேசிய மொழி பயன்படுத்தப்பட வேண்டும்.

உருது மொழியும் அதன் எழுத்து வடிவமும் பாதுகாக்கப்ப ட வேண்டும்".

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தேசிய ஒற்றுமைக்கும், ஒருமைப்பாட்டுக்கும் பாடுபடுவதற்கு உறுதி கொண்டுள்ளது. அதே வேளையில் மும்மொழிக் கொள்கையை எதிர்க்கிறது. ஏனெனில், வேறுபட்ட மொழிகளைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற போர்வையில் ஒரே ஆட்சி மொழியாக இந்தியைத் திணிப்பதே இந்த மும்மொழிக் கொள்கையின் நோக்கம். 1967 டிசம்பர் மாதத்திலேயே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, தன் தீர்மானம் ஒன்றின் வாயிலாக இதைத் தெளிவுபடுத்தியுள்ளது; "எங்களது கட்சி, கல்வி அரங்கில் மும்மொழிக் கொள்கையை எதிர்க்கிறது. ஏனெனில், அக்கொள்கை குழந்தைகள் மீது, ஆங்கிலம், இந்தி மற்றும் வேறொரு நவீன மொழி ஆகியவற்றைத் திணிக்கிறது. குழந்தைகள் மீது அத்தகைய தேவையற்ற சுமையை சுமத்துவது மட்டுமல்லாமல், அவர்கள் குறைந்த பட்ச கல்வி மற்றும் பொதுவான அறிவுத்திறன் பெறுவதைத் தடை செய்கிறது" என்று அந்தத் தீர்மானம் கூறுகிறது.

முடிவுரையாக, ஒன்றைத் தெளிவுபடுத்துவது அவசியம். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, இந்தியையோ அல்லது வேறு எந்த மொழியையோ அல்லது தங்களது தாய்மொழி தவிர வேறு மொழிகளையோ கற்பதை

எதிர்க்கவில்லை. ஆனால் குறிப்பிட்ட எந்த ஒரு மொழியையும், ஆட்சி மொழியாக மற்றவர் மீது திணிப்பதை எதிர்க்கிறது. தங்களது தாய்மொழி தவிர மற்ற இரண்டு மொழிகளைக் கற்க வேண்டும் என்று குழந்தைகளை வற்புறுத்துவதை கட்சி எதிர்க்கிறது. தொன்மையான உலக இலக்கியங்களிலிருந்து, பொருளாதாரம், அரசியல், அறிவியல், கலாச்சாரம், தொழில்நுட்பம், சமூக விஞ்ஞானம் முதலிய நவீன அறிவு வரை அனைத்தையும் புகட்டுகின்ற அளவுக்கு, இந்தியாவில் எந்தவொரு மொழியும், முன்னேறிவிடவில்லை என்பதே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கருத்து. ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு, ரஷியன் முதலிய மொழிகளில் அவை உண்டு. தனக்கும், இந்த நாட்டுக்கும், மிகவும் அண்மைக்கால விஷயங்கள் உள்ளிட்ட நவீன அறிவியல் செய்திகளைப் பெற வேண்டுமென்றால், இந்த நான்கைந்து மொழிகளில் ஒன்றின் அறிவு, ஒருவருக்கு மிகவும் தேவைப்படுகிறது. ஆகவே, ஒருவர் இந்த மொழிகளில் ஒன்றையோ, பலவற்றையோ கற்றுக் கொள்வதற்கான வசதிகள் செய்து தர வேண்டும். ஆனால், எந்தச் சூழ்நிலையிலும், அம்மொழி அவர்கள் மீது திணிக்கப்படவோ, கட்டாயப்படுத்தப்படவோ கூடாது.

இந்தியாவின் மொழிக் கொள்கை பற்றி சுருக்கமாக இவைதாம் எங்களது கருத்துக்கள். இத்தகைய கொள்கை ஒன்றுதான், இந்திய ஒன்றியத்தின், உண்மையான நிலைத்து நிற்கும் தேசிய ஒருமைப்பாட்டைத் தோற்றுவிக்கும் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம். இந்திய ஒன்றியத்திலுள்ள பல மொழி பேசும் மாநிலங்கள் மற்றும் பிரதேசங்களின்

ஜனநாயக ஒற்றுமையை, இந்தக் கொள்கைதான் உறுதிப்படுத்தும் என்றும் உறுதியாக நம்புகிறோம். இதைத் தவிர, வேறு எந்த வழியும், இந்திய ஒற்றுமையை ஆபத்துக்குள்ளாக்கும் - நமது நாட்டிலுள்ள பிரிவினை மற்றும் சீர்குலைவுச் சக்திகளை ஊக்குவித்துக் கொண்டிருக்கும் - அன்னிய ஏகாதிபத்தியச் சக்திகளுக்குத்தான் உதவும்.

அன்றிலிருந்து இன்று வரை, மீண்டும் மீண்டும் அதே நிலையை வலியுறுத்தி வருகிறோம். செப்டம்பர் 1977 லிலும், இந்தப் பிரச்சனை பற்றிய இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் மத்தியக் கமிட்டியின் தீர்மானத்தில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது: “மும்மொழிக் கொள்கை தோல்வியைத் தழுவியுள்ளது என்பதை அனுபவம் நமக்கு உணர்த்திவிட்டது. அது தோல்வியடைந்தது தவிர்க்க முடியாதது. ஏனெனில், நடைமுறை வாழ்வுக்கும், அக்கொள்கைக்கும் தொடர்பேதுமில்லை. ஒரு குறிப்பிட்ட மாநிலத்தின் மக்களது மொழியும், அம்மாநிலத்திலுள்ள மக்களில் 10 சதவீதத்துக்கு மேல் சிறுபான்மையினர் பேசும் மொழி ஏதுமிருந்தால் அந்த மொழியும், பள்ளிப் படிப்பில் மட்டுமல்லாது பட்ட மேற்படிப்பு உள்ளிட்ட, மேல் நிலைக்கல்வி நிலையங்களிலும் பயன்படுத்தப்பட வேண்டும். எந்த நிலையிலும், இந்தி கட்டாயக் கல்வியாக இருக்கக் கூடாது. இருப்பினும், தங்களது பிற்கால வாழ்க்கைக்குத் தேவைப்படும் என்று யாராவது கருதி, இந்தி பயில வேண்டும் என்று விரும்பினால், அவர்களுக்கு உயர் நிலைக்கல்வி மட்டத்திலிருந்து, இந்தி பயிற்றுவிக்கப்படுவதற்கு வகை செய்ய வேண்டும். அதுபோலவே, உயர்நிலைக்கல்வி வகுப்புகளிலும்,

கல்லூரிகளிலும், ஆங்கிலம் கற்பிக்கப்படுவதற்கு வகைசெய்ய வேண்டும். இது மாணவர்களின் விருப்பத்துக்கு விட வேண்டுமேயன்றி, கட்டாயப் பாடமாக ஆக்கக் கூடாது”.

# இந்திய கம்யூனிஸ்ட் சமஷ்டிக் கழகமும் நீலகண்ட பிரம்மச்சாரியும்

-நவம்பர் 5, 2019




…

1921ஆம் ஆண்டில் பம்பாயிலிருந்த எஸ்.ஏ.டாங்கே, ‘காந்தியும் லெனினும்’என்ற தலைப்பில் ஒரு சிறிய நூலை எழுதினார். இந்நூலில் லெனினுடைய தத்துவ, அரசியல் கண்ணோட்டத்தையும், காந்திஜியின் தத்துவ, அரசியல் நிலைப்பாட்டையும் ஒப்பிட்டு அதில், தான், லெனின் பக்கம் நிற்பதாக டாங்கே எழுதியிருந்தார். இதே காலக்கட்டத்தில்

சென்னையில் ஜி.வி.கிருஷ்ணாராவ் என்பவர் ‘நிக்கோலாய் லெனின்: அவருடைய வாழ்வும் பணியும்’ என்ற நூலை ஆங்கிலத்தில் எழுதியிருந்தார். இதை சென்னையிலுள்ள கணேஷ் அண்ட் கோ என்ற புத்தக நிறுவனம் வெளியிட்டிருந்தது. ஏறத்தாழ இதே சமயத்தில் ராமகிருஷ்ண அவஸ்தி என்பவர் லெனின் குறித்து ‘போல்ஷ்விக் மந்திரவாதி’ என்ற தலைப்பில் இந்தி மொழியில் ஒரு நூலை எழுதினார். அது கல்கத்தாவில் வெளியானது. மராத்தி, உருது, வங்காளி, கன்னட மொழிகளிலும் இதுபோன்ற நூல்கள் வெளிவந்தன.

பிரபல காங்கிரஸ் தலைவரான டி.பிரகாசம் நடத்தி வந்த ‘சுயராஜ்யா’ பத்திரிகையில் உதவி ஆசிரியராக இருந்த கிருபாநிதி என்பவர் லெனினைப் பற்றிய ஒரு நூல் எழுதினார்.

1921ம் ஆண்டின் இறுதியில் லெனின் எழுதிய “போல்ஷ்விக்குகள் நீடித்து ஆள முடியுமா?” “இடதுசாரி கம்யூனிசம்”, மார்க்ஸ் எழுதிய “மூலதனம்” நூலைக் குறித்து சுருக்கமாக விவரிக்கும் ‘பீப்பிள்ஸ் மார்க்ஸ் (மக்களுடைய மார்க்ஸ்) போன்ற ஆங்கில நூல்கள் ரகசியமாக புத்தகக் கடைகளில் கிடைத்தன. அதே ஆண்டில்தான் லெனினுடைய நிழற்படமும் இந்தியாவில் வெளியானது. அது இந்திய தேசபக்தர்களிடையே, தொழிலாளர் தலைவர்களிடையே மகிழ்ச்சியை ஏற்படுத்தியது. அவர்களில் திருவிகவும் ஒருவர்.

‘1921ஆம் ஆண்டில் சென்னைத் தொழிலாளர் சங்கத் தலைவன் என்ற முறையில் எனக்கு முதன் முதல் சோவியத் அதிபராகிய லெனின் படம்

கிடைத்தது. அன்று முதல் லெனின் கொள்கையை என்னால் இயன்ற அளவு பரப்ப முயன்று வருகிறேன். உலகம் முழுவதும் சோவியத்மயமாக வேண்டுமென்று, கனவு காண்பவருள் யானும் ஒருவன்'

- என்று திருவிக கூறியதிலிருந்து ரஷ்யப் புரட்சி தமிழகத்தில் கொண்டிருந்த தாக்கத்தைப் புரிந்து கொள்ள முடியும். இந்த காலக்கட்டத்தில் சிங்காரவேலர் தொழிலாளர் பிரச்சனை, போராட்டங்கள், போலீஸ் ஒடுக்குமுறை போன்றவை குறித்து 'ஸ்வதர்மா' பத்திரிகையிலும், 'இந்து' விலும் இதர தமிழ்ப் பத்திரிகைகளிலும் ஏராளமான கட்டுரைகள் எழுதினார்.

"தொழிலாளர் லட்சியங்களைப் பற்றி" "ஓர் இந்திய ஒர்க் ஷாப்பிலிருந்து", "கர்னாடிக் மில் வேலைநிறுத்தம்", "தொழிலாளர் நிலையும் சென்னை சர்க்காரும்", "இந்திய தொழிலாளரின் சர்வதேச நோக்கு", "ஆம்ஸ்டர்டாம் சர்வதேச ஸ்தாபனமும், மாஸ்கோ சர்வதேச ஸ்தாபனமும்", "பெரம்பூர் பட்டாளத்தில் போலீஸ் அட்டூழியம்", "வேலைநிறுத்த உரிமை - கில்பர்ட் ஸ்லேடருக்குப் பதில், "மில் வட்டாரத்துக் கலகங்கள்" போன்று ஏராளமான கட்டுரைகளை எழுதி தொழிலாளி வர்க்கத்திற்குப் போதனையூட்டினார்.

1922ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் சிங்காரவேலரின் இல்லம் போலீசாரால் சோதனையிடப்பட்டது. ஆனால் அங்கு ஆட்சேபகரமான எந்தப் பிரசுரமும் அவர்களால் கைப்பற்றப்படவில்லை. 'இந்திய கம்யூனிஸ்ட் சமஷ்டி கழகம்' என்ற அமைப்பின் பெயரில் 'சவால்' என்ற துண்டுப்பிரசுரம் வெளியிடப்பட்டிருந்தது. அதை வெளியிட்டதற்காக

நீலகண்ட பிரம்மச்சாரி என்ற பயங்கரவாதப் புரட்சியாளர் கைது செய்யப்பட்டார். அவர் தங்கியிருந்த இடமானது சிங்காரவேலுவின் வீட்டிற்கு அருகில் இருந்ததால், சிங்காரவேலரின் வீட்டில் அந்தப் பிரசுரங்கள் பதுக்கி வைக்கப்பட்டிருக்கலாம் என்று போலீஸ் கருதியது. அதன் காரணமாகவே சிங்காரவேலர் வீடு சோதனையிடப்பட்டது.

எருகூர் கிராமத்தைச் சேர்ந்த நீலகண்ட பிரம்மச்சாரி, ஆங்கிலேய அரசாங்கத்தை வன்முறை மூலம்தான் தூக்கியெறிய முடியும் என்ற கருத்தைக் கொண்டிருந்த பயங்கரவாதப் புரட்சியாளர் ஆவார். 1911ஆம் ஆண்டில் நெல்லை மாவட்ட ஆட்சித் தலைவராயிருந்த ஆஷ் என்பவன் மணியாச்சி ரயில் நிலையத்தில் சுட்டுக் கொல்லப்பட்ட வழக்கில் நீலகண்ட பிரம்மச்சாரிக்கு ஏழாண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

1917ஆம் வருட ரஷ்யப் புரட்சியானது பயங்கரவாதத்தில் அவர் கொண்டிருந்த கவனத்தை மாற்றித் தன் பக்கம் திருப்பியது. கம்யூனிசக் கொள்கைகளில் ஈடுபாடு கொண்டு அவற்றைப் பரப்பவும் தொடங்கினார். ‘இது விஷயத்தில் அவர் இந்த நாட்டில் கம்யூனிசத்தை முதன் முதலில் பிரச்சாரம் செய்தவர்களில் ஒருவராக விளங்கினார்.

“இவர் தமிழ்நாட்டில் கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கும், தொழிற்சங்க இயக்கத்திற்கும் முன்னோடிகளில் ஒருவராக விளங்கிய சிங்காரவேலு செட்டியாருடன் சென்னையில் தங்கியிருந்து கம்யூனிஸ்ட் திட்டம் ஒன்றைத் தயாரித்து வெளியிட்டதாக ‘புதிய அலை’ பத்திரிக்கை ஆசிரியை டாக்டர் எஸ்.விஜயலட்சுமி கட்டுரையொன்றில் (26.1.75) கூறியுள்ளார்.

இந்நூலின் உள்ளடக்கம் பற்றி எதுவும் தெரியவில்லை என்றாலும் 1922ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் அரசாங்கம் தடைவிதித்த புத்தகங்களின் பட்டியலில் ‘இந்தியக் கம்யூனிஸ்டுச் சமஷ்டிக்கழகம்’ என்ற நூலும் இடம்பெற்றுள்ளது. இந்நூலானது எம்.என்.ராய் வெளியிட்டு வந்த ‘வேன் கார்டு’ என்ற கம்யூனிஸ்ட் மாதமிருமுறை ஏட்டின் விளைவே என்று உளவு இலாகாவின் உயர் அதிகாரி ஸெஸில் கேயி கூறுகிறார்.

இதிலிருந்து நீலகண்ட பிரம்மச்சாரி தமிழ்நாட்டில் கம்யூனிஸ்ட் இயக்கத்தை உருவாக்குவதற்காக, கம்யூனிஸ்ட் கோட்பாடுகளின் அடிப்படையில் அவரோ அல்லது அவரது கோஷ்டியோ தயாரித்திருந்த அறிக்கையைத்தான் வெளியிட்டார் என்று நாம் முடிவு கட்டலாம். இது உண்மையானால், தமிழ்நாட்டில் கம்யூனிஸ்ட் இயக்கத்தை உருவாக்குவதிலும், அக்டோபர் புரட்சியின் செய்தியைப் பரப்புவதிலும் முன்னோடியாக விளங்கியவர்களில் அவரும் ஒருவர் என்றே நாம் கூறலாம்.”

‘இந்திய கம்யூனிஸ்ட் சமஷ்டி கழகம்’ என்ற பெயர் கொண்ட ஆங்கிலப் பிரசுரமானது 1922ஆம் ஆண்டில் செங்கல்பட்டிலிருந்த மித்தர் அண்ட் கோ என்ற புத்தக நிறுவனத்தால் வெளியிடப்பட்டதாகும். ஆங்கிலேய அரசாங்கமானது ‘கம்யூனிசம்’ குறித்த எந்தவொரு கருத்தும் தமிழகத்திற்குள் பரவிவிடக்கூடாதென்பதில் எந்தளவு உன்னிப்பாக இருந்தது என்பதற்கு ஓர் உதாரணத்தைக் கூறலாம்.

லண்டனிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த ‘கம்யூனிஸ்ட்’ என்ற மாத ஏடு அன்று இந்தியாவில் தடை செய்யப்பட்டிருந்தது. அதில் வந்த கட்டுரையொன்றை ஸ்ரீரங்கத்திலிருந்து வெளிவந்து கொண்டிருந்த ‘இந்து மதச் செய்தி’ என்ற தமிழ்வார ஏடு வெளியிட்டுவிட்டது. இதற்காக அந்தப் பத்திரிகை மீது ஏன் வழக்குத் தொடரக்கூடாதென்பதற்குக் காரணம் கூறுமாறு அதன் ஆசிரியர் கேட்கப்பட்டார்.

ஆங்கிலேய அரசாங்கம் கம்யூனிஸ்ட்டுகள் குறித்து எந்தளவுக்கு கண்கொத்திப் பாம்பாக இருந்திருக்கிறது என்பதற்கு இதைவிட வேறென்ன சாட்சியம் வேண்டும்.

அதே ஆண்டு ஆகஸ்ட் மாதம் 5ஆம் தேதியன்று எஸ்.ஏ.டாங்கேயை ஆசிரியராகக் கொண்ட ‘சோசலிஸ்ட்’ என்ற வார ஏடு வெளியானது. இது கல்கத்தா, சென்னை போன்ற இடங்களுக்கும் அனுப்பப்பட்டது. நல்ல வரவேற்பைப் பெற்றது. கல்கத்தாவிலிருந்து முசாபர் அகமது டாங்கேக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். இத்தகையதொரு ஏடு வெளிவந்திருப்பது குறித்து கல்கத்தா குழு மகிழ்ச்சியடைந்திருப்பதாக அவர் தெரிவித்திருந்தார். டாங்கேயுடன் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளவும், ‘சோசலிஸ்ட்’ கோஷ்டியுடன் இணைப்பு ஏற்படுத்திக் கொள்ளவும் விரும்புவதாக சிங்காரவேலு செட்டியாரை மையமாகக் கொண்டிருந்த சென்னைக் குழு விரும்பியது.

- என்.ராமகிருஷ்ணன் எழுதிய தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் நூலிலிருந்து

# இவன்தான் முதலாளி!

-நவம்பர் 6, 2019




…

ஏறத்தாழ 100 ஆண்டுகளுக்கு முன்னால் அன்றிருந்த ஆலைத் தொழிலாளி வர்க்கத்திற்கு வர்க்க போதனை செய்வதற்காக தென்னிந்தியாவின் முதல் கம்யூனிஸ்டும், மார்க்சிய அறிஞருமாகிய ம.சிங்காரவேலர் அன்று 14ஆயிரம் தொழிலாளர்களைக் கொண்டிருந்த சென்னை பக்கிங்ஹாம் மற்றும் கர்நாட்டிக் மில்களில் தொழிலாளிகளுக்காக மிக மிக எளிய முறையில் மார்க்சியத் தத்துவத்தை எவ்வாறு விளக்கினார் என்பதைக் காண மிக மிக வியப்பாக இருக்கும். கல்வி பெற வசதியில்லாமல் மிக மிக

பின்தங்கிய நிலையில் வறுமையில் வாடிவந்த அந்த 14ஆயிரம் தொழிலாளர்களில் மிக பெரும்பாலோர் தலித் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் ஆவர். தாய்தந்தையர் தங்கள் இளம் மகனுக்கோ, மகளுக்கோ அறிவுரை கூறுவது போல சிங்காரவேலர் மிக எளிய நடையில் மார்க்சியத் தத்துவத்தை விளக்குகிறார். பிரபல வழக்கறிஞரான அவர் ஆங்கிலத்தில் பெரும் புலமை பெற்றவர். அக்காலத்தில் எளிய தமிழில் உரையாற்றுவது என்பதே ஒரு அரிதான ஒன்று என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும்.இக்கட்டுரைக்கான ஆதாரம் தோழர் கே.முருகேசன் மற்றும் தோழர் சி.எஸ்.சுப்பரமணியம் எழுதிய “சிங்காரவேலு : தென்னிந்தியாவின் முதல் கம்யூனிஸ்ட்” என்ற மிகச் சிறந்த நூலாகும்.

- என். ராமகிருஷ்ணன்

தொழிற்சங்க இயக்கம் குறித்து சிங்காரவேலர் கொண்டிருந்த கண்ணோட்டமானது இதர தொழிற்சங்கத் தலைவர்களின் பார்வையிலிருந்து மாறுபட்டதாயிருந்தது. அவர்கள் மனிதாபிமான நோக்கு நிலையிலிருந்து மட்டுமே தொழிலாளர் பிரச்சனைகளைக் கண்டனர். ஆனால் சிங்காரவேலரோ, தொழிலாளரின் பிரச்சனைகளை மார்க்சியக் கண்ணோட்டத்தில் கண்டார். மிகக்குறைந்த கூலி கொடுக்கப்பட்டு சுரண்டப்படும் தொழிலாளிகளின் உபரி உழைப்புதான் முதலாளிகளின் லாபமாக மாறுகிறது என்பதையும் அந்த லாபம் மீண்டும் அதே தொழிலாளிகளைச் சுரண்டுவதற்கு பயன்படுத்தப்படுகிறது என்பதையும், சிங்காரவேலர் தனது கட்டுரைகளில் சுட்டிக்காட்டியதோடு

தொழிலாளர் கூட்டங்களிலும் பேசினார். 1921ஆம் ஆண்டு மே 19ஆம் தேதியன்று சூளை மில் தொழிலாளர் கூட்டத்தில் சிங்காரவேலர் பேசியதாவது: “நண்பர்களே! உங்களைப் போலவே நானும் ஒரு தொழிலாளியாவேன். நான் வயல்களில் வேலை செய்கிறேன். நிலத்தை உழுகிறேன். செடிகளுக்குத் தண்ணீர்ப் பாய்ச்சுகிறேன். என் மூதாதைகள் செம்படவ வம்சத்தைச் சேர்ந்தவர்கள். நான் உங்களுக்குப் புதியவனல்ல… சில வருட காலமாக நான் தொழிலாளிகளின் விஷயங்களைப் பற்றி படித்து வருகிறேன். நீங்கள் உங்களை முன்னேற்றிக் கொள்வதற்காகச் செய்யும் போராட்டங்களையும் நான் கவனித்து வருகிறேன்.

அவ்விடங்களிலுள்ள தொழிலாளர்களும் உங்களைப் போலவே கஷ்டப்பட்டுக் கொண்டு வருகின்றனர். ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான் நாடுகளிலுள்ள தொழிலாளர்களும் உங்களைப் போலவே கஷ்டங்கள் அனுபவித்து வருகின்றனர். அது பற்றி நீங்கள் உலகத்திலுள்ள தொழிலாளர்களுடன் நேசபாவம் பாராட்டுவது அவசியமென்று எனக்குத் தோன்றுகிறது… “உலகத்திலுள்ள தொழிலாளர்களும் உங்களுக்கிருக்கின்ற நோக்கங்களையே கொள்கிறார்கள். உங்களுக்கு இருக்கப்பட்ட துக்கங்கள் அவர்களுக்கும் இருக்கின்றன. நீங்கள் கொண்டுள்ள எண்ணங்களைத் தான் அவர்களும் கொண்டுள்ளார்கள். உலகத்திலுள்ள தொழிலாளர்களும் நம்மைச் சேர்ந்தவர்கள் தான் என்று கருத வேண்டும். அது தான் உங்கள் சங்கத்தின் முக்கிய நோக்கமாகும். “உலகத்துக்குத் தொழிலாளர் எவ்வளவு அவசியம் என்பதை நீங்கள் உணரவில்லையெனத் தெரிகிறது.
தொழிலாளர் எவ்வளவு முக்கியம் என்பதை நம் நாட்டில் பரவிக்கிடக்கும்

தொழிலாளர் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் நன்கு உணரவில்லை போலிருக்கிறது. நிலத்திலிருந்து கிடைக்கும் நெல்லும், சுரங்கங்களிலிருந்து எடுக்கப்படும் உலோக வகைகளும் தொழிலாளரைப் பொறுத்ததே. ரயில்வேக்களும் நீராவிக் கப்பல்களும் தொழிலாளர் முயற்சியாலேயே ஓடுகின்றன. உலகத்தில் உற்பத்தியாகும் எல்லாப் பொருட்களும் தொழிலாளர்களையே பொறுத்திருக்கின்றன. உலகத்தாருக்கு வேண்டிய சாமான்களையெல்லாம் தொழிலாளர்களே செய்கிறார்கள். சுருங்கக் கூறுமிடத்து உலகமே தொழிலாளர்களால் நடைபெறுகிறதென்று கூறலாம்.

“நீங்கள் எல்லாவற்றையும் உற்பத்தி செய்கிறீர்கள். ஆனால் உங்களுக்கு ஒன்றுமே சொந்தமில்லை. உலகத்தில் செல்வம் பெருகிக்கிடக்கின்றது. ஆனாலும் உங்களுக்குப் போதுமான உணவும், உடையும், இருப்பிடமும் கிடையா, ஏராளமான விளைபொருட்கள் இருந்தும் ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். ஏன்? தொழிலாளர்கள் பொருளை அபரிமிதமாய் உற்பத்தி செய்கிறார்கள். அப்படியிருந்தும் அவர்களுக்குப் போதுமான அளவு பொருட்கள் கிடைப்பதில்லை. பொருட்களை உற்பத்தியாக்குவோனுக்கும், அதை வாங்கி அனுபவிப்பவனுக்கும் இடையில் மூன்றாவது மனிதன் ஒருவன் இருக்கிறான். அவன்தான் எல்லாவற்றிற்கும் சொந்தக்காரனாகப் பாவிக்கப்படுகிறான். இவன் நிலத்தில் விளையும் பொருட்களையும் சுரங்கங்களிலிருந்து தோண்டியெடுக்கப்படும் உலோக வகைகளையும், ரயில்வேக்களையும் கப்பல்களையும் தொழிற்சாலைகளையும் தன்னுடையதாக ஆக்கிக்கொண்டு தன்னிஷ்டம்போல் விலை ஏற்படுத்துகிறான்.

இதனால்தான் பஞ்சம், நோய், கஷ்டங்கள், அமைதியின்மை, வேலைநிறுத்தங்கள், ராஜியப் புரட்சிகள் ஆகிய இவைகள், உலகம் முழுமையிலும் ஏற்படுகின்றன. இவன்தான் முதலாளி…”

‘இந்து’ ஆங்கில நாளிதழிலும், ‘ஸ்வதர்மா’ இதழிலும், தான் எழுதிய கட்டுரைகளில் சிங்காரவேலர், தொழிலாளிகளுக்கு சில விஷயங்களை மிகவும் தெளிவாக்கினார். ஆங்கிலேயரின் ஆட்சியிலிருந்து இந்தியா விடுதலையடைய வேண்டியது முதன்மையான தேவை என்பதையும் நடப்பிலுள்ள அரசு என்பது முதலாளிகளையும், அதிகாரவர்க்கத்தையும் கொண்டதாக இருப்பதால் அது தொழிலாளிகளுக்கு எவ்வித நன்மையையோ, பயனையோ அளிக்காது என்பதை புலப்படுத்தியுள்ளது என்று சிங்காரவேலர் சுட்டிக்காட்டினார். ஒன்றுபட்ட தொழிலாளரை அழிக்க முடியாது. சட்டத்திற்கு அளவற்ற ஆற்றல் உண்டு என்று கூறுவது மூடக் கொள்கை. உழைப்பு என்பது அமைதியில் பிறந்து அமைதியில் வளர்ந்து அமைதியில் பயிற்சிபெறுகிறது. காலடியில் அது நசுக்கப்படும்பொழுது நிந்திக்கப்படும்போது, அதன் கண்ணியம், தகுதி, அதன் வாழ்வு இவையெல்லாம் கவரப்படும்போது அது தன் குறிக்கோளை அடைய பிற வழிகளைப் பற்றிச் சிந்திக்கலாம். தொழிலாளர்கள் தங்கள் பிறப்புரிமைகளை அடைய எந்த முறைகளைப் பயன்படுத்துவது என்பது அந்த உரிமைகள் குறித்து உடமைவர்க்கங்கள் காட்டும் மனப்பான்மையைப் பொறுத்து இருக்கும் என்று சிங்காரவேலர் தெளிவுபடக் கூறினார். ‘நவசக்தி’ நாளிதழில் எழுதிய கட்டுரையொன்றில் லெனின் தலைமையில் நிறுவப்பட்டுள்ள மூன்றாவது அகிலமே

தொழிலாளர் நலத்தை நாடுவதாகுமென்றும், இந்தியாவிற்குத் தகுந்தபடி அதன் விதிகளைத் திருத்திக் கொண்டு காரியங்களைச் செய்தால் சச்சரவுகளும் பிணக்குகளும் ஏற்படாது என்றும் அந்த அகிலத்தினால் உலகத்திலுள்ள இதர தொழிலாளர் சங்கங்களுக்கும் நன்மை ஏற்படும் என்றும் சிங்காரவேலர் சுட்டிக்காட்டினார்.

# இந்தியாவின் முதல் மே தினமும், தொழிலாளி வர்க்கத்தின் புதிய அரசியல் கட்சியும்

-நவம்பர் 7, 2019




1923ஆம் ஆண்டு மே மாதம் ஒன்றாம் தேதி இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்க வரலாற்றில் ஒரு மகத்தான நாளாகும். எட்டு மணி நேர வேலைநாள் கோரி அமெரிக்காவில் சிக்காகோ தொழிலாளிகள் ரத்தம் சிந்தி வென்றெடுத்த அந்த மகத்தான உரிமையை உலகத்தொழிலாளிகள் வர்க்கத்திற்கு நினைவுபடுத்தும் நாள்தான் மே முதல்நாள். இந்தியாவில் முதன் முறையாக அந்த பெருமைக்குரிய தினத்தை சென்னையில் சிறப்பாகக் கொண்டாடச் செய்தார் சிங்காரவேலர். பம்பாய், கல்கத்தா நகரங்களில் 1927ஆம் ஆண்டில்தான் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் (ஏஐடியுசியின்) வழிகாட்டுதலின் கீழ் முதல் மே தினம் கொண்டாடப்பட்டது. ஆனால் சிங்காரவேலரின் முன் முயற்சி காரணமாக அது இந்தியாவில் முதன் முதலாக 1923ஆம் ஆண்டிலிருந்தே துவங்கிவிட்டது என்பது ஒரு எழுச்சிகர நிகழ்வாகும். அத்துடன் தொழிலாளி வர்க்கத்திற்கு அதனுடைய சொந்த அரசியல் கட்சி அவசியம் தேவை என்று மார்க்சும், ஏங்கெல்சும் வலியுறுத்திய அடிப்படையில் இந்தியாவில் முதல்முறையாக சிங்காரவேலர் இந்த கூட்டத்தில்தான் தொழிலாளர், விவசாயிகள் கட்சி என்ற கட்சியை உருவாக்கி அதன் தமிழ் பிரகடனத்தையும் அவர் முன்மொழிந்தார். இந்தக் கட்டுரையானது இந்தியாவில் மே தினம் உருவாக்கப்பட்டது, தொழிலாளி வர்க்கத்திற்கென தனி அரசியல் கட்சி உருவாக்கப்பட்டது ஆகியவற்றை விளக்குகிறது.

- என்.ராமகிருஷ்ணன்

…

1923ஆம் ஆண்டு மே மாதம் ஒன்றாம் தேதி இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்க வரலாற்றில் ஒரு மகத்தான நாளாகும். எட்டு மணி நேர வேலைநாள் கோரி அமெரிக்காவில் சிக்காகோ தொழிலாளிகள் ரத்தம் சிந்தி வென்றெடுத்த அந்த மகத்தான உரிமையை உலகத்தொழிலாளிகள் வர்க்கத்திற்கு

நினைவுபடுத்தும் நாள்தான் மே முதல்நாள். இந்தியாவில் முதன் முறையாக அந்த பெருமைக்குரிய தினத்தை சென்னையில் சிறப்பாகக் கொண்டாடச் செய்தார் சிங்காரவேலர். பம்பாய், கல்கத்தா நகரங்களில் 1927ஆம் ஆண்டில்தான் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் (ஏஐடியுசியின்) வழிகாட்டுதலின் கீழ் முதல் மே தினம் கொண்டாடப்பட்டது. ஆனால் சிங்காரவேலரின் முன் முயற்சி காரணமாக அது இந்தியாவில் முதன் முதலாக 1923ஆம் ஆண்டிலிருந்தே துவங்கிவிட்டது என்பது ஒரு எழுச்சிகர நிகழ்வாகும். அத்துடன் தொழிலாளி வர்க்கத்திற்கு அதனுடைய சொந்த அரசியல் கட்சி அவசியம் தேவை என்று மார்க்சும், ஏங்கெல்சும் வலியுறுத்திய அடிப்படையில் இந்தியாவில் முதல்முறையாக சிங்காரவேலர் இந்த கூட்டத்தில்தான் தொழிலாளர், விவசாயிகள் கட்சி என்ற கட்சியை உருவாக்கி அதன் தமிழ் பிரகடனத்தையும் அவர் முன்மொழிந்தார். இந்தக் கட்டுரையானது இந்தியாவில் மே தினம் உருவாக்கப்பட்டது, தொழிலாளி வர்க்கத்திற்கென தனி அரசியல் கட்சி உருவாக்கப்பட்டது ஆகியவற்றை விளக்குகிறது.

- என். ராமகிருஷ்ணன்

சென்னையில் தொழிலாளி வர்க்கத்தின் உரிமை நாளான மே தினத்தை கொண்டாடுவது அவசியம் என்ற முடிவுக்கு வந்த சிங்காரவேலர் 1923ஆம் ஆண்டின் மே முதல் நாள் சென்னையில் சிறப்பாகக் கொண்டாடப்படுமென அறிவிப்புச் செய்து அதற்கான தயாரிப்புப் பணிகளில் ஈடுபட்டார். அதே கூட்டத்திலேயே தான் உருவாக்கியுள்ள

இந்துஸ்தான் தொழிலாளர் - விவசாயிகள் கட்சியைத் துவக்கி வைப்பதென்றும் அவர் முடிவு செய்தார். மே முதல் நாள் மதியத்தில் சென்னையில் இருபெரும் ஊர்வலங்கள் நடைபெற்றன. வட சென்னைத் தொழி லாளர்களின் பெரும் ஊர்வலம் பல பகுதிகளைச் சுற்றியலைந்து உயர்நீதிமன்றக் கடற்கரையில் (இன்றைய பீச் ரயில் நிலையம்) முடிவுற்றது. தென் சென்னைத் தொழிலாளர்களின் பெரும் ஊர்வலம் திருவல்லிக்கேணி கடற்கரையில் முடிவுற்றது. தென் சென்னைக் கூட்டத்தில் சிங்காரவேலர், பிரபல காங்கிரஸ் தலைவர் சுப்ரமணிய சிவா, கிருஷ்ணசாமி சர்மா, சங்கர்லால் மற்றும் புதிய கட்சியின் செயலாளர் எம்.பி.எஸ். வேலாயுதம் ஆகியோர் மே தினத்தின் சிறப்புக்களையும் புதிய கட்சியின் கொள்கையையும் விளக்கிப் பேசினர்.

வடசென்னை தொழிலாளர் கூட்டத்திலும் சிங்காரவேலரும், எம்.பி.எஸ். வேலாயுதமும் பேசினர். அவர்களுடன் அச்சகத் தொழிலாளி பி.நடேச முதலியார் என்பவரும் உரையாற்றினார். இவ்விரு கூட்டங்களிலும் தொழிலாளர் - விவசாயிகள் கட்சியின் கொள்கை அறிக்கையை சிங்காரவேலர் தமிழில் வெளியிட்டுப் பேசினார். சிங்காரவேலர் மேதினத்தின் முக்கியத்துவத்தை விவரித்துக் கூறினார். மே தினம் என்பது உலகம் முழுவதிலுமுள்ள தொழிலாளிகளுக்கு ஒரு புனிதமான தினமாகும். இந்தியாவிலுள்ள தொழிலாளிகளும் தங்களுடைய நிலைமைக்கேற்றவாறு அதைக் கொண்டாடுவதோடு உலகின் இதர பகுதிகளில் உள்ள தங்களுடைய தோழர்களோடு தங்கள் ஒற்றுமையை உறுதிப்படுத்த வேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டார். தொழிலாளர் - விவசாயிகள்

கட்சியின் திட்டத்தையும், லட்சியத்தையும் விவரித்துப் பேசிய சிங்காரவேலர். அந்தக் கட்சியானது, ஒரு பொதுவான லட்சியத்திற்காகவே, தொழிலாளிகள் ஒருமைப்பாடு என்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளது. இத்தகைய இயற்கையான வளர்ச்சிப் போக்கின் விளைவாக ஒரு மகத்தான போராட்டத்தை நடத்தியபின் தொழிலாளிகள் இறுதியில் அதிகாரத்தைப் பிடிப்பார்கள் என்றும் சிங்காரவேலர் நம்பிக்கை தெரிவித்தார்.

தொழிலாளர் சுயராஜ்யமென்பதை முதலாளிகள் வெறுத்த போதிலும் தொழிலாளர்கள் அதை தமது இலக்காக வைத்துக் கொள்ள வேண்டும். அந்த சுயராஜ்யத்தை தொழிலாளர்கள் அடைந்தால் அன்றி அவர்களுடைய நிலைமைகள் திருந்தாது என்றும் சிங்காரவேலர் கூறினார். அவருக்குப் பின் கூட்டத்தில் பேசிய பி.நடேச முதலியார் 'தொழிலாளிகளைப் பாதுகாக்க ஒரு கட்சி அவசியம்' என்று கூறினார். திருவல்லிக்கேணி கடற்கரையில் நடந்த கூட்டத்திற்கு எஸ்.கிருஷ்ணசாமி சர்மா தலைமை தாங்கினார். விவசாயிகளும், தொழிலாளிகளும் தங்களுக்கென்று ஒரு அரசியல் கட்சியை உருவாக்கிக் கொள்ள வேண்டுமென்று அறைகூவல் விடுக்கும் தமிழ்ப் பிரகடனத்தின் பிரதானப் பகுதியை எம்.பி.எஸ். வேலாயுதம் வாசித்தார்.

கூட்டத்தில் சுப்ரமணிய சிவாவும் சங்கர்லாலும் பேசினர். சென்னையில் நடைபெற்ற முதல் மேதினக் கூட்டங்கள் ஒரு முக்கியமான தீர்மானத்தை நிறைவேற்றின. மே தினத்தை அரசாங்கம் விடுமுறை நாளாக அறிவிக்க வேண்டுமென்று கோரும் தீர்மானமே அது.

# புதிய மார்க்சிய ஏடுகள் உருவாகின்றன

- என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 8, 2019




…

மார்க்சும், ஏங்கெல்சும் மார்க்சியத்தை 1844ஆம் ஆண்டில் உருவாக்கியதிலிருந்து அவர்கள் தங்கள் கருத்துக்களை தொழிலாளி வர்க்கத்தினரிடமும், மக்களிடமும் கொண்டு செல்ல பெரும் கருவியாக

பத்திரிகைகளை உருவாக்கினர். ஏராளமான சிறிய பிரசுரங்களை வெளியிட்டனர். பின்னர் பெரிய புத்தகங்களை எழுதி மார்க்சியக் கொள்கைகளைப் பரப்பினர். 1844ஆம் ஆண்டில் மார்க்ஸ் முதல் முறையாக பிரெஞ்ச் - ஜெர்மன் வருடாந்திர மலர் என்ற ஏட்டை வெளியிட்டார். பின்னர் 1848ஆம் ஆண்டில் நியூ ரைனிஷ் ஜைட்டூன் என்ற ஏட்டை வெளியிட்டார். பின் 1851ஆம் ஆண்டில் லண்டனில் இருந்து ‘ஆராய்ச்சி’ என்ற இதழை வெளியிட்டார். நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன் என்ற நியூயார்க் நாளேட்டிற்கு ஏராளமான கட்டுரைகளை எழுதினார். ஏனென்றால் பத்திரிகைகள் மூலம்தான் கருத்துக்களை பரப்ப முடியும் என்று அவர் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தார். அதேபோல் ரஷ்ய கம்யூனிஸ்ட் தலைவர் லெனின் இஸ்க்ரா (தீப்பொறி) என்ற பத்திரிகையையும் பின்னர் பிராவ்தா என்ற பத்திரிகையையும் நடத்தினார். கட்சிப் பத்திரிகை என்பது கட்சி பிரச்சாரகன், கூட்டு அமைப்பாளன் என்று லெனின் உறுதியாகக் கூறினார். அதையேற்று சிங்காரவேலர் சென்னையில் தொழிலாளன் என்ற வார ஏட்டையும் தொழிலாளர் விவசாயிகள் கெஜட் என்ற ஆங்கில ஏட்டையும் துவக்கினார். அதேபோன்று எஸ்.ஏ.டாங்கே பம்பாயில் சோசலிஸ்ட் என்ற ஏட்டை துவக்கினார். பிற மாநிலங்களில் இன்குலாப், ஆத்ம சக்தி போன்ற ஏடுகளையும் கம்யூனிஸ்ட்டுகள் துவக்கினார்கள். இக்கட்டுரையானது இவையனைத்தையும் விளக்குகிறது.

என். ராமகிருஷ்ணன்

தொழிலாளி வர்க்கத்திற்கு அரசியல் போதனையூட்டுவதற்கும் அவர்களின் போராட்டச் செய்தியினை வெளியிடும் பொருட்டும் 1923ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் சிங்காரவேலர் ‘தொழிலாளன்’ என்ற தமிழ் வார ஏட்டினைத் துவக்கினார். தொழிலாளி வர்க்கம் அவசிய அரசியலில் பங்கேற்க வேண்டுமென்பதை அந்த ஏடு வலியுறுத்தியது.

புதிய தமிழ் வார ஏடாகிய தொழிலாளியின் முதல் இதழ் எங்களுக்குக் கிடைத்துள்ளது. தொழிலாளர் நலத்திலேயே முற்றிலும் ஈடுபாடு உடைய ஒரு செய்தித்தாளின் தேவை தமிழ்நாட்டில் கட்டாயமாகத் தேவைப்பட்டது. புதிய ஏடு இத்தேவையை இப்பொழுது நிறைவேற்றும் என்று நாங்கள் நம்புகிறோம். பிற நாடுகளில் தொழிலாளர் அடைந்துள்ள முன்னேற்றம், வளர்ச்சி, இந்தியத் தொழிலாளரின் இரங்கத்தக்க நிலை, தொழிலாளர் மகிழ்ச்சியான வாழ்க்கை நடத்துவதற்கு உரிய வழிமுறைகள் ஆகியவை தொழிலாளனில் இடம்பெறும் இப்புனிதமான பணி குறித்து அவ்வேடு உண்மையிலேயே பெருமிதம் கொள்ளலாம். தொழிலாளர்கள் வாங்கக்கூடிய வகையில் அவ்வேட்டின் விலை அரை அணாவாக வைக்கப்பட்டுள்ளது.

இவ்வார ஏடு எம். சிங்காரவேலு செட்டியாரின் முன் முயற்சியால் தொடங்கப்பட்டுள்ளது. தொழிலாளரின் வாழ்க்கை நிலைமைகளை உயர்வுறச் செய்ய அவரது தன்னலமற்ற முயற்சிகளை எல்லோரும் அறிவர். எம்.என்.ராய் பெர்லினிலிருந்து நடத்தி வந்த ‘இந்திய சுதந்திரத்தின் முன்னணிப் படை’ என்ற ஏடானது, இந்தப் புதிய பத்திரிகையை வாழ்த்தி வரவேற்றது. எம்.சிங்காரவேலுவை ஆசிரியாகக்

கொண்ட இந்தியக் கம்யூனிசத்தின் மாதமிருமுறை இதழாகிய 'தொழிலாளர் - விவசாயிகள் கெஜட்'டின் முதல் இதழின் பிரதிகளை நாங்கள் மிக்க மகிழ்ச்சியுடன் பெற்றோம். இந்திய நாட்டின் தொழிலாளர் - விவசாயிகள் கட்சியின் கொள்கை பரப்பும் கருவியாகும் அது. தாய்மொழியில் அது தொழிலாளன் என்று வெளிவரும்.

அந்த ஏட்டின் கொள்கையாவது தொழிலாளர் - விவசாயத் தொழிலாளர் ஆகியோரது சுதந்திரத்திற்காகவும், உலகத் தொழிலாளரின் ஒருமைப்பாட்டுக்காகவும் பாடுபடுவதாகும். இந்தியாவின் சுதந்திரத்திற்காகவும் உலகக் கம்யூனிசத்துக்காகவும் அது பாடுபடும். அது அனைத்து நாடுகளின் அனைத்துத் தொழிலாளரும் அனைத்துக் காலங்களிலும் மகிழ்ச்சியாகவும் நலமாகவும் இருப்பதற்கு என பாடுபடும். அது ஒரு மாபெரும் பணியாகும். புதிய போராட்டத் தோழனுக்கு எங்களது மனப்பூர்வமான வரவேற்பை அளிக்கிறோம். இந்தியப் பாட்டாளி வர்க்கத்தின் போராட்டத்தில் அது சிறப்பான பங்கினை ஆற்றுமென நாங்கள் நம்புகிறோம். இவ்வாறு அந்த ஏடு புதிய பத்திரிகையை வரவேற்றது.

இவ்விரு புதிய பத்திரிகைகளும் சில மாதகாலத்திற்கு மட்டுமே வெளிவர முடிந்தன. 1924ஆம் ஆண்டில் ஆங்கிலேய ஆட்சியாளர்கள் இந்தியாவிலிருந்த கம்யூனிஸ்ட் குழுக்கள் மீது தாக்குதல் தொடங்கிய நேரத்தில் அவை நிறுத்தப் பட்டன. 'தொழிலாளர்- விவசாயிகள் கெஜட், ஏடுதான் இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஏடு என்று தன்னைப் பிரகடனப் படுத்திக் கொண்டு வந்த முதல் ஏடாகும். ஒரு சில இதழ்களே

வெளிவர முடிந்த தென்றாலும் அந்த ஏடானது தொழிலாளர் -விவசாயிகள் இயக்கத்தின் ஆரம்ப காலச் சின்னமாக விளங்கியது.‘

தமிழகத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் தோற்றமும் வளர்ச்சியும் நூலிலிருந்து…

# கான்பூர் முதல் கம்யூனிஸ்ட் மாநாடு

- என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 9, 2019




…

நேற்றைய இதழில் கான்பூர் கம்யூனிஸ்ட் சதிவழக்கு விசாரணையின்பொழுது பார்வையாளர் அமர் மன்றத்தில் சத்ய பக்தா என்பவர் அமர்ந்திருந்தார் என்று குறிப்பிட்டிருந்தோம். யார் அந்த சத்ய பக்தா?

அவர் தேசிய மனப்பான்மைக் கொண்டவர். அதே நேரத்தில் ரஷ்யப் புரட்சி, லெனின், ரஷ்யாவின் சாதனைகள் போன்றவற்றையும் பத்திரிகையில் படித்து அந்த ஈர்ப்புக்கு ஆளானவர். ‘தலைமறைவு ரஷ்யா’ என்ற புத்தகத்தைப் படித்து ரஷ்யப் புரட்சியை குறித்து அறிந்து கொண்டவர். சிறிது காலம் கழித்து நாகபுரியிலிருந்து பிரணவீர் என்ற பெயரில் இந்தி மொழியில் ஒரு வார இதழை நடத்தினார். அப்போது பம்பாயில் ‘சோசலிஸ்ட்’ பத்திரிகையை நடத்தி வந்த எஸ்.ஏ.டாங்கேவுடன் தொடர்பு வைத்துக் கொண்டார். பின்னர் கான்பூருக்கு வந்த சத்ய பக்தா ஒரு புத்தகக் கடையை நடத்தியதோடு, மகாத்மா காந்தி, லெனின், கிலாபத் இயக்கத்தில் பிரபலமாக இருந்த முகமது அலி, செளகத் அலி என்ற அலி சகோதரர்கள் ஆகியோரது படங்களை அச்சிட்டு விற்றார். போல்ஷ்விக் ரஷ்யாவைக் குறித்து பலரிடம் பேசுவார். இதன் மூலம் கம்யூனிஸ்ட் ஆதரவாளர் என்று முத்திரைக் குத்தப்பட்டு ரகசிய காவல்துறை கண்காணிப்புக்கு ஆளானார். உண்மையில் கான்பூர் சதி வழக்கில் காவல்துறை இவர் பெயரையும் சேர்த்திருந்தது. ஆனால் அரசாங்க வழக்கறிஞர்கள் இவர் பெயரை அந்த பட்டியலிலிருந்து நீக்கிவிட்டனர்.

சத்ய பக்தா தனது நண்பர்களை உறுப்பினராக்கி ஓர் அமைப்பை உருவாக்கினார். ஒரு புதிய கட்சி பிரகடனம் செய்தார். ஆங்கிலேய அரசாங்கம் முதலில் அதை தடை செய்தது. பின்னர் அந்தத் தடையை நீக்கியது. 1925ஆம் ஆண்டு இறுதியில் 250 உறுப்பினர்களை அதில் சேர்த்து விட்டார். அவர்களுக்கு கம்யூனிஸ்ட் கருத்துக்கள் எதுவும் தெரியாது. ஆனால் ரஷ்யப் புரட்சியின் சாதனைகள் மட்டும் தெரியும்.

கான்பூர் சதி வழக்கில் துவக்கம் முதல் நீதிமன்றத்திற்கு வந்து விவாதத்தைக் கவனித்து வந்த சத்ய பக்தா முதல் நாள் அரசாங்க வழக்கறிஞரான ரோஸ் அல்ஸ்டன் என்ற பாரிஸ்டர் கூறிய ஒரு வாக்கியத்தினால் மிகவும் ஈர்க்கப்பட்டார். “கம்யூனிச கருத்துக்களை ஆதரிப்பவர்கள் என்ற காரணத்தினாலோ அல்லது கம்யூனிசம் என்ற கொள்கைக்கெதிராகவோ இந்த வழக்கு தொடரப்படவில்லை” என்று அவர் கூறியது சத்ய பக்தாவுக்கு மிகவும் பிடித்தமாக இருந்தது. எனவே இப்பொழுது அந்த வாக்கியத்தை மனதில் கொண்டு இந்தியாவில் ஏன் ஒரு கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கக் கூடாது என்ற முடிவுக்கு சத்ய பக்தா வந்தார். இதைத் தொடர்ந்து அவர் பத்திரிகைகளுக்கு ஒரு அறிக்கை வெளியிட்டார். “இந்தியன் கம்யூனிஸ்ட் கட்சி என்ற பெயரில் ஒரு கழகம் (society) கான்பூரில் நிறுவப்படவுள்ளதாகவும் அதனுடைய நோக்கமானது பொது மக்களிடையே கம்யூனிச போதனைகள் குறித்து பிரச்சாரம் செய்வது என்றும் அறிவித்தார். ஒரு பாட்டாளி வர்க்க இயக்கத்தையோ அல்லது வெகுஜன கிளர்ச்சியையோ துவக்கும் முன் இது ஒரு அவசியமான நடவடிக்கை என்று அவர் கருதினார். (சத்ய பக்தா : Early days of Communist movement in India)

அச்சமயத்தில்தான் இந்திய தேசிய காங்கிரசின் 40 வது மாநாடு கான்பூரில் நடக்கப்போவதாக அறிவிப்பு வெளியானது. அதைக் கண்ட சத்ய பக்தா தனது நண்பர்களுடன் ஆலோசித்து அவர்கள் உதவி செய்வதாக சொன்ன அடிப்படையில் “இந்தியன் கம்யூனிஸ்ட்டுகளின் முதல் வருடாந்தர மாநாடு 1925 டிசம்பர் மாத கடைசி வாரத்தில் கான்பூரில் நடைபெறும்” என்று அறிவித்தார். இந்த மாநாட்டுக்கு தலைமை வகிக்கும்படி

இங்கிலாந்து நாடாளுமன்ற உறுப்பினரும், கம்யூனிஸ்ட் தலைவருமான ஷாபூர்ஜி சக்லத்வாலாவை கேட்டுக் கொண்டார். ஆனால் அவர் வந்து செல்ல கப்பல் பயணக் கட்டணம் ஏற்பாடு செய்வது சிரமமாக இருந்ததால் சிங்காரவேலரை மாநாட்டுக்கு தலைமை தாங்கி நடத்தி தருமாறு சத்ய பக்தா கேட்டுக் கொண்டார். அதற்கு அவர் சம்மதித்தார். இதைத் தொடர்ந்துதான் முசாபரும் அந்த மாநாட்டிற்கு வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டு முசாபர் அகமதுவிற்கு சத்ய பக்தா 30 ரூபாய் அனுப்பினார்.

திட்டமிட்டபடி கம்யூனிஸ்ட் மாநாடு டிசம்பர் 26ஆம் தேதி துவங்கியது. சிங்காரவேலர் தலைமை வகித்தார். கான்பூரின் பிரபல காங்கிரஸ் தலைவரும், இடதுசாரி சிந்தனை கொண்டவருமான மௌலானா ஹஸரத் மொகானி வரவேற்புரை நிகழ்த்தினார். இந்த மாநாடு எவ்வாறு நடைபெற்றது என்பதை சத்ய பக்தாவே விவரித்தது சுவையாக இருக்கும். “மாநாடு ஒரு பழைய கூடாரத்தில் நடைபெற்றது. நாற்காலிகளோ, மேசைகளோ கிடையாது. மின்சார விளக்குகள் கிடையாது. ஒலிபெருக்கி கிடையாது. ஏன், அமர்வதற்கு நல்ல ஜமக்காளம் கூட விரிக்கப்படவில்லை. ஆனால் ஒரு லட்சிய வேகம் இருந்தது. சிங்காரவேலுச் செட்டியாருக்கு போக்குவரத்து செலவுக்கென்று எதுவும் கொடுத்ததாக எனக்கு நினைவில்லை. வெறும் ஐநூறு ரூபாயில் இந்த மாநாட்டை நடத்தினோம். (சத்ய பக்தா முன் சொன்ன கட்டுரை)

இந்த மாநாட்டில் லாகூரைச் சேர்ந்த சும்சுதீன் ஹாசன்,பம்பாயைச் சேர்ந்த எஸ்.வி.காட்டே, கே.என்.ஜோக்லேகர், ஆர்.எஸ்.நிம்ப்கர், பிகானீரைச்

சேர்ந்த ஜானகி பிரசாத் பாகர் கட்டா, ஜான்சியைச் சேர்ந்த அயோத்யா பிரசாத், சென்னையைச் சேர்ந்த சி.கிருஷ்ணசாமி அய்யங்கார் ஆகியோர் கலந்து கொண்டனர். கிருஷ்ணசாமி அய்யங்கார், ராஜாஜியின் உறவினராவார். மாநாட்டுக்கு தலைமை வகித்த சிங்காரவேலர் தொடக்கத்தில் ஜெர்மனியில் பிற்போக்காளர்களால் படுகொலை செய்யப்பட்ட கம்யூனிஸ்ட் தலைவர்கள் ரோஸா லக்சம்பர்குக்கும், காரல் லீப்னெக்டுக்கும், பிரான்ஸ் நாட்டு தொழிலாளர் தலைவர் எம்.ழுவாரே என்பவருக்கும் அஞ்சலி செலுத்தினார். அதேபோன்று சென்னை கான்பூர் மற்றுமிதர இந்திய நகரங்களில் சுதந்திரப் போராட்டத்தில் தங்கள் இன்னுயிரை நீத்தவர்களுக்கும் சிங்காரவேலர் அஞ்சலி செய்தார். மறைந்த தலைவர் லெனினுக்கு அஞ்சலி செலுத்திப் பேசுகையில் ‘தொழிலாளர் - விவசாயிகள் ‘கெஸட்’ பத்திரிகையில் லெனின் குறித்து, தான் எழுதியிருந்த புகழுரையை சிங்காரவேலர் படித்துக் காண்பித்தார்.

(தொடர்ச்சி நாளை…)

# கான்பூர் முதல் கம்யூனிஸ்ட் மாநாடு அகில தொடர்பு குறித்த விவாதம்

- என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 10, 2019




…

மறைந்த காங்கிரஸ் தலைவர்கள் திலகர், சி.ஆர்.தாஸ், சுப்ரமணிய சிவா ஆகியோருக்கும் சிங்காரவேலர் அஞ்சலி செலுத்தியதோடு மறைந்த தலைவர்கள் நினைவாக மாநாட்டுப் பிரதிநிதிகள் சில நிமிட நேரம்

அமைதியாக எழுந்து நின்று மவுன அஞ்சலி செய்யும்படி கேட்டுக் கொண்டார்.

அதன்பின் சிங்காரவேலர் தனது தலைமையுரையாற்றினார்.

சோவியத் நாட்டிற்கு லெனின் அளித்த வழிகாட்டுதல்களை பாராட்டிப் பேசிய அவர் ரஷ்யாவில் உள்ள சோசலிஸ்ட் ஆட்சி வலுப்படுத்த அவர் வழிகாட்டல் மிகவும் தேவை என்றும் அவரால் துவக்கப்பட்ட மாபெரும் செயல் எதிர்காலத்தில் மனித சமுதாயத்தின் நலத்திற்கு அடித்தளமாக அமையும் என்றும் சுட்டிக்காட்டினார். இந்திய நிலைமைகள் குறித்துப் பேசிய அவர் அடுத்து வரும் காலத்தில் எத்தகைய சுயாட்சி தன்னாட்சி அரசை நாம் அடைந்தாலும் அது இச்சமுதாயத்தில் ஆலைத் தொழிலாளி, விவசாயத் தொழிலாளி ஆகியோர் மனிதராக வாழுவதற்கான உரிமையை அங்கீகரிக்க வேண்டும் என்று வலியுறுத்தினார். கம்யூனிச லட்சியத்தை விளக்கிப் பேசிய சிங்காரவேலர் இந்தியாவில் உள்ள ஒவ்வொரு கம்யூனிஸ்ட்டும் காரல் மார்க்ஸ் உருவாக்கிய தத்துவத்தை புரிந்து கொள்ள வேண்டும், அது மிகுந்த தேவையாகும் என்று வலியுறுத்தினார்.

இந்தியாவில் உள்ள அரசியல் கட்சிகள் குறித்துப் பேசுகையில், அவர் கட்சிகளைத் தரம் பிரித்துக் காட்டினார். காங்கிரஸ் கட்சி மற்றும் சுய ராஜ்ஜிய கட்சி ஆகியவற்றின் தலைவர்களுடைய நலன்களும், தொழிலாளர் வர்க்கத்தின் நலன்களும் ஒன்றுக்கொன்று எதிராக இருக்கின்றன. அந்த தலைவர்கள் தொழிலாளிகள் மற்றும் விவசாயிகள் நலனுக்காக பேசுவதைத் தவிர வேறு எதையும் செய்வதில்லை என்பதை

சுட்டிக்காட்டினார். எனவே கம்யூனிஸ்ட் கட்சியானது தொழிலாளிகள், விவசாயிகள், கிராமப்புற ஏழைகள் என பாட்டாளி மக்களைத் திரட்டி முறையாக அமைக்க வேண்டுமென்று வலியுறுத்தினார். தனது உரையின் இறுதியில் இந்தியாவில் உள்ள கம்யூனிஸ்ட்டுகளின் பணி கம்யூனிசக் கொள்கையையும், செயல்திட்டத்தையும் நிறைவேற்ற உதவும் என்றும் சுதந்திர இந்தியாவில் வளமான எதிர்காலத்தை உறுதிப்படுத்த வேண்டும் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

கட்சியின் பெயர் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (Communist Party of India) என்று மாநாடு முடிவு செய்தது. அத்துடன் கட்சிக்கென ஒரு அமைப்புச் சட்டத்தையும் அது உருவாக்கியது. அடுத்த மாநாடு வரை கட்சியை வழி நடத்திச் செல்ல மத்திய நிர்வாகக்குழு ஒன்றையும் தேர்ந்தெடுத்தது. மாநாட்டுக்கு தலைமை தாங்குபவர்தான் அடுத்த மாநாடு வரை தலைவராக இருப்பார் என்ற வழக்குப்படி சிங்காரவேலரே கட்சியின் தலைவராகச் செயல்பட வேண்டியிருந்தது. ஜே.பி.பகர்கட்டாவும் எஸ்.வி.காட்டேயும் கட்சியின் நிர்வாக குழுவின் பொதுச் செயலாளர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நாட்டின் பல பகுதிகளில் நிர்வாகக்குழுக்களை அமைக்கும் வரை அந்த வேலையைச் செய்வதற்காக செயலாளர் பலர் நியமிக்கப்பட்டனர். அதன்படி சென்னைப் பகுதிக்கு கிருஷ்ணசாமி நியமிக்கப்பட்டார்.

இந்த மாநாட்டில் மற்றொரு விசித்திர சம்பவமும் நடைபெற்றது. இந்த மாநாட்டைக் கூட்டிய சத்ய பக்தா கட்சியின் பெயரை இந்தியன் கம்யூனிஸ்ட் கட்சி என்று வைக்கவேண்டுமென்று வற்புறுத்தினார்.

அவருடைய நோக்கமானது இந்தியன் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் கம்யூனிஸ்ட் அகிலத்திற்கும் எவ்வித தொடர்பும் இருக்கக்கூடாது, அது தேசியக் கட்சி போன்றுதான் இருக்க வேண்டும் என்பதாகும். ஆனால் இந்த மாநாடு அதை ஏற்கவில்லை. ஏனென்றால் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி என்பது உலக கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஒரு பகுதியாகும். அது எக்காரணம் கொண்டும் அகிலத்துடன் தொடர்பில்லாத ஒரு கட்சியாக இருக்க முடியாது என்பதுதான் சத்ய பக்தா தவிர இதர அனைவரும் கொண்டிருந்த கருத்தாகும். தான் கூறியதை மாநாடு ஏற்காததால் கோபமடைந்த சத்ய பக்தா மாநாட்டை அப்படியே போட்டுவிட்டு வெளியேறி விட்டார்! ஆனாலும் இதர பிரதிநிதிகள் அனைவரும் ஒன்றுபட்டு மாநாட்டை சிறப்பாக முடித்தனர். இந்த மாநாட்டிற்குப் பின்னர் 1923ஆம் ஆண்டு மே மாதம் 31ஆம் தேதியன்று பம்பாயில் இந்தியாவின் முக்கிய கம்யூனிஸ்ட்டுகளின் கூட்டம் ஒன்று நடைபெற்றது. மத்திய நிர்வாகக்குழுவின் விரிவாக்கப்பட்ட கூட்டம் என்றும் இது கூறப்படுவதுண்டு.

இந்த விரிவாக்கப்பட்ட கூட்டத்தில் கட்சியின் தலைமைக்குழுவிற்கு முசாபர் அகமது, எஸ்.ஏ.டாங்கே, கிருஷ்ணசாமி உள்ளிட்டு ஐவர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கான்பூர் மாநாட்டில் கட்சியின் இணைச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாகர்கட்டாவின் செயல்பாடுகள் குறித்து இதரத் தோழர்களுக்கு ஐயம் ஏற்பட்டது. எனவே அவர் அப்பொறுப்பிலிருந்து ஒதுங்கிக் கொண்டார். எனவே எஸ்.வி.காட்டே பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சிங்காரவேலர் உள்ளிட்டு

எட்டுப் பேர் நிர்வாகக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். எஸ்.வி.காட்டே பொதுச் செயலாளரானார். அதே ஆண்டு டிசம்பர் மாதத்தில் இந்திய தேசிய காங்கிரசின் மாநாடு சென்னையில் கூடியது. இதில் கலந்து கொள்வதற்காக வந்த கம்யூனிஸ்ட்டுகள் தெற்கு கடற்கரைச் சாலையிலிருந்த சிங்காரவேலரின் இல்லத்தில் கூடி விவாதித்தனர். எஸ்.எஸ்.மிராஜ்கர், தரணி கோஸ்ஸாமி, கே.என்.ஜோக்லேகர், எஸ்.ஏ.டாங்கே, முசாபர் அகமது. பிலிப் ஸ்பிராட், எஸ்.வி.காட்டே, சவுகத் உஸ்மானி, அயோத்யா பிரசாத் போன்றோர் இதில் பங்கெடுத்தனர்.

இந்தக் கூட்டமானது ஒரு முக்கியமான முடிவு எடுத்தது. அகில இந்திய தொழிலாளர் - விவசாயிகள் கட்சியினை அமைப்பது எனவும், இதற்காக ஒரு மாநாட்டைக் கூட்டுவது என்றும், அந்தப் பொறுப்பை முசாபர் அகமதுவிடம் ஒப்படைப்பது என்றும் முடிவு செய்தது….

# பகத்சிங் எப்படி கம்யூனிஸ்ட் ஆனார்?

- என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 11, 2019

…

இந்திய விடுதலைப் போராட்ட நாயகர்களில் ஒருவரான மாவீரன் பகத்சிங், தூக்குக் கயிற்றை முத்தமிட்டத் தருணத்தில் ஒரு கம்யூனிஸ்ட்டாக மிளிர்ந்தார். அவர் எப்படி மார்க்சியத்தால் ஈர்க்கப்பட்டார் என்பது ஒரு

சுவையான கதை. இதுவரையிலும் சொல்லப்படாத அந்தக்கதை, இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் மகத்தான அத்தியாயங்களில் ஒன்று.

1928ஆம் ஆண்டில் அலகாபாத் பல்கலைக்கழகத்தில் எம்.ஏ, படிப்பை முடித்து வழக்கறிஞருக்கான எல்.எல்.பி. பட்டப்படிப்பை மாணவர் பூரண சந்திர ஜோஷி என்ற பி.சி.ஜோஷி படித்துக் கொண்டிருந்தார். மார்க்சிய லட்சியத்தில் ஆர்வம் கொண்டிருந்த அந்த இளம் மாணவர் அச்சமயத்தில் இந்தியாவிற்குள் கடத்தி வரப்பட்ட மார்க்சிய நூல் பலவற்றை தனது பெட்டிக்குள் வைத்திருப்பார். தன் சக மாணவர்களிடையே முற்போக்குச் சிந்தனையுள்ள, தேசபக்தியுள்ள மாணவர்களிடையே ஒவ்வொரு புத்தகமாக கொடுத்து படிக்க வைத்து அவர்களை கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கு ஈர்த்துக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் ஒருநாள் அந்தப் பல்கலைக்கழக சக மாணவர் அஜய் குமார் கோஷ் ஒரு இளம் சீக்கிய வாலிபரை அழைத்து வந்து “ஜோஷி, நீ வைத்திருக்கும் புத்தகங்களை ஒவ்வொன்றாக இவருக்கு கொடு, படித்து விட்டு தந்துவிடுவார் என்று கூறினார்.” ஜோஷியும் சம்மதித்தார். அச்சமயத்தில் அஜய்குமார் கோஷிற்கு பயங்கரவாத புரட்சியின் மீது நம்பிக்கை உண்டு. எனவே அவர் அழைத்து வருபவர்களின் அல்லது அவருடன் பேசிக்கொண்டிருப்பவர்களின் பெயர்களை ஜோஷி கேட்க மாட்டார். இப்பொழுதும் இந்த சீக்கிய வாலிபர் யார்? என்று அஜய் கோஷிடம் கேட்கவில்லை.

அஜய் கோஷ் சொன்னபடியே தன்னிடமுள்ள ஒவ்வொரு புத்தகத்தையும் அந்த சீக்கிய வாலிபரிடம் கொடுப்பார். அவரும் சில நாட்கள் கழித்து அதைக் கொண்டு வந்து திருப்பி தருவார். ஆனால் அந்த புத்தகத்தில் உள்ள

கருத்துக்களைக் குறித்து ஜோஷியிடம் அவர் விளக்கம் கேட்பார். இப்படியே பல வாரங்கள் சென்றன. பின்னர் அந்த வாலிபர் அடிக்கடி பல்கலைக்கழக மாணவர் விடுதிக்கு இரவில் வந்து கலந்துரையாடுவார். ஜோஷி, மார்க்சியம் குறித்து தான் புரிந்து கொண்டதை அவருக்கு விளக்குவார். சில சமயங்களில் நள்ளிரவாகி விடும். அந்த இளைஞர் ஜோஷியுடன் மாணவர் விடுதி உணவகத்தில் சாப்பிட்டுவிட்டு அங்கே தங்கிவிடுவார். இது நாளாக நாளாக இந்த சந்திப்பு அதிகரித்தது. பல மாதங்களுக்கு பிறகு அந்த இளைஞர் வரவேயில்லை. ஜோஷியும் சிறிது காலம் அவரை எதிர்பார்த்தார். ஆனால் அவர் வரவில்லை. 1929ஆம் ஆண்டில் பி.சி.ஜோஷி மீரட் சதி வழக்கில் கைது செய்யப்பட்டு மீரட் சிறையில் அடைக்கப்பட்டார். சிறிது காலம் கழித்து காலைப் பத்திரிகை ஒன்றில் ஒரு செய்தியைப் படித்து ஜோஷி அதிர்ச்சியடைந்தார். அந்தச் செய்தியானது இந்திய நாடாளுமன்றத்தில் முந்தைய நாளில் மூன்று வாலிபர்கள் வெடிகுண்டை வீசி, அது வெடித்ததாகவும் அவர்கள் மூவரும் கைது செய்யப்பட்டதாகவும் கூறி அவர்கள் மூவரின் புகைப்படத்தையும் வெளியிட்டிருந்தது. அந்த மூவரில் ஒருவர் ஏற்கெனவே இவரைச் சந்தித்து பேசிய சீக்கிய வாலிபர்! அந்த படத்திற்குக் கீழே அவர் பெயர் பகத்சிங் என்று போட்டிருந்தது. அப்பொழுதுதான் ஜோஷிக்கு தன்னைச் சந்தித்து நீண்ட உரையாடல் நடத்திய வாலிபர் பகத்சிங்தான் என்று அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைந்தார். ஏனென்றால் அவர் பகத்சிங் குறித்து ஏராளமாக கேள்விபட்டிருந்தார். ஆனால் அவரை ஒருமுறை கூட சந்தித்ததில்லை. அத்துடன் அவரை அறிமுகப்படுத்தும் பொழுது அஜய் குமார் கோஷும்

அவர் யார் என்று சொல்லவில்லை. அக்கால வழக்கப்படி ஜோஷியும் அவர் பெயரைக் கேட்கவில்லை.

இப்பொழுது ஜோஷி சம்பந்தப்பட்ட மீரட் சதி வழக்கு துவங்கியது. அதே நேரத்தில் பகத்சிங், ராஜகுரு, சுகதேவ், சிவவர்மா, அஜய் குமார் கோஷ் மற்றும் பல தோழர்கள் மீது லாகூர் நீதிமன்றத்தில் சதி வழக்கு துவங்கியது. ஜோஷி தவறாமல் அந்தச் செய்திகளைப் படித்து வந்தார். இறுதியில் லாகூர் நீதிமன்றம் பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் ஆகிய மூவருக்கு தூக்குத் தண்டனை விதித்தது. சிவவர்மா, டாக்டர் கயா பிரசாத், பண்டிட் கிஷோரிலால் போன்றோருக்கு ஆயுள் தண்டனை விதித்தது. அஜய் குமார் கோஷ் வயது குறைந்தவராக இருந்ததால் அவர் விடுதலை செய்யப்பட்டார். பகத்சிங்கும்,சுகதேவும், ராஜகுருவும் 1931ஆம் ஆண்டு மார்ச் மாதம் 23ஆம் தேதி தூக்கிலிடப்பட்டனர்.

ஜோஷியை பகத்சிங் சந்தித்தபின் நடந்தது என்னவென்றால், அவர் தன் சக தோழர்களுக்கு குறிப்பாக ராஜகுரு, சுகதேவ் ஆகியோருக்கு மார்க்சியத்தை குறித்து ஜோஷி கூறியதை மனதில் கொண்டு தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில்தான் புரட்சி நடக்கமுடியும் என்றெல்லாம் கூறியிருக்கிறார். ஆனால் அவர்களோ அந்த தனிநபர் பயங்கரவாதத்திலிருந்து விடுபடவில்லை. நாடாளுமன்றத்தில் வெடிகுண்டு வீசுவது, கைதானால் தூக்கு மேடை ஏறுவது என்ற முடிவுக்குப் போய்விட்டனர். அதன் விளைவாகத்தான் அந்த மூவரும் வெடிகுண்டுவீசி கைதானது. சிறையில் பகத்சிங் கிடைத்த மார்க்சிய நூல்கள் அனைத்தையும் படித்தார். மார்க்சியம்தான் ஏற்ற லட்சியம் என்ற முடிவுக்கு வந்தார். நீதிமன்ற

முடிவுப்படி அவர் மார்ச் 24ஆம் தேதிதான் தூக்கிலிடப்பட வேண்டும். ஆனால் ஆங்கிலேய அரசாங்கமோ அந்த நாளில் நாடு முழுவதும் பலத்த எதிர்ப்பு நடவடிக்கைகள் இருக்கும் என்று கருதி மார்ச் 23ஆம் தேதி நள்ளிரவில் தூக்கிலிட முடிவு செய்தது. அந்த நாளின் முன்னிரவில் சிறைக்காவலர்கள் வந்து பகத்சிங்கிடம் உங்களை “இப்பொழுது தூக்கிலிடப் போகிறோம், தயாராகுங்கள்” என்று கூறியபொழுது பகத்சிங் கேட்டிருக்கிறார். “நாளைதானே எங்களை தூக்கிலிட வேண்டும், ஏன் இன்றே தூக்கிலிடப் போகிறீர்கள் என்று கேட்டிருக்கிறார்” “நாளை பெரிய பிரச்சனையாகும்.ஆதலால் இப்பொழுதே அதைச் செய்யப் போகிறோம்” என்று கூறினார்கள். அச்சமயத்தில் அவர் படித்துக் கொண்டிருந்தது லெனினுடைய புத்தகங்களில் ஒன்று. அதை மூடி வைத்துவிட்டு அவர் தூக்கு மேடைக்குச் சென்றார். நள்ளிரவில் அவர்கள் மூவரும் தூக்கிலிடப்பட்டனர். இரவோடு இரவாக ரவி ஆற்றங்கரைக்கு கொண்டு செல்லப்பட்டு அவர்கள் உடல்கள் எரிக்கப்பட்டன.

இச்சம்பவம் நடந்து 41 ஆண்டுகளுக்கு பின்னால் 1969 ஆம் ஆண்டில் பி.சி.ஜோஷி தனது கடந்த கால இயக்க வரலாறை நினைவு கூரும் பொழுது பகத்சிங்கை தான் முதலில் சந்தித்தது, அவருடைய தியாகம், அவருடைய போர்க்குணம் ஆகியவற்றை குறித்து பின்வருமாறு எழுதினார்:

…நாளை தொடரும்

# “மீண்டும் பிறப்பேன் தாயே!”

- என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 12, 2019




…

…நேற்றைய தொடர்ச்சி

“என்னுடைய வாலிபத்தில் பகத்சிங்கை எனக்கு பகத்சிங் என்று தெரியாது; ஆனால் அஜய் கோஷின் நண்பர் என்று தான் தெரியும். அஜய் கோஷ் பயங்கரவாத அமைப்புகளுடன் தொடர்புடையவர் என்பதால் நான்

எவ்வித கேள்வியையும் கேட்கவில்லை. அஜய் கோஷ் இந்து ஹாஸ்டலில் இருந்தார். நான் அலகாபாத் பல்கலைக்கழக ஹாலந்து அரங்கில் இருந்தேன். 1928 வாக்கில் நான் பல்கலைக்கழகத்தின் அரசியல் சிந்தனை கொண்ட மாணவர்களிடையே ஒரு கம்யூனிஸ்ட் என்று பிரபலமாயிருந்தேன். ஒருநாள் அஜய் கோஷ் அவருடைய நண்பரை அழைத்து வந்தார். நான் அவருக்கு மார்க்சிய- லெனினிய நூல்களையும், கம்யூனிஸ்ட் அகிலத்திலிருந்து கடைசியாக வந்துள்ள நூல்களையும், இங்கிலாந்து கம்யூனிஸ்ட் கட்சியின் ஏடுகளையும் அளிக்க வேண்டுமென கூறினார். இவற்றை நான் அயல்நாட்டிலிருந்து என்னுடைய ரகசிய விலாசத்தில் பெற்று வந்தேன். இவ்வாறு தான் அது தொடங்கியது. அஜயின் நண்பர் அலகாபாத்திலிருக்கும் பொழுது வருவார். ஒரு குழந்தையின் வெகுளித்தனத்துடன், இனிய புன்னகை மிளிர இயல்பான தன்மையுடன் மிகவும் வசீகரமான நபராக அவர் காணப்படுவார்.

“தேவையான புத்தகங்களை அவர் எடுத்துக் கொள்வார். அதன்பின் நாங்கள் பல்கலைக்கழக வளாகத்தின் பரந்த பசுமையான தோட்டப் பகுதியில் நடப்போம். எங்களுடைய விவாதங்கள் நீடிக்கும்வரை அல்லது அது ஒரு முடிவுக்கு வரும் வரை அல்லது இரவு உணவுக்கு வெகு நேரமாகிவிட்டது என்றால் திரும்பி வருவோம். நான் அவரை இந்து ஹாஸ்டல் வாயிலில் விட்டுவிட்டு எனது இடத்திற்குத் திரும்பி வருவேன்.

“அது நடந்தது 1928ல். இப்பொழுது 1969; 41 நீண்ட ஆண்டுகள் கடந்துவிட்டன. மிகவும் மனம் திறந்த அல்லது அறிவைத் தேடுவதில் மிகவும் நாட்டம் கொண்ட இத்தகைய ஒரு அரசியல் ஊழியரையோ

அல்லது தலைவரையோ என் வாழ்நாளில் இதுவரை கண்டதில்லை. என் சொந்த அனுபவத்தில் ஜவஹர்லால் நேருவை இரண்டாவது இடத்தில்தான் வைப்பேன். இவ்வாறு தான் பகத்சிங் என் நினைவில் நிற்கிறார்.

“இந்தியாவின் எதிர்காலமானது இடதுசாரிகளையும், அவர்களின் விவேகத்தையும் பலத்தையும் சார்ந்துள்ளது என்பது தெளிவு. இவ்வாரத்தில் பகத்சிங் தினத்தில் இரங்கல் உரைகளை நிகழ்த்துவது போதுமானதல்ல; ஆனால் இடதுசாரி பேச்சாளர்கள் தங்களைத்தாங்களே கேட்டுக் கொள்ள வேண்டிய அவசியமுள்ளது. நமக்குப் பொதுவான மற்றும் சிறந்ததான பகத்சிங்கினுடைய பாரம்பரியத்தை முன்னெடுத்துச் செல்ல அறிவையும் தன்னலமற்ற துணிவையும் போதுமான அளவு பெற்றுள்ளோமா? பகத்சிங், நமது தேசிய அட்டவணையில் அழியாத் தன்மையை எவ்வாறு பெற்றாரென்றால் தனக்கு அதிகம் தெரியாது என்று அவர் உணர்ந்ததாலும், தனக்காகப் படிக்கவும் மற்றும் இதரர்களிடமிருந்து மேலும் கற்றுக் கொள்ளவும் அவர் ஒருபோதும் சளைத்ததில்லை. இதரர்கள் எனும்போது அவரும், அவருடைய கட்சியினரும் கருத்து மாறுபாடு கொண்டவர்கள் ஆவர்; அவர்களில்லாமல் பொதுவான லட்சியத்தை அடையமுடியாது என்று அவர் உணர்ந்திருந்தார். அது அவருடைய துணிவிற்கு நம்பிக்கை சேர்த்தது என்பதுடன் அவர் நாட்டின் தியாக கதாநாயகன் ஆவார். இந்திய இடதுசாரிகள் அவர்களாகவே உயர்ந்து நிற்க அந்த உணர்வும், கண்ணோட்டமும் இன்று நமக்கு மிகவும் தேவைப்படுகிறது.”

பகத்சிங் தூக்கிலிடப்படும் தருவாயிலோ அல்லது தூக்கிலிடப்பட்டவுடனேயோ எழுதப்பட்ட கவிதைக் கொத்து கீழே தரப்பட்டுள்ளது. இவர்களில் எந்தவொரு எழுத்தாளரும், “அங்கீகரிக்கப்பட்ட” கவிஞர்கள் வரிசையில் உள்ளவர் அல்ல! எழுதப்பட்ட கவிதைகள், சாதாரண மக்களாகிய வாசகர்களுக்கு நடப்பு செய்தித்தாள்கள் மற்றும் சஞ்சிகைகள் வழியாக சென்றடையும் விதத்தில் எழுதப்பட்ட கவிதைகளாகும். அவை எளிமையாக எழுதப்பட்டுள்ளன. தானாகவே உணர்வுப் பூர்வமாகக் கிளர்ந்தெழுந்தவை; அவை, (நான் மேம்படுத்தும் அளவுக்கு சிறப்பாகயிருந்தவை) ரகசியப் புலனாய்வு அதிகாரிகளால் செய்யப்பட்ட மொழியாக்கங்களிலும் கூட காலத்தின் உணர்வை தெரிவிப்பவை. நான் பகத்சிங்கின் தாய்மொழியான பஞ்சாபியிலிருந்து துவங்குகிறேன். விர்லப் என்ற தலைப்பைக் கொண்ட கர்முகி பிரசுரத்திலிருந்து ஒரு பாடலைத் தருகிறேன்.

இந்தியத் தாய்க்கும் பகத்சிங்கிற்குமிடையிலான உரையாடல்

இந்தியத்தாய்

ஓ,மக்களே!
உலகம் முழுவதும் உள்ள மக்களே!
என் ‘நிலவு’ மறைந்ததும்
இருள் சூழ்கிறது!
பகத்சிங்
ஓ, தாயே!

இந் ‘நிலவு’ உங்களுடையது

முழு உலகை ஒளிரச் செய்யும்

மழைக்கால ஊஞ்சலில் மக்கள் ஆடுவதைப் போல்

தூக்கு மேடையில் நாங்கள் ஆடுவோம்

இந்தியத்தாய்

ஓ, மகனே! உன் தியாகம்

என் பிணைப்புகளை துண்டாக்கிவிட்டது

பகத்சிங்

ஓ, தாயே! நான் அமைதியாக துயில்கிறேன்

இப்பொழுது என்னை எழுப்ப வேண்டாம்

இந்தியத்தாய்

ஓ, மகனே! உன்னைத்தூக்கிலிட்டது

இந்திய விலங்குகளை உடைக்கும்

பகத்சிங்

இந்திய நாட்டின் விடுதலைக்காக

மீண்டும் நான் பிறப்பேன் தாயே!

இந்தியத்தாய்

ஓ, மக்களே, சிங்கத்தை வளர்த்தெடுத்தேன்

இர்வின் கூண்டிலடைத்தான்

பகத்சிங்

ஓ, தாயே, உன் சிங்கம் உறுமினால்

இங்கிலாந்தே அதிரும்

ஒரு சிங்கம் மடியட்டும் - அதனிடத்தில்

லட்சம் சிங்கங்கள் தோன்றட்டும்.

(குறிப்பு : தோழர் பி.சி.ஜோஷி அவர்கள் 1936ஆம் ஆண்டிலிருந்து 1947ஆம் ஆண்டு வரை இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளராக செயல்பட்டார். தோழர் அஜய் குமார் கோஷ் அவர்கள் 1951ஆம் ஆண்டிலிருந்து 1962ஆம் ஆண்டு வரை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளராக செயல்பட்டார்)

ஆதாரம் : பி.சி.ஜோஷியின் அரிய கட்டுரைகள் தொகுப்பு,

தமிழாக்கம் : என்.ஆர்.

# இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி உருவான ஆண்டு ஒரு தெளிவான விளக்கம்

- என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 13, 2019



…

“புரட்சிகர இயக்கத்துக்கு சர்வதேச கட்சிக் கட்டுப்பாடு அவசியம் என்பதை இக்குழு ஒப்புக்கொள்வதால், எண்ணிக்கையில் சொற்பமாக இருந்தாலும்,

இந்தியாவில் அதற்கு இன்னும் வேர்கள் இல்லை என்றாலும் அதற்கு ஒரு தற்காலிகத் தன்மை கொடுத்தாலும் இக்குழு உண்மையான கம்யூனிஸ்ட் கட்சியின் தொடக்கம் என்றும் கருதலாம்” இக்குழுவை கட்சி என்று அங்கீகரிக்குமாறும், அப்பொழுது துவங்கியிருந்த மூன்றாவது காங்கிரசில் ஆலோசனை உரிமையுடன் கலந்து கொள்ள அனுமதிக்குமாறும் இந்தியக் கமிஷன் கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு சிபாரிசு செய்தது. அது ஏற்றுக் கொள்ளப்பட்டது. மூன்றாவது காங்கிரசின் பிரதிநிதிகள் பட்டியலில் ‘இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி’ என்று பிரசுரிக்கப்பட்டிருந்தது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி இவ்வாண்டு அக்டோபர் 17ஆம் தேதியை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் நூறாவது ஆண்டாக அறிவித்து சிறப்பாகக் கொண்டாடி வருகிறது. நாடு முழுவதும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் பேரவைகள், பொதுக்கூட்டங்கள், கொடியேற்றுதல் மற்றும் ஊர்வலங்கள் நடத்தப்பட்டு வருகின்றன.

ஆனால் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி வேறொரு கருத்தைக் கூறி வருகிறது. அதாவது ஒன்றுபட்ட இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய செயற்குழு எடுத்த முடிவுப்படி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் அமைப்புதினம் டிசம்பர் 26, 1925 என்றும், அதுதான் சரியான தினம் என்றும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் நூற்றாண்டு விழா 2025ஆம் ஆண்டு டிசம்பர் 26ஆம் தேதிதான் என்றும் கூறி வருகிறது.

ஒன்றாக இருந்த கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய செயற்குழு எடுத்த முடிவு உண்மைதான். அதை யாரும் கேள்வி கேட்கவில்லை. 1959ஆம் ஆண்டு

ஆகஸ்ட் மாதம் 19ஆம் தேதி ஒன்றாக இருந்த கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய செயற்குழு கூட்டம் தில்லியில் நடைபெற்றது. அதற்கு தோழர் எம். பசவபுன்னையா தலைமை தாங்கினார். அக்கூட்டத்தில் கட்சியின் பொதுச் செயலாளர் தோழர் அஜய் கோஷ், செயற்குழு உறுப்பினர்கள் தோழர்கள் பி.டி.ரணதிவே, பி.சி.ஜோஷி, இசட். ஏ.அகமது, எஸ்.ஏ.டாங்கே மற்றும் ஏ.கே.கோபாலன் ஆகியோர் கலந்து கொண்டனர். இக்கூட்டமானது கம்யூனிஸ்ட் கட்சி உருவாக்கப்பட்ட தினம் 1925 டிசம்பர் 26ஆம் தேதி என்று முடிவு செய்தது. டிசம்பர் 25ஆம் தேதிதான் கான்பூரில் முதல் கம்யூனிஸ்ட் மாநாடு துவங்கி டிசம்பர் 28ஆம் தேதி வரை நடைபெற்றது. இந்த மாநாட்டில்தான் டிசம்பர் 26ஆம் தேதி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி உருவாக்கப்பட்டது.

இந்த விபரங்கள் அனைத்தும் சரியானதே.

ஆனால் 1964ஆம் ஆண்டில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உருவானபின் 1970ஆம் ஆண்டுகளில், இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் மூன்று முன்னோடிகளில் ஒருவரும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்குழு உறுப்பினருமான தோழர் முசாபர் அகமது அவர்கள், கட்சியின் அரசியல் தலைமைக்குழுவிற்கு ஒரு முக்கிய அம்சத்தை சுட்டிக்காட்டினார்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் கிளை என்பது 1920ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ஆம் தேதி தாஷ்கண்ட் நகரில் உருவாக்கப்பட்டதிலிருந்து அதன் வரலாறு தொடங்குகிறது என்றும்

அதைத் தொடர்ந்து 1924ஆம் ஆண்டு வரை இந்தியாவில் நடைபெற்ற கம்யூனிஸ்ட் சதிவழக்குகள், போராட்டங்கள், சென்னை, பம்பாய், கல்கத்தா, பெஷாவர் போன்ற நகரங்களில் கம்யூனிஸ்ட் கட்சி உருவாக்கப்பட்டு பத்திரிகைகள் நடத்தி மக்களைத் திரட்டி நடத்திய போராட்டங்கள், நடத்திய இயக்கங்கள், நடத்தப்பட்ட அரசியல் இயக்கங்கள், சுதந்திரப் போராட்டத்தில் கம்யூனிஸ்ட்டுகளின் பங்கேற்பு, கம்யூனிஸ்ட் இயக்கங்களின் பங்கேற்பு ஆகியவை இந்திய கம்யூனிஸ்ட் இயக்க வரலாற்றில் ஒதுக்கப்பட்டு 1925லிருந்து தான் கம்யூனிஸ்ட் கட்சி ஆரம்பிக்கப்பட்டது என்பது தவறானது. அது 1918 முதல் 1924 வரை நடத்தப்பட்ட இயக்கங்களுக்கு அநீதி செய்வதாகும் என்று முசாபர் அகமது எடுத்துரைத்தார். அவர் கூறியதை மார்க்சிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு கவனமாக பரிசீலித்தது. அது 1920 முதல் பரிசீலித்தது.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் கிளை என்பது 1920ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 17 ஆம் தேதி ரஷ்யாவின் தாஷ்கண்ட் நகரில் உருவாக்கப்பட்டது. எம்.என்.ராய், அவரின் துணைவியார் எவ்லின் டிரண்ட்ராய், அபனி முகர்ஜி, அவரின் துணைவியார் ரோஸா பிட்டிங்காப், முகமது அலி, முகமது ஷாபிக் சித்திக்கு, எம்.பி.டி.ஆச்சார்யா ஆகிய ஏழு பேரைக் கொண்டு உருவாக்கப்பட்டது. முகமது ஷாபிக் அதன் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தக்குழு லெனின் தலைமை தாங்கிய மூன்றாவது கம்யூனிஸ்ட் அகிலத்தின் அனுமதியோடு உருவாக்கப்பட்டது. இதை கம்யூனிஸ்ட் அகிலத்தில் இணைக்க கம்யூனிஸ்ட் அகிலத்தின் உட்குழு 1921ஆம் ஆண்டு ஜூன் மாதம் 13ஆம்

தேதி எம்.யூ.ரூட்கர்ஸ் என்னும் பெயருடைய டச்சுக் கம்யூனிஸ்ட் தலைமையில் இந்தியக் கமிஷன் (குழு) ஒன்றை நியமித்தது. அது எம்.என்.ராயின் குழுவைப் பற்றி ஜூன் 26ஆம் தேதி பின்வரும் மதிப்பீட்டைச் செய்தது:

“புரட்சிகர இயக்கத்துக்கு சர்வதேச கட்சிக் கட்டுப்பாடு அவசியம் என்பதை இக்குழு ஒப்புக் கொள்வதால், எண்ணிக்கையில் சொற்பமாக இருந்தாலும், இந்தியாவில் அதற்கு இன்னும் வேர்கள் இல்லை என்றாலும் அதற்கு ஒரு தற்காலிகத் தன்மை கொடுத்தாலும் இக்குழு உண்மையான கம்யூனிஸ்ட் கட்சியின் தொடக்கம் என்றும் கருதலாம்” (Indian Commission to the Small Bureau of the Communist International)

இக்குழுவை கட்சி என்று அங்கீகரிக்குமாறும், அப்பொழுது துவங்கியிருந்த மூன்றாவது காங்கிரசில் ஆலோசனை உரிமையுடன் கலந்து கொள்ள அனுமதிக்குமாறும் இந்தியக் கமிஷன் கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு சிபாரிசு செய்தது. அது ஏற்றுக் கொள்ளப்பட்டது. மூன்றாவது காங்கிரசின் பிரதிநிதிகள் பட்டியலில் ‘இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி’ என்று பிரசுரிக்கப்பட்டிருந்தது. (கம்யூனிஸ்ட் அகிலத்தின் மூன்றாவது உலக காங்கிரஸ், சுருக்கெழுத்து அறிக்கை, 1922). இதற்கு முந்தைய குழுக்களின் பட்டியலில் இந்தியக் கம்யூனிஸ்ட் குழுக்கள் என்று மட்டுமே குறிப்பிடப்பட்டிருந்தது. (எம்.ஆர்.பேர்சிட்ஸ், ‘சோவியத் நாட்டில் இந்தியப் புரட்சி வீரர்கள்’- இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்கம் உருவாகிக் கொண்டிருந்த கட்டம் என்ற நூலில்)

கம்யூனிஸ்ட் அகிலம் இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கும் பொறுப்பை எம்.என்.ராய்க்கு கொடுத்தது.

லெனின் இந்தியா மீது மிகுந்த கவனம் செலுத்தினார். இந்தியாவைச் சேர்ந்த எம்.என்.ராய், எம்.பி.டி.ஆச்சார்யா, பூபேந்திரநாத் தத்தா, ராஜா பிரதாப் சிங் போன்றோரை சந்தித்துப் பேசினார். எம்.என்.ராய், லெனினை பலமுறை சந்தித்து விவாதித்திருக்கிறார். ‘லெனின் இந்தியாவைப் பற்றி விசேஷமான அக்கறை காட்டினார். அவர் 1921 நவம்பர் 14ஆம் தேதியன்று சோவியத் கட்சி ஊழியருக்கு எழுதிய குறிப்பில் பின்வருமாறு கூறுகிறார்:

‘‘இந்தியத் தோழர்களின் நூல்களை அதிகமாக வெளியிடுங்கள். இந்தியாவையும், அதன் புரட்சிகர இயக்கத்தையும் பற்றி அதிகமான விபரங்களை சேகரிக்கும்படி அது அவர்களை ஊக்குவிக்கும்.”

- நாளை தொடரும்

# லெனின், ஸ்டாலின் அங்கீகரித்த பிரகடனம்

- என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 14, 2019




…

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி உருவான ஆண்டு

“இக்காலகட்டத்தில்தான் இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கத்தை உருவாக்கும் பொறுப்பு அளிக்கப்பட்ட எம்.என்.ராய், சிங்காரவேலரையும்,

எஸ்.ஏ.டாங்கேயையும், முசாபர் அகமதுவையும் தொடர்பு கொண்டு அவர்கள் மூவரையும் ஒருங்கிணைத்தார். 1921ஆம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரசின் அகில இந்திய மாநாடு அகமதாபாத் நகரில் நடைபெற்றபோது இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் எம்.என்.ராய் ஒரு பிரகடனத்தை எழுதி அதை மாநாட்டில் விநியோகிக்க செய்தார். அது லெனினும், ஸ்டாலினும் படித்து அங்கீகரித்தது.

இப்பொழுது தோழர் முசாபர் அகமது சுட்டிக்காட்டிய, விடப்பட்ட அம்சங்களை ஒவ்வொன்றாக காண்போம்:

1. 1920ல் தாஷ்கண்ட் நகரில் முதல் இந்தியக் கம்யூனிஸ்ட் குழு உருவான நேரத்திலேயே இந்தியாவில் மூன்று இடங்களில் மூன்று கம்யூனிஸ்ட்டுகள் கம்யூனிஸ்ட் இயக்கம் குறித்து கருத்துக்களை பரப்ப ஆரம்பித்தனர். சென்னையில் சிங்காரவேலர், பம்பாயில் எஸ்.ஏ.டாங்கே, கல்கத்தாவில் முசாபர் அகமது. சென்னையில் சிங்காரவேலர் அப்பொழுது உருவாகி வந்த பின்னி மற்றும் கர்நாட்டிக் மில்களைச் சேர்ந்த 14 ஆயிரம் தொழிலாளிகளுக்கு மார்க்சியம் குறித்தும், மார்க்சியப் பொருளாதாரம் குறித்தும் போதனை செய்ய ஆரம்பித்தார். தொழிலாளிகளுக்கு அரசியல் உணர்வூட்டுவதற்காக 'தொழிலாளன்' என்ற தமிழ் பத்திரிகையையும் நடுத்தர வர்க்க ஊழியர்களுக்காக 'லேபர் கிஸான் கெஜட்' என்ற ஆங்கில பத்திரிகையையும் நடத்தி மார்க்சியப் பிரச்சாரம் செய்தார். 1920ஆம் ஆண்டு டிசம்பர் 10ஆம் தேதி மற்றும் 1921 ஆகஸ்ட் மாதம் 29ஆம் தேதி சென்னை காவல்துறையினர், போராடிய பின்னி மற்றும்

கர்நாட்டிக் மில் தொழிலாளிகள் மீது நடத்திய துப்பாக்கிச் சூட்டில் ஒன்பது தொழிலாளிகள் சுட்டுக் கொல்லப்பட்டனர். அவர் இந்த தொழிலாளிகளின் இறுதி நிகழ்ச்சியில் கலந்து கொண்டு அவர்களின் உடல்களை சுமந்து சென்றார். அந்த துப்பாக்கிச் சூடு குறித்து அறிக்கை வெளியிட்டு மக்கள் கவனத்தை ஈர்த்தார். 1923ஆம் ஆண்டு இந்தியாவிலேயே முதன் முறையாக சென்னையில் மே தினத்தை இரண்டு இடங்களில் கொண்டாடினார்.

2. பம்பாயில் எஸ்.ஏ.டாங்கே கல்லூரியில் இருந்து அரசியல் காரணத்திற்காக வெளியேற்றப்பட்ட நிலையில், அவர் பத்திரிகைகளில் படித்த ரஷ்ய அரசாங்கத்தின் சாதனைகளை விளக்கியும், தான் புரிந்து கொண்ட அளவில் மார்க்சியத் தத்துவத்தை விளக்கி மாணவர்கள் கூட்டத்தில் பேச ஆரம்பித்தார். லெனினும் காந்தியும் என்ற ஒப்பீட்டுப் பிரசுரத்தை எழுதி ரஷ்ய சாதனைகளை விளக்கினார். ‘சோசலிஸ்ட்’ என்ற ஆங்கில ஏட்டை துவக்கி மார்க்சியப் பிரச்சாரத்தை துவக்கினார். எஸ்.எஸ்.மிராஜ்கர், ஆர்.எஸ்.நிம்ப்கர், எஸ்.வி.காட்டே போன்ற தோழர்களுடன் சேர்ந்து பம்பாய் மில்களில் இருந்த பல்லாயிரக்கணக்கான தொழிலாளிகளுக்கு வர்க்கப் போதனை செய்தார். இதன் விளைவாகத்தான் 1929ஆம் ஆண்டில் லட்சத்திற்கும் மேற்பட்ட தொழிலாளிகள் பலமாத காலம் வேலைநிறுத்தம் செய்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

3.கல்கத்தாவில் தீவிர தேச பக்தரான முசாபர் அகமது, லெனின் எழுதிய நூல்களையும், மார்க்ஸ் எழுதிய நூல்களையும் அயல்நாட்டிலிருந்து

இந்தியாவிற்கு வந்த “வான்கார்ட் (முன்னணிப்படை), அட்வான்ஸ் கார்ட் (முன்னணி காவலன்), ‘சர்வதேச செய்தி பரிமாற்றம்’, ‘இந்திய மக்கள்’, ‘கம்யூனிஸ்ட் அகிலம்’ போன்று அயல்நாட்டிலிருந்து வந்த ஆங்கிலப் பத்திரிகைகளை படித்து கம்யூனிஸ்ட்டானவர். தன் நெருங்கிய நண்பர் கவிஞர் நஸ்ரூல் இஸ்லாம் மற்றும் பஸ்நூல் ஹக் போன்றோருடன் சேர்ந்து நவயுகம் என்ற பத்திரிகையை தொடங்கி தொழிலாளர் பிரச்சனைகளை எழுதினார். துறைமுகம் உள்ளிட்ட பகுதிகளுக்குச் சென்று தொழிலாளர் பிரச்சனைகளை அறிந்து உருக்கமான கட்டுரைகளை எழுதினார். ஒருமுறை காவல்துறை தொழிலாளிகள் மீது கடும் அடக்குமுறையை ஏவியபொழுது அவர் அதை வன்மையாகக் கண்டித்து எழுதினார். இதனால் ஆங்கில அரசாங்கம் அந்த பத்திரிகையின் காப்புத் தொகையை பறிமுதல் செய்தது.

இக்காலகட்டத்தில்தான் இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கத்தை உருவாக்கும் பொறுப்பு அளிக்கப்பட்ட எம்.என்.ராய், சிங்காரவேலரையும், எஸ்.ஏ.டாங்கேயையும், முசாபர் அகமதுவையும் தொடர்பு கொண்டு அவர்கள் மூவரையும் ஒருங்கிணைத்தார்.

1921ஆம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரசின் அகில இந்திய மாநாடு அகமதாபாத் நகரில் நடைபெற்ற போது இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் எம்.என்.ராய் ஒரு பிரகடனத்தை எழுதி அதை மாநாட்டில் விநியோகிக்க செய்தார். அது லெனினும், ஸ்டாலினும் படித்து அங்கீகரித்தது. அது முதன் முறையாக இந்தியாவிற்குத் தேவை முழு சுதந்திரம் என்ற கோரிக்கையை முன்வைத்தது. தேசிய இயக்கம் கூட அந்த கோரிக்கையை அப்பொழுது முன்வைக்கவில்லை. அதேபோன்று

1923ஆம் ஆண்டு கயா நகரில் நடைபெற்ற காங்கிரஸ் கட்சியின் அகில இந்திய மாநாட்டில் சிங்காரவேலர் தொழிலாளர் குறித்த பிரச்சனை மீது ஆவேசமிக்க உரையாற்றினார். “உலக கம்யூனிஸ்ட்டுகளின் சிறப்பிற்குரிய வரிசை முறையில் உலக நலனில் அக்கறையுள்ள மாபெரும் இயக்கத்தில் பிரதிநிதியாக இங்கு வந்துள்ளேன்” என்று கம்பீரமாக தொடங்கிய சிங்காரவேலர் இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் வேதனைகளையும், அவர்களின் கோரிக்கைகளையும் முன்வைத்து உரையாற்றினார்.

ரஷ்யப் புரட்சியின் தாக்கத்தினால் இந்தியாவில் மார்க்சியக் கருத்துக்கள் பரவுவதையும், ஏராளமான முஸ்லிம் இளைஞர்கள் ரஷ்யா சென்று மார்க்சியப் பயிற்சி பெற்று வருவதையும் கண்ட ஆங்கிலேய அரசாங்கம் அவ்வாறு பயிற்சி பெற்று பெஷாவர் திரும்பிய இளம் கம்யூனிஸ்ட்டுகளை 1921ஆம் ஆண்டிலிருந்து கைது செய்ய ஆரம்பித்தது. 1921 - 24 காலகட்டத்தில் மட்டும் நான்கு கம்யூனிஸ்ட் சதி வழக்குகள் போடப்பட்டு முகமது அக்பர் ஹான், ஹாசன், குலாப் மகபூப், முகமது அக்பர்ஷா, முகமது கவுகார் ரஹ்மான் கான், மீர் அப்துல் மஜித், ஹபீப் அகமது, ரபீக் அகமது, சுல்தான் அகமது, பெரோசுதீன் மன்சூர், அப்துல் காதிர்கான், முகமது ஷாபிக் ஆகிய இளம் கம்யூனிஸ்ட்டுகளுக்கு ஓராண்டு முதல் ஏழு ஆண்டு வரை ஆங்கிலேய அரசாங்கம் கடுங் காவல் தண்டனை விதித்தது.

இந்த வழக்கிற்குப் பின்னர் நாடெங்கிலும் மார்க்சியக் கருத்துக்கள் பரவுவதையும், தொழிலாளி வர்க்கப் போராட்டங்கள் அதிகரிப்பதையும் கண்ட ஆங்கிலேய அரசாங்கம் தொடுத்த மற்றொரு தாக்குதல்தான் கான்பூர் சதி வழக்கு. இந்த வழக்கில் எஸ்.ஏ.டாங்கே, முசாபர் அகமது,

சௌகத் உஸ்மானி, நளினி குப்தா ஆகிய நால்வர் மீதும் ராஜத்துரோக குற்றச்சாட்டு சுமத்தப்பட்டது. இந்த வழக்கில் சிங்காரவேலரையும் கைது செய்ய அரசாங்கம் காவல்படையை அனுப்பியது. ஆனால் அச்சமயத்தில் அவர் டைபாய்டு காய்ச்சலால் பாதிக்கப்பட்டிருந்ததால் அவரை பரிசோதித்த ஆங்கிலேய மருத்துவர் அவரை கான்பூருக்கு கொண்டு செல்ல அனுமதிக்கவில்லை. எனவே அவர் கைது செய்யப்படவில்லை. இந்த வழக்கு 1924ஆம் ஆண்டில் நடைபெற்று குற்றம்சாட்டப்பட்ட நால்வருக்கு நான்காண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

- நாளை தொடரும்

# இந்திய கம்யூனிஸ்ட் இயக்க நூற்றாண்டு -முன்னின்ற சத்யபக்தாவுக்கு பின்னின்ற காரணங்கள்...

-என்.ராமகிருஷ்ணன்

-நவம்பர் 15, 2019




...

“ரஷ்யப்புரட்சி நடைபெற்றது முதல் அதன் சாதனைகள், லெனினின் வழிகாட்டல்கள் குறித்த அனைத்து விபரங்களையும் பத்திரிகைகளில் படித்தறிந்தது. பெஷாவர் கம்யூனிஸ்ட் சதி வழக்கு விபரங்களைப் படித்தது. கான்பூர் சதி வழக்கு விசாரணையை நேரிலேயே கண்டு, டாங்கே, முசாபர் அகமது உள்ளிட்டோரின் வழக்கறிஞர்கள் கம்யூனிஸ்ட் கட்சியின் நோக்கங்களையும், லட்சியங்களையும் விவரித்ததை நேரடியாகவே கேட்டது. ஒரு தேசியவாதி, தேசபக்தர் என்ற முறையில் காங்கிரஸ் கட்சியின் மாநாடுகளில் வினியோகிக்கப்பட்ட கம்யூனிஸ்ட் விபரங்களைப் படித்தது. சிங்கார வேலரின் உரையைக் கேட்டது. இவை அனைத்தின் விளைவாக உந்தப்பட்டுதான் நண்பர்களிடம் 500 ரூபாய் வசூலித்து சத்யபக்தா கான்பூர் மாநாட்டைக் கூட்டினார். எஸ்.ஏ.டாங்கே அச்சமயம் சீத்தாபூர் சிறையிலிருந்ததால் அவரிடமிருந்து ரகசியமாக மாநாட்டுக்கு வாழ்த்துச் செய்தி பெற்றார். எனவே கான்பூர் மாநாடு திடீரென்று உருவானதல்ல. 1920ல் உருவாக்கப்பட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் தொடர்ச்சியே.”

ஆனால் இந்த வழக்கு நடைபெற்றுவரும் பொழுது பார்வையாளர் இருப்பிடத்தில் மூன்று பேர் அமர்ந்திருந்தனர். ஒருவர் டாங்கேக்கு உதவிசெய்ய வந்த பம்பாய் இளம் கம்யூனிஸ்ட் தோழர் எஸ்.வி.காட்டே, இரண்டாமவர் முசாபர் அகமதுவுக்கு உதவி செய்ய வந்த தோழர் அப்துல் ஹலீம். மூன்றாவது நபர் சத்யபக்தா எனப்படும் புத்தகக் கடை வைத்திருந்த ஒருவர். இந்த வழக்கு நடைபெற்று தண்டிக்கப்பட்ட நால்வரும் வெவ்வேறு சிறைக்கு அனுப்பப்பட்டனர். சிறிது காலம் கழித்து இந்த

சத்யபக்தா என்ற நபர் கான்பூரில் ஒரு கம்யூனிஸ்ட் மாநாடு கூட்டப்படும் என்று ஒரு அறிவிப்பு செய்தார். இது பலருக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்த சத்யபக்தா பரத்பூரைச் சேர்ந்தவர். இளம் வயதில் மகாத்மா காந்தியின் சபர்மதி ஆசிரமத்தில் இருந்தார். தேசிய மனப்பான்மை கொண்ட அவர் பின்னர் நாகபுரியில் பிரணவீர் என்ற ஒரு பத்திரிகை நடத்தினார். பம்பாயிலிருந்து டாங்கே வெளியிட்டுக் கொண்டிருந்த சோசலிஸ்ட் வார இதழை படித்து வந்த சத்ய பக்தா பின்னர் அவருடன் தொடர்பு கொண்டார். தான் என்னென்ன நூல்களை படிக்க வேண்டுமென்று டாங்கேயிடம் யோசனை கேட்டார். அவர் சொன்ன நூல்களை வாங்கிப் படித்தார். ரஷ்யப் புரட்சி குறித்தும், ரஷ்ய அரசாங்கத்தின் சாதனை குறித்தும் லெனின் தலைமை குறித்தும் மிகுந்த மரியாதை கொண்டிருந்த சத்ய பக்தா ஒரு பெரிய நண்பர் வட்டம் வைத்திருந்தார். அவர்கள் அனைவருக்கும் ரஷ்யப் புரட்சி, அதன் சாதனை பற்றி விளக்குவார். ஆனால் அவருக்கு மார்க்சியப் புரிதல் கிடையாது. சிறிது காலம் கழித்து காந்தி, லெனின் மற்றும் கிலாபத் இயக்கத்தின் பிரபல தலைவர்களான அலி சகோதரர்களின் படங்களை அச்சிட்டு விற்றார். அதன் பின் கான்பூரில் ஒரு புத்தகக் கடை வைத்தார். இவரும் கம்யூனிஸ்ட் பிரச்சாரம் செய்தார் என்று காவல்துறை அவரையும் இந்த கான்பூர் சதிவழக்கில் சேர்த்தது. ஆனால் அரசாங்க வழக்கறிஞர் அவர் பெயரை நீக்கிவிட்டார். கான்பூர் சதி வழக்கு தொடங்கியதும் பார்வையாளர் இருப்பிடத்தில் அமர்ந்த சத்ய பக்தா அரசாங்க வழக்கறிஞர் ரோஸ் அல்ஸ்டன் கூறிய முதல் வாக்கியத்தைக் கேட்டு மகிழ்ச்சியடைந்தார். கம்யூனிசத்தைப் பரப்புவது குற்றமல்ல என்று அரசாங்க வழக்கறிஞர் கூறியது அவருக்கு மிகவும் பிடித்திருந்தது.

அத்துடன் முசாபர் அகமதுவுக்கும் டாங்கேக்கும் உதவி செய்ய வந்த எஸ்.வி.காட்டேக்கும் அப்துல் ஹலீமுக்கும் தங்க இடமில்லாததை அறிந்து தன்வீட்டில் அவர்கள் தங்க இடம் கொடுத்தார். அந்த சத்ய பக்தா இப்பொழுது கான்பூரில் ஒரு கம்யூனிஸ்ட் மாநாட்டை கூட்ட முடிவு செய்து அறிவிப்பு செய்தார். காசநோயால் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட முசாபர் அகமதுவுக்கு 30ரூபாய் மணியார்டர் அனுப்பி மாநாட்டுக்கு வரும்படி அழைத்தார். சென்னையில் இருந்த சிங்காரவேலரை மாநாட்டிற்கு தலைமை தாங்க வரும்படி அழைத்தார். வேறு சிலரையும் அழைத்தார். 1925ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 25ஆம் தேதி அந்த முதல் கம்யூனிஸ்ட் மாநாடு கான்பூரில் துவங்கியது. பிரபல இடதுசாரி காங்கிரஸ்காரர் மவுலானா ஹசரத் மொகானி வரவேற்புரை நிகழ்த்தினார். சிங்கார வேலர் தலைமையுரை நிகழ்த்தினார். இந்த மாநாட்டில் எஸ்.வி.காட்டே, முசாபர் அகமது உள்ளிட்ட பலர் கலந்து கொண்டனர். டிசம்பர் 26ஆம் தேதி இந்த புதிய கட்சிக்கு என்ன பெயர் வைப்பது என்று விவாதம் நடந்தது. பெரும்பாலோர் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி என்று வைக்க வேண்டும் என்றனர். ஆனால் சத்ய பக்தாவோ இந்தியன் கம்யூனிஸ்ட் கட்சி என்று வைக்க வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தார். அத்துடன் அகிலத்துடன் தொடர்பு வைக்கக்கூடாது என்றும் கூறினார். மாநாடு அதை ஏற்கவில்லை. எனவே அந்த மாநாட்டை கூட்டிய சத்ய பக்தா மாநாட்டை அப்படியே போட்டுவிட்டு வெளியேறிவிட்டார். இந்த மாநாட்டைத் தான் ஒன்றாக இருந்த இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி அதன் துவக்க மாநாடாக 1959ல் முடிவு செய்தது. இவற்றையெல்லாம் பரிசீலித்த மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு ஒன்றாக

இருந்த கட்சி எடுத்த முடிவு சரியானதல்ல. ஏனென்றால் 1920 முதல் 1924 வரை நடந்த மகத்தான இயக்கங்கள், போராட்டங்கள், சதிவழக்குகள், தியாகங்கள் போன்றவை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி வரலாற்றில் அவசியம் இடம்பெற வேண்டும், இல்லையென்றால் 5 ஆண்டு கால கம்யூனிஸ்ட் இயக்க வரலாறு நிராகரிக்கப்பட்டு விடும் என்று கருதி கட்சியின் உருவாக்க தேதி 1920 அக்டோபர் 17 அதாவது தாஷ்கண்டில் முதல் கிளை உருவாக்கப்பட்ட நாள்தான், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் உருவாக்கத் தினம் என்ற முடிவுக்கு வந்தது. ஒன்றாக இருந்த கட்சியில் 1925 டிசம்பர் 26 தான் துவக்கநாள் என்று முடிவெடுத்த ஏழு பேரில் பி.டி. ரணதிவே, எம்.பசவபுன்னையா, ஏ.கே.கோபாலன் ஆகிய மூவரும் இப்பொழுது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு உறுப்பினர்கள். இந்த மூவர் உள்ளிட்ட மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு உறுப்பினர்கள் ஒன்பது பேர், துவக்கநாள் 1920 அக்டோபர் 17 என்ற முடிவை எடுத்தனர். இதை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்குழு ஏற்றுக்கொண்டது. இந்த நிலைபாடு தான் மிகச் சரியான நிலைபாடு. ஏனென்றால் வரலாற்றில், குறிப்பாக கம்யூனிஸ்ட் கட்சி வரலாற்றில் விடப்பட்ட விபரங்களை சேர்த்துக் கொள்வதன் மூலம் வரலாறு மேலும் செழுமையடைகிறது. அது முற்றிலும் நியாயமானது. வரலாற்றுக்கு நீதி வழங்குவது. எனவே ஒன்றாக இருந்த கட்சியின் முடிவை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மாற்றிவிட்டது என்று கூறுவதில் பொருள் இல்லை. இந்த நிலைபாட்டை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எடுத்து 50 ஆண்டுகள் கடந்துவிட்டன. இந்த முடிவு நேற்றோ அதற்கு முன்தினமோ எடுக்கப்பட்டதில்லை. 1970ஆம் ஆண்டுகளிலேயே

எடுக்கப்பட்டுவிட்டது. தாஷ்கண்டில் உருவாக்கப்பட்ட முதல் கிளையையே கம்யூனிஸ்ட் கட்சியாக கம்யூனிஸ்ட் அகிலம் அங்கீகரித்திருப்பதையும் நாம் மறக்கக்கூடாது. “அவசியம் என்பதை அறிந்து ஏற்றுக்கொள்வது சிறப்பானது” என்ற மார்க்சிய மாமேதை பிரெடரிக் ஏங்கெல்சின் வார்த்தைகளை நினைவு கூர்வோம்.

# திரு.வி.க. கம்யூனிஸ்ட் அல்ல; ஆனால் உழுது விதைத்தவர்

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 16, 2019




…

100 ஆண்டு கம்யூனிஸ்ட் இயக்கத்தில் சில சாட்சிகள்- 1

இந்திய கம்யூனிஸ்ட் இயக்கம் உதயம் பற்றிய வரலாறு என்பதை அக்கட்சியில் நேரடியாக ஈடுபட்டோரோடு மட்டுமே இணைத்துப்

பார்த்தால் போதாது. கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினராக அல்லாத பல விடுதலைப் போராட்ட வீரர்கள் தொழிற்சங்கப் பணியிலும், அது சார்ந்து சோசலிசப் பிரச்சாரத்திலும் கவனம் செலுத்தினர். அதில் குறிப்பிடத்தக்கவர் திரு.வி.கல்யாணசுந்தரம் எனில் மிகை அல்ல. அவர் சமய நம்பிக்கை கொண்டவர். ஆனால் அந்த நம்பிக்கை குறுகியதாகவோ வெறுப்பு அரசியலாகவோ அமையவில்லை; மானுடத்தை நேசித்தார். தொழிலாளர் மத்தியில் பணியாற்றினார். அது அவரை மார்க்சியத்துக்கு நெருக்கமாக்கியது. தன் வாழ்க்கை வரலாற்று நூலில் எழுதியுள்ள வரிகள் எவ்வளவு கடும்பணி என்பது விளங்கும்.

“யான் வெளியூர்களுக்குக் காங்கிரஸ் சார்பாகப் பிரச்சாரத்துக்கு சென்ற போதெல்லாம் தொழிற்சாலைகள் உள்ள இடங்களில் தொழிலாளர் இயக்கத்தைப் பற்றிப் பேசி, ஆங்காங்கு தொழிற்சங்கங்கள் காணுமாறு வேண்டுதல் செய்வதை ஒரு விரதமாகக் கொள்ளலானேன். சென்னையிலும், வெளியூர்களிலும் பல சங்கங்கள் காணப்பட்டன. அவைகளுள் குறிக்கத்தக்கன எம் அண்ட் எஸ் எம் தொழிலாளர் சங்கம், டிராம்வே தொழிலாளர் சங்கம், மண்ணெண்ணெய்த் தொழிலாளர் சங்கம், அச்சுத் தொழிலாளர் சங்கம், அலுமினியம் தொழிலாளர் சங்கம், ஐரோப்பிய தொழிலாளர் சங்கம், நாவிதர் சங்கம், தோட்டிகள் சங்கம், ரிக்ஷா ஓட்டிகள் சங்கம், அச்சுத் தொழிலாளர் சங்கம், தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் சங்கம் [நாகை], கோவை நெசவுத் தொழிலாளர் சங்கம், மதுரை நெசவுத் தொழிலாளர் சங்கம் முதலியன. அந்நாளில் எங்களுடன் கலந்தும் சங்கங்களில் ஈடுபட்டும் சேவை செய்தவருள்

குறிப்பிடத்தக்கவர் தோழர்கள் சக்கரைச் செட்டியார், இ.எல்.ஐயர், என்.தண்டபாணிப் பிள்ளை, ஹரி சர்வோத்தம ராவ், இராஜகோபாலாச்சாரியார், ஆதிநாராயணச் செட்டியார், எம்.எஸ்.சுப்பிரமணிய ஐயர், வ.உ.சிதம்பரம் பிள்ளை, ஏ.எஸ். ஸ்ரீ ராமுலு, எம்.சி.ராஜா, டாக்டர் நடேச முதலியார், கஸ்தூரி ரங்க ஐயங்கார், வி.பி.பக்கிரிசாமிப் பிள்ளை [நாகை ], என். எஸ். இராமசாமி ஐயங்கார் [கோவை], ஜார்ஜ் ஜோசப் [மதுரை] முதலியோர்.

சங்கங்கங்களை உருவாக்குவது என்பது சாதாரணமானதல்ல. கடும் அடக்குமுறையையும், தாக்குதலையும் சந்திக்க வேண்டி இருந்திருக்கிறது." 1918 ஆம் ஆண்டு உருவான முதல் தொழிற்சங்கம் பி அண்ட் சி ஆலைத் தொழிலாளர் சங்கமான சென்னைத் தொழிலாளர் சங்கமாகும். இதில் வாடியா, திரு.வி.க, திவான்பகதூர் கேசவபிள்ளை, இராமஞ்சலு நாயுடு, செல்வபதிச் செட்டியார் என பலரும் நிர்வாகிகளாகச் செயல்பட்டனர். ரஷ்யப் புரட்சியின் வெற்றியும் வீச்சும் சோசலிசம், கம்யூனிசம் இவற்றுக்கு ஆதரவான தட்ப வெப்பத்தை உருவாக்கியது. அதன் வீச்சு தமிழகத்தில் வலுவாகவே இருந்தது. மேலே சுட்டிய நீண்ட பட்டியலே அதன் சாட்சி.

இதில் பலர் பின்னர் எதிர் முகாமுக்கு சென்றனர். குறிப்பாக ராஜகோபாலாச்சாரியார். இவர் 'அபேதவாதம்' எனும் பெயரில் சோஷலிசத்தைப் பற்றி புத்தகமே எழுதினார். அவர் முதலாளித்துவத்துக்கு ஆதரவாக மாறியதும் தான் எழுதிய புத்தகத்தைத் தானே திரும்பப் பெற்றுக் கொண்டார். சென்னையில் 21.01.1944ஆம் நாள் நடைபெற்ற மாமேதை லெனின் நினைவு தினக் கூட்டத்தில் கலந்து கொண்டு திரு.வி.க.

பேசியபோது குறிப்பிட்டது அன்றைய சூழலை மேலும் மெய்ப்பிக்கும். “லெனின் உன்னதமான தலைவர். அவர் நடத்தி வெற்றி பெற்ற சோசலிசப் புரட்சியின் தூண்டுதலால் நான் உற்சாகமும், உணர்வும் கொண்டு தொழிலாளர் இயக்கத்தில் இறங்கி வேலை செய்ய முன் வந்தேன். அவர் காட்டிய வழியில் தொழிலாளர்கள் முன்செல்ல வேண்டும்”. மேலும், “தொழிலாளர்கள் பெருங்கிளர்ச்சி செய்து பொருளுடைமை பெறுவதோடு, அரசையும் தங்கள் வழி திருப்பிட வேண்டும். தொழிலாளர் அரசாட்சியில் மனித தருமத்துக்கு அழிவு நேராது என்பது திண்ணம்” என்றார். “இந்தியாவும் விடுதலையும்” என்ற நூலில் திரு.வி.க எழுதுகிறார்:

“சாம்ராஜ்யத்தால் விழுங்கப்பட்ட உலகை விடுதலை செய்து சமதர்மத்தால் சீர்திருத்தம் அமைக்கப் பின்னாளில் முயன்றவர் சிலர். அவருள் சிறந்தவர் காரல் மார்க்ஸ். சமதர்மத்தை விஞ்ஞான முறையில் ஒழுங்குபடுத்தி உலகுக்கீந்த பெருமை காரல் மார்க்ஸுக்கு உண்டு. மார்க்ஸ் போதனையை சாதனையாக்க முயன்றவர் லெனின் உள்ளிட்ட சிலர்.” “மார்க்சியம் உலகெங்கும் இந்நாளில் ஆராயப்படுகிறது. அஃது இன்னும் யாண்டும் முற்றும் நிலவிச் செய்கையில் நிகழவில்லை. ரஷ்யாவில் மட்டும் மார்க்சிய விதை விழுந்திருக்கிறது. மார்க்சியம் ஏதோ புதுமை என்று யாரும் கருத வேண்டுவதில்லை. எப்புதுமையும் ஒரு பழமையிலிருந்து பிறப்பதே ஆகும். மார்க்சியம் சார்வாகத்தை இக்கால முறையில் கூறுவதாகும்.” இந்தியாவின் தத்துவ மரபென்பது ஆன்மீகம் அல்ல; பகுத்தறிவு சார்ந்ததே. லோகாயதவாதம் எனப்படும் பொருள் முதல் வாதம் இம்மண்ணில் ஆழ வேர் பதித்த சித்தாந்தமாகும். சார்வாகர் அதன் முக்கிய சித்தாந்தியாவார்.

இதனை மார்க்சோடு இணைத்து திரு.வி.க பார்த்தாரெனில் அது அவரது ஆழ்ந்த கூர்மதிக்கு சான்றாகும்.

“திரு.வி.க மார்க்சியத்தை தமிழ்ப் பாரம்பரியத்துடன் இணைக்க முடியுமா என்று முயன்றவர்” என இலங்கைப் பேராசிரியர் கலாநிதி கா.சிவத்தம்பி கூறியது மெய்யே. அதுமட்டுமல்ல அவர் மார்க்சியத்தில் சாத்வீகம் குறைவு என்கிற விமர்சனமும் கொண்டிருந்தார். பல முறை வெளிப்படுத்தவும் செய்துள்ளார். 1927 பிப்ரவரி 25 அன்று சென்னை தொழிலாளர் சங்கத்தில் பிரிட்டிஷ் நாடாளுமன்ற கம்யூனிஸ்ட் உறுப்பினர் சத்லத்வாலாவின் பேச்சை திரு. வி.க மொழி பெயர்த்தார். மொழி பெயர்ப்பு முடிந்தபின் சொன்னார். சத்லத்வாலா கொள்கையில் தமக்கு கருத்து வேற்றுமை இல்லை. ஆனால் காந்தி பற்றிய அவரது பார்வை எனக்கு உடன்பாடல்ல. காந்தியை அவர் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்றார்.

திரு. வி.கவுக்கு 1943 ஆம் ஆண்டு மணிவிழா நடைபெற்றது.அதில் கலந்து கொண்டு தொழிலாளர் இயக்கம் பற்றி கீழ்க்கண்டவாறு பேசினார். “பதினாறாயிரம் முறை தொழிலாளர் இயக்கம் தடுக்கி விழுந்திருக்கிறது. மீண்டும் எழுந்துள்ளது. குரல்வளை நெரிக்கப்பட்டு மூச்சு திணறடிக்கப்பட்டுள்ளது. நீதி மன்றங்களால் கட்டுண்டது. போர்ப்படையால் அடக்கப்பட்டுள்ளது. பத்திரிகைகளால் பழிக்கப்பட்டு உள்ளது. மதவாதிகளால் அச்சுறுத்தல்பட்டுள்ளது. ஓடுகாலிகளால் கைவிடப்பட்டுள்ளது. ஒட்டுண்ணிகளால் இரையாக்கப்பட்டுள்ளது. தலைவர்களால் துரோகமிழைக்கப்பட்டுள்ளது. இவை அத்தனையும்

இருந்த போதிலும், இன்று இந்தப் புவிக்கோளம் என்றுமே கண்டிராத வகையில் உயிர்த்துடிப்போடு, எதிர்கால வாய்ப்புடைய சக்தியாக விளங்கி வருகிறது. அதன் இலட்சியப் பணி அடிமைத் தனத்திலிருந்து உலகத் தொழிலாளர்களை விடுதலை செய்வதேயாகும்.இந்த இலட்சியத்தின் நிறைவேற்றம் சூரிய உதயம் போன்று சர்வ நிச்சயம்" – என்று அமெரிக்கத் தொழிற்சங்கத் தலைவர் யூஜின்டெப்ஸ் கூறியதை திரு.வி.க. எடுத்துரைத்தார். மேலும், "தொழிலாளர் இயக்கம் நம் நாட்டைச் சூழ்ந்துள்ள இருளைப் போக்க வல்ல ஒளியாகும்" – என்று அறிவித்தார்.

பி & சி மில் தொழிலாளர்கள் 1947 ஆம் ஆண்டு, தங்களின் கோரிக்கைகளுக்காக திரு.வி.க. தலைமையில் மிகப்பெரிய போராட்டம் நடத்தினர். அப்போராட்டத்தின் போது அறுபது வயதைக் கடந்து விட்ட திரு.வி.க.வைக் காங்கிரஸ் ஆட்சி வீட்டுக் காவலில் வைத்தது. ஆம், நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்ட தலைவருக்கு வீட்டுச் சிறை! 1953 செப்டம்பர் 17 அன்று மறைந்தார். தொழிலாளர் இயக்கத்திற்காக தனது இறுதி மூச்சுவரை பாடுபட்ட திரு.வி.க, தான் இறந்த பின்பு தன் உடலை சூளைப் பகுதி தொழிலாளர்களிடம் ஒப்படைத்திட வேண்டும் என்றார். அவரது வேண்டுகோளின்படி,அவரது உடலின் இறுதி ஊர்வலம் வட சென்னைச் சூளையிலிருந்து புறப்பட்டு தென்சென்னை மயிலாப்பூர் இடுகாட்டில் முடிந்தது. அங்கு அவரது உடல் அடக்கம் செய்யப்பட்டது.

"அண்டையன் பசியால் வாட

அணங்கொடு மாடி வாழ்தல்

மண்டையன் குற்றமன்று

மன்னிடும் ஆட்சி குற்றம்”

என ஓங்கி ஒலித்த திரு.வி.க கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினராய் இல்லையே தவிர; அதன் வரலாற்றில் துவக்க காலத்தில் உழுது விதைத்த விவசாயி எனில் மிகை அல்ல.

# 100 ஆண்டு கம்யூனிஸ்ட் இயக்கத்தின் சில சாட்சிகள் -2 சர்க்கரைச் செட்டியார் மகத்தான போராட்டத் தோழர்

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 17, 2019





…

சைவத்தில் தோய்ந்த திரு.வி.க மதங்களை மீறி தொழிலாளர் இயக்கத்தில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். அவரது சக தோழர் சக்கரைச் செட்டியார் கிறிஸ்துவத்தில் தன்னை ஒப்புக் கொடுத்தவர். ஆனால் உழைப்பாளி மக்கள் போராட்டங்களில் சிதையா நெஞ்சுடன், குன்றென நிமிர்ந்து நின்றார். 1922 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட பாரதியாரின் தேசிய கீதங்கள் நூலுக்கு முன்னுரை எழுதியவர் சக்கரைச் செட்டியார். ஆங்கிலத்தில் இளங்கலை பட்டம் பெற்றவர். பரிதிமாற்கலைஞரிடம் தமிழ் கற்றவர். சிறிது காலம் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். பின்னர் சட்டம் பயின்றார். சிறிது காலம் வழக்குரைஞராகவும் செயல்பட்டார். ஆனால் பொதுத்தொண்டு அவரை ஈர்த்தது. ஆரம்பத்தில் விடுதலைப் போரில் ஈர்க்கப்பட்டு சென்னை நகர காங்கிரஸ் கமிட்டி செயலாளராகவும் இருந்துள்ளார். 1924 ல் திருவண்ணாமலையில் நடந்த காங்கிரஸ் மாநாட்டிற்கு தலைமை ஏற்ற சக்கரைச் செட்டியார், காங்கிரஸ் தேர்தலில் பங்கேற்க வேண்டும் என்கிற தீர்மானத்தை ஆதரித்தார். 1927ல் காங்கிரஸை விட்டு விலகிவிட்டார். “காங்கிரஸ் கட்சியில் உட்கட்சி ஜனநாயகம் இல்லை. முற்போக்கு எண்ணம் கொண்ட இளைஞர்களை பெரிய தலைவர்கள் அடக்குகின்றனர்” என்று குற்றம்சாட்டி காங்கிரசிலிருந்து விலகி நீதிக் கட்சியில் சேர்ந்தவர் ஓராண்டில் அங்கிருந்தும் விலகிவிட்டார். பின்னர் தன் வாழ்வின் இறுதிவரை தொழிலாளர்களுக்கு உழைப்பதிலேயே செலவிட்டார்; எந்தக் கட்சியிலும் சேரவில்லை. “எனக்கு முன்பின் தெரியாத இரண்டு பேர் அன்றைய தினம் காலை என்னைக் காண வந்ததை என்னால் மறக்க முடியாது . கஷ்டத்துக்கும் ஆளாகும்

தொழிலாளர்கள் பற்றி என்னிடம் கூறினார்கள் .பக்கிங்காம் கர்நாடிக் ஆலை பற்றி என்னிடம் கூறினார்கள்.

நான் அந்த ஆலையை முழுமையாக அறியவில்லை என்றாலும் சிறிது கேள்விப்பட்டிருக்கிறேன். உணவு இடைவேளைக்கு சிறிது நேரமே வழங்கப்படுகிறது. ஒரு கவளம் வாயில் போட்டுக் கொள்வதற்குள் நேரம் முடிந்து விடுகிறது . தொடர்ந்தால் வாயில் மூடப்பட்டு வெளியேதான் நிற்க வேண்டும். இத்தகைய நிலையில்தான் தொழிலாளர்கள் உள்ளதை அறிந்தேன். உடனடியாக காரை வரவழைத்தேன். அறிமுகம் இல்லாத அந்த இருவரையும் அழைத்துக் கொண்டு பெரம்பூர் விரைந்தேன்.” இவ்வாறு ‘லேபர் இன் மெட்ராஸ்’ புத்தகத்தில் பி.பி.வாடியா குறிப்பிடுகிறார். திரு.வி.கவும் சக்கரைச் செட்டியாருமே அவ்விருவர். இது 1918 பிப்ரவரி அல்லது மார்ச் ஆக இருக்கக்கூடும். அதைத் தொடர்ந்தே தமிழகத்தின் முதல் சங்கமான சென்னை தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டது .இருவரும் அதில் பெரும் பங்காற்றினர். சென்னையில் ரிக்ஷா தொழிலாளர்கள், ஆலைத் தொழிலாளர் ,அப்பளத் தொழிலாளர், கள் இறக்கும் தொழிலாளர், மூக்குப்பொடித் தொழிலாளர் என எங்கும் சங்கம் கண்டதில் சக்கரைச் செட்டியாரின் பங்கும் குறிப்பிடத்தக்கது. ஏஐடியுசி என்கிற மத்திய தொழிற்சங்கம் 1920 அக்டோபரில் உருவானது. இதன் மாநிலத் தலைவராக 1943- 45 மற்றும் 1951-56 காலகட்டத்திலும் துணைத் தலைவராக 1945 லும் செயல்பட்டார். சங்கம் தடை செய்யப்பட்ட 1948-49 ஆண்டுகளில் கடும் அடுக்குமுறையை எதிர்கொண்டு, உரிமையை நிலை நாட்ட உறுதியுடன் போராடியவர். 1920 ல் சென்னையில் தொழிற்

சங்கங்களின் கூட்டமைப்பை உருவாக்குவதிலும் திரு.வி.க, மிருணாளினி சட்டோபாத்யாயா ஆகியோருடன் சக்கரைச் செட்டியாரும் பெரும் பங்கு வகித்தார். இவரையும் திரு.வி.கவையும் 1921 ல் நாடு கடத்த பிரிட்டிஷ் அரசு திட்டமிட்டது என்பதும்; லார்டு வில்லிங்டன் அதற்கான முயற்சியில் ஈடுபட்டார் என்பதும் ; நீதிகட்சி அமைச்சர்களாக இருந்த பனகல் ராஜாவும் தியாகராஜ செட்டியாரும் கடும் எதிர்ப்புக் காட்டியதால் கடைசி நொடியில் முயற்சி கைவிடப்பட்டது என்பதும் வரலாறு. சென்னை பெத்துநாய்க்கன் பேட்டையிலிருந்து சென்னை மாநகராட்சி உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டவர்; மாநகர மேயராக செயல்பட்டவர்; 1952-56 ல் சட்ட மேலவை உறுப்பினராகச் செயல்பட்டவர்.

அவர் மேயராக இருந்த போது ஒரு பிறந்த நாள் விழாவில் தியாகராய நகர் சாலை ஒன்றுக்கு அவர் பெயர் வைக்க வேண்டும் என்று கோரிக்கை வைக்கப்பட்டது. “நான் உறுப்பினராக உள்ள பெத்துநாய்க்கன் பேட்டையில் ஓர் சாலைக்கு ஏற்கெனவே என் பெயர் சூட்டப்பட்டுள்ளது. இனி எந்தச் சாலைக்கும் என் பெயர் சூட்ட வேண்டாம்” என உறுதியாக மறுத்தார். 1956 ல் சென்னை மாகாண சட்ட மன்றத்தில் தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் சி.சுப்பிரமணியத்தால் முன் மொழியப்பட்டது. மேலவையில் அதனை ஆதரித்து சக்கரைச் செட்டியார் ஆற்றிய உரை இன்னும் இளமை குன்றா உரையாகும். ஓய்வு நேரத்தில் கிறிஸ்துவ ஆலயங்களில் மதபோதனை செய்பவராக இருந்தார். ஒரு வழக்கில் கைது செய்யப்பட்ட போது என்னிடம் உள்ள ஒரே சொத்து நான் உடுத்தி இருக்கும் வேட்டியும், கோவணமும், சட்டையும், புத்தகமும்தான். அதை

வேண்டுமாயின் பறிமுதல் செய்து கொள்ளுங்கள் என்று சொன்னவர் .நீதிபதி மிரண்டு விடுதலை செய்தார் என்று மறைந்த தோழர் கே.கஜபதி [சிபிஎம் சென்னை மாவட்ட செயலாளராக இருந்தவர்] சொல்லக் கேட்டிருக்கிறேன். சக்கரைச் செட்டியார் ஒரு போதும் கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினராய் இருந்ததில்லை. ஆனால் உழைக்கும் மக்களுக்காய் கம்யூனிஸ்ட்டாகவே உழைத்தார். கம்யூனிஸ்ட் தலைவர்கள் எஸ்.ஏ.டாங்கே, இ.எம்.எஸ், ஏ.எஸ்.கே.அய்யங்கார், பி.ராமமூர்த்தி, கே.டி.கே. தங்கமணி என பலரோடு தோழமை பூண்டு தோழராகவே வாழ்ந்தார். 1958 ஆம் ஆண்டு தன் 82 வயதில் உயிர் துறக்கும் வரை தொழிலாளி வர்க்க பாசத்தைத் துறக்காத தோழர் அவர்.

# பெருமாளைத் தெரியுமா?

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 19, 2019




…

1928ல் நாகையில் ரயில்வே தொழிலாளர் போராட்டம் வெடித்தது. ஆலையை திருச்சிக்கு மாற்றுவதால் ஐயாயிரம் தொழிலாளர் வேலை போகும் என்பதால் ஏற்பட்ட கொதிப்பு. 10 நாள் போராட்டம் நீடித்தது. தமிழகம் முழுவதும் போராட்ட அலை வீசியது. பிரிட்டிஷ் ஆட்சி அடக்குமுறையைக் கட்டவிழ்த்துவிட்டது. டி.கிருஷ்ணசாமி,

ம.சிங்காரவேலர், முகுந்தலால் சர்க்கார் உள்ளிட்ட பலர் கைது செய்யப்பட்டனர்.

போலீசார் கையில் சிங்காரவேலரின் ‘தொழிலாளி’ பத்திரிகை அலுவலகம் குரங்கு கை பூமாலை ஆனது. பத்திரிகை முடக்கப்பட்டது. அந்த இதழில் கம்யூனிஸ்ட் அறிக்கை முதலில் ஒரு சிறு பகுதி வெளியிடப்பட்டதாகவும் ஏடு முடக்கப்பட்டதால் நின்று போனதாகவும் உறுதிப்படுத்தப்படாத செய்தி ஒன்று உண்டு. ஒரு பிரதிகூட கிடைக்கவில்லை. பின்னர் பெரியார் முயற்சியில் குடியரசில் வெளிவந்தது. இந்தப் போராட்டத்தை பெரியாரும் ஆதரித்தது குறிப்பிடத்தக்கது பிரிட்டிஷ் ரகசிய உளவுத்துறை கம்யூனிஸ்ட்டுகளே இப்போராட்டத்தின் பின்னால் இருந்து இயக்குவதாகவும்; ஆட்சியைக் கவிழ்க்கும் சதியின் ஒரு பகுதி என்றும் குற்றம்சாட்டியது.

“தென் இந்திய ரயில்வே சதி வழக்கு” என அறியப்பட்ட இவ்வழக்கில் லட்சுமணராவ் எனும் நீதிபதி தீர்ப்பு வழங்கினார்.கிருஷ்ணசாமி, சிங்காரவேலர், முகுந்தலால் சர்க்கார் ஆகியோருக்கு பத்தாண்டு சிறையும்; பெருமாள் என்கிற ரயில்வே தொழிலாளிக்கு ஆயுள் தண்டனை அதுவும் அந்தமான் சிறையில் எனத் தீர்ப்பாகியது. பத்தாண்டு சிறைத் தண்டனை குறைக்கப்பட்டாலும் பெருமாளுக்கு தண்டனைக் குறைப்பு இல்லை. அந்தமான் சிறையில் அடைக்கப்பட்ட – முதல் தமிழர் ரயில்வே தொழிலாளி பெருமாளே ஆகும். வ.உ.சிக்கு பின் ஆயுள் தண்டனை பெற்றவரும் இவரே.அந்தமான் சிறைச் சித்ரவதையின் கொடூரத்தைக் கிட்டத்தட்ட ஆறு ஆண்டுகளுக்கு மேல் அனுபவித்தார்.

‘1937 மாண்டேகு செம்ஸ்போர்ட் சீர்திருத்தத்தைத் தொடர்ந்து ராஜாஜி முதலமைச்சர் ஆனார். அரசியல் கைதிகள் விடுவிக்கப்பட்டனர்.பெருமாளும் விடுதலையானார். சாவர்க்கரை பற்றி பேசும் எத்தனை பேர் பெருமாளை அறிவர்?

# 1920க்கு முன்பே லெனினைச் சந்தித்தவர்கள்

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 20, 2019




…

100 ஆண்டு கம்யூனிஸ்ட் இயக்கத்தில் சில சாட்சிகள் - 5

லெனினும் ரஷ்யப் புரட்சியும் கம்யூனிசக் கருத்துகளும் 1920-க்கு முந்தியே இம்மண்ணுக்குள் விதைக்கப்பட்டுவிட்டன .இன்னும் சொல்லப் போனால்

ரஷ்யப் புரட்சி வெற்றி பெறும் முன்பே லெனினோடும் போல்ஷ்விக் கட்சியோடும் தொடர்பு கொள்ள முயன்றோர் உண்டு . 1907 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 18 முதல் 24 வரை ஜெர்மனியில் ஸ்டுட்கார்டு எனுமிடத்தில் நடந்த இரண்டாவது உலக சோஷலிஸ்ட் கட்சி மாநாட்டில் இந்தியாவிலிருந்து பார்ஸி வகுப்பைச் சார்ந்த புரட்சிகரப் பெண் மேடம் பாய்க்காய்ஜி காமாவும் , சர்தார் சிங் ராஜி ராணாவும் பங்கேற்றுள்ளனர் .அம்மாநாட்டில் ஒரு இந்தியக் கொடியையும் இவர்கள் அறிமுகம் செய்துள்ளனர் .

இம்மாநாட்டில் இந்தியாவை வாட்டும் பஞ்சம் குறித்தும் ,பலியாகும் மனித உரிமைகள் ,சமத்துவமின்மை குறித்தும் மேடம் காமா உணர்ச்சி கொப்பளிக்க உரையாற்றி உள்ளார். இம்மாநாட்டில் 25 நாடுகளில் இருந்து பிரதிநிதிகள் வந்துள்ளனர் . ரஷ்யாவிலிருந்து லெனினும் ,லூனார்ஸ்கியும் வேறு சிலரும் பங்கேற்றுள்ளனர் . மேடம் காமாவும் ராணாவும் லெனினைச் சந்தித்துள்ளனர் . ஆனால் அது அதிகாரப் பூர்வ சந்திப்பாகக் கருத இயலாது .இருவரும் லெனினோடு உரையாடினார்களா என்கிற விபரம் ஏதும் இல்லை . மேடம் காமாவும் பங்கேற்ற புரட்சிக் குழுவினர் வந்தேமாதரம் என்கிற பத்திரிகை நடத்தி வந்துள்ளனர் .அதன் ஆசிரியராக இருந்த வீரேந்திரநாத் சட்டோபாத்யாயா ரஷ்யாவில் நடக்கும் புரட்சி முயற்சிகள் பற்றி மேடம் காமா மூலம் அறிகிறார் . இவர் கவிக்குயில் சரோஜினி நாயுடுவின் உறவினரும் ஆவார் . ரஷ்யப் புரட்சிக்கு முன்பே போல்ஷ்விக் கட்சியோடு தொடர்பு கொள்ள முயன்றிருக்கிறார். ஆனால் புரட்சியை நோக்கி நகர்ந்து கொண்டிருந்த ரஷ்யச் சூழலில் இவரது முயற்சி

கைகூடவில்லை . பின்னர் 1920 க்கு பிறகு ஒரு கம்யூனிஸ்ட்டாகத்தான் லெனினை சந்திக்க முடிந்திருக்கிறது .

ரஷ்யப் புரட்சி வெற்றி பெற்ற பின் சத்தார் கெய்ரி ,ஜாபர் கெய்ரி ஆகிய இரு முஸ்லிம்கள் லெனினைச் சந்தித்துள்ளனர் . அவர்கள் முஸ்லிம் தேசபக்த தீவிரவாதிகள் . அந்த சந்திப்புக்கு லெனின் பெரிய முக்கியத்துவம் அளிக்கவில்லை . காபூலில் நிழல் இந்திய அரசை அமைத்து அதன் பிரதமராக இருந்தவர் உத்தரப்பிரதேசத்தைச் சார்ந்த குறுநில மன்னர் ராஜா மகேந்திர பிரதாப் சிங் . அவருடன் எம்.பி.பி.டி ஆச்சார்யா,செண்பகராம் பிள்ளை ,அப்துல்ராய் , பஞ்சாபி திலீப் சிங் ,பர்கத்துல்லா , இப்ராஹிம் ஆகியோர் லெனினைச் சந்தித்துள்ளனர் . 1919 மே 7 அன்று நடந்த இந்தச் சந்திப்பு குறித்து பிரதாப் சிங் எழுதியுள்ளார். “பிரதிநிதிக் குழுத் தலைவர் என்ற முறையில் லெனின் அறையில் நான் முதலில் நுழைந்தேன். எதிரே அமர்ந்திருந்த அவரை நோக்கிச் சென்றேன். ஆனால் அந்த நாயகரோ உடனே எழுந்து அறையின் மூலைக்குச் சென்று இன்னொரு நாற்காலியை எடுத்துவந்து தன் அருகே போட்டு என்னை அமரச் சொல்லி திகைப்பில் ஆழ்த்திவிட்டார் . அவருக்கு “அன்பு மதம்”எனும் என் நூலை வழங்கினேன்.அவர் அதை ஏற்கனவே படித்துவிட்டதாகவும் அது டால்ஸ்டாயிசம் என்றார் . அப்போதுதான் நினைவுக்கு வந்தது முதல் நாள் ஓர் அதிகாரி அதை வாங்கிச் சென்றது . அவரிடம் நீண்ட நேரம் பேசினோம் .பர்கத்துல்லாவின் பணியாளரிடம் கூட உரையாடி சிலவற்றைக் கேட்டறிந்தார் .” இந்த ராஜா மகேந்திர பிரதாப் சிங்தான் 1957 ல் மதுரா தொகுதியில் சுயேச்சையாகப் போட்டியிட்டு

ஜனசங்க வேட்பாளர் வாஜ்பாயைத் தோற்கடித்தவர் .1979 ல் இறக்கும் வரை இடதுசாரியாகவே இருந்தார். இப்படி எல்லாம் நடந்த பல்வேறு முயற்சியின் உச்சமாகத்தான் 1920 அக்டோபர் 20 அன்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் கிளை தாஷ்கண்டில் துவங்கப்பட்டது.

சத்ய பக்தாவின் முயற்சியும் சிங்காரவேலரின் முயற்சியும்

சோவியத் வரலாற்று ஆசிரியர் அன்தனோவா சிங்காரவேலரின் ஆரம்பகால கம்யூனிஸ்ட் தொடர்புகளைப் பற்றி எழுதும்போது பின்வருமாறு குறிப்பிட்டு உள்ளார்:-

கான்பூர் பத்திரிகையாளரான சத்ய பக்தா என்பவர் சட்டப்பூர்வமான ‘இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி’ அமைக்கப்பட்டிருப்பதாக 1924, செப்டம்பர் மாதம் அறிவித்தார். இந்தக் கட்சி கம்யூனிஸ்டு அகிலத்துடனும் மற்ற அயல்நாட்டுப் புரட்சி மையங்களுடனும் தொடர்பு கொண்டிருக்கவில்லை என்று அதன் தலைவர்கள் தங்கள் அறிக்கையில் அழுத்திக் கூறியிருந்தார்கள். இந்தக் காரணத்தால் அது நிறுவப்பட்டதை அதிகாரிகள் பொறுமையுடன் அனுமதித்தார்கள். சத்ய பக்தா அமைத்த கட்சி இந்தியக் கம்யூனிஸ்டுகளுக்கு ஈர்ப்பு மையமாக விளங்கவில்லை என்றாலும் இந்திய மார்க்சியவாதிகளின் தனித் தனிக் குழுக்களை ஒன்றாக இணைப்பதற்கான முன்னேற் பாடுகளை அவர் தொடர்ந்தார்.

ஒன்றிணைப்பு மகாநாடு கூட்டுவதற்கு முன்னேற்பாடுகள் செய்யும் பொருட்டு இடதுசாரி காங்கிரஸ்காரரான ஹஜரத் மொஹானியின் தலைமையில் ஒழுங்கமைப்புக் கமிட்டி நிறுவப்பட்டது. இதன் பயனாக

இந்தியக் கம்யூனிஸ்டுகளின் முதல் மகாநாடு 1925, டிசம்பர் 28 முதல் 30 வரை கான்பூரில் சென்னை கம்யூனிஸ்டு எம்.சிங்காரவேலரின் தலைமையில்நடந்தது. இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியை அமைப்பது என்றும் அதன் மையத்தை பம்பாயில் வைத்துக் கொள்வது என்றும் மகாநாட்டில் முடிவு செய்யப் பட்டது. தேர்ந்தெடுக்கப்பட்ட மத்திய செயற் குழுவின் செயலாளர்களான ஜே.பெகெர்ஹொத் தாவும் எஸ்.வி.காட்டேயும் பதவி ஏற்றார்கள். இந்தியாவில் இருந்த முக்கியமான கம்யூனிஸ்டுக் குழுக்கள் எல்லாவற்றினுடையவும் பிரதிநிதிகள் மத்தியச் செயற்குழுவில் இடம் பெற்றார்கள். உழைப்பாளி மக்களின் சட்டப்பூர்வமான வெகுஜன நிறுவனத்தை - தொழிலாளி-விவசாயிக் கட்சியை - கம்யூனிஸ்டுகளின் தலைமையில் நிறுவுவதற் கான முதல் முயற்சி 1923லேயே சிங்காரவேலரால் மேற்கொள்ளப்பட்டது”

- பெரணமல்லூர் சேகரன்

# இந்தியாவில் புரட்சிகர கர்ப்பச் சூழல் உருவானது

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 21, 2019




…

100 ஆண்டு கம்யூனிஸ்ட் இயக்கத்தில் சில சாட்சிகள் - 6

நாட்டு விடுதலைக்காக போராடிக் கொண்டிருக்கும்போதே

தொழிலாளர்களின் உரிமைக்காகவும் நல்வாழ்வுக்காகவும் தனி அமைப்பு

வேண்டுமென்று இடதுசாரி மனோபாவம் கொண்டவர்கள் வலியுறுத்தினர். சோவியத் நாட்டில் புரட்சி வெற்றிபெற்று லெனின் தலைமையில் அரசு அமைந்த பின்னர் இந்த எண்ணம் வலுப்பெற்றது. இந்நிலையில் 1920 அக்டோபர் 31 அன்று மும்பையில் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் (ஏஐடியுசி) துவக்கப்பட்டது. அதனை லாலா லஜபதி ராய், ஜோசப் பாப்டிஸ்டா, என்.எம்.ஜோஷி, திவான் சமன்லால் மற்றும் பலர் நிறுவினர்.

“கொந்தளிக்கும் கடலில் சுழன்றடிக்கும் அலைகளைப் போல் வேலை நிறுத்த நடவடிக்கைகள் எங்கும் பரவின. ரயில்வே துறைமுகம், துறைமுக சரக்குப் பகுதி, இஞ்ஜினியரிங் பணிமனைகள், எண்ணெய் நிறுவன அமைப்புகள், அரசு நாணயம் உருவாக்குமிடம், அரசு அச்சகம், ட்ராம்வே, கேஸ் மற்றும் மின்சாரம் வழங்குதுறை, நகராட்சி தொழிலாளர்கள்; ஒரே வார்த்தையில் கூறுவதானால் தொழிலாளிவர்க்கம் ஒட்டுமொத்தமாக இந்த வேலை நிறுத்தங்களில் பங்கேற்றன. ஏறிக்கொண்டிருக்கும் விலைவாசியைச் சமாளிப்பதற்காக ஊதிய உயர்வைப் பெறுவதற்காகவே இந்த வேலை நிறுத்தங்கள் துவங்கப்பட்டன” என 1920 க்கு முன்னும் பின்னுமான காலகட்டத்தை விவரிக்கிறார் சுகுமால் சென்.

1920-21 ஆண்டுகளில் மக்களிடையே தோன்றிய எழுச்சி என்பது தோற்கடிக்கப்பட முடியாத அளவிற்கு உருப்பெற்றது. 1920ல் முதல் ஆறுமாதத்தில் மட்டும் 200க்கும் மேற்பட்ட வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன. இதில் 15லட்சம் தொழிலாளர்கள் பங்கேற்றனர். முதல் உலகப் போருக்கு பிந்தைய காலகட்டத்தில் நாடெங்கும் தொழிலாளரிடையே போராட்ட எழுச்சியை உருவாக்கியது. இந்தியாவின்

முக்கிய தொழில் நகரங்கள் அனைத்திலும் வேலை நிறுத்தங்கள் வெடித்தெழுந்த காலகட்டம் அது.இதன் கடும் எதிரொலி காங்கிரஸ் கட்சியிலும் எதிரொலித்தது. செப்டம்பர் மாதம் காங்கிரஸ் மாநாட்டில் தலைமையுரையில் லாலா லஜபதிராய் வெளிப்படையாகச் சொன்னவரிகள் கொதிநிலையின் அளவீடு ஆகும்.

“நாம் புரட்சிகரமான காலத்தைக் கடந்து சென்று கொண்டிருக்கிறோம் என்ற உண்மையை கண்டு நம் கண்களை மூடிக் கொள்வதில் எவ்வித பயனுமில்லை.இயல்பாகவும் பாரம்பரியமான முறையிலும் நாம் புரட்சியை விரும்பாதவர்கள்தான். பாரம்பரியமாக நாம் மிக மெதுவாகச் செல்கின்ற மக்கள்தாம். எனினும் நகர்ந்து செல்வது என நாம் தீர்மானித்த பிறகு, நாம் விரைவாகவும் வேகமாகவும் அடியெடுத்து வைத்து நகர்வோம். உயிரோடு இருக்கின்ற எந்த இனமும் அதன் உயிர் வாழ்வின் போது புரட்சிகளில் இருந்து முற்றிலுமாக தப்பித்துவிட முடியாது.”

விடுதலைப் போரில் தலைமைதாங்கிய முதலாளி – நிலப்பிரபுத்துவ வர்க்கம் பாட்டாளி வர்க்க எழுச்சி கண்டு மிரண்டது வியப்பல்ல. வர்க்ககுணமே. 1918ல் சென்னை தொழிலாளர் சங்கம் என்கிற முதற் சங்கம் காணப்பட்டதும்; 1918, 1919, 1920 என ஒவ்வொரு ஆண்டிலும் வேலை நிறுத்தங்கள் பல்கிப் பெருகின எனில் மிகை அல்ல. கொந்தளிக்கும் மாகாணங்களில் சென்னை மாகாணமும் ஒன்றானது. ஏஐடியுசி எனப்படும் அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸ் உதயமானதும் இப்போதுதான். அதில் ஆரம்பத்தில் காங்கிரஸும் கம்யூனிஸ்ட்டும் சேர்ந்தே செயல்பட்டது வரலாறு. பெருமளவு தொழில் அமைதி சீர்குலைந்து விட்டதாக

இங்கிலாந்தில் இருந்து வெளிவரும் ஏடுகள் அலறின. இந்த தட்பவெப்ப சூழல் ரஷ்யப் புரட்சியின் தொடர் வினையென ஏகாதிபத்தியங்கள் கணித்ததிலும் மிரண்டதிலும் பிழையே இல்லை.

ரஜினி பாமிதத்தை மேற்கோள் காட்டி சுகுமால் சென் கூறுகிறார், "இதன் தொடர்ச்சியாக மார்க்சிய தத்துவத்தின் முதல் ஒளிக்கீற்று இந்தியாவை வந்தடைந்ததும், இந்திய சமூகத்தில் தெளிவுபெற்ற ஒரு பிரிவினர் – துவக்கத்தில் சிறியதாக இருப்பினும்கூட இந்த புரட்சிகரத் தத்துவத்தால் கவரப்பட்டனர். இந்திய அரசியல் வானில் இப்புரட்சியின் செல்வாக்கை நேரடியாக உணரத் தலைப்பட்டனர்." ஆம். 1920 அக்டோபர் 17ல் தாஷ்கண்டில் கம்யூனிஸ்ட் இயக்கக் கிளை பிறந்தாலும் அதற்கான கர்ப்பச் சூழல் இந்திய அரசியல் வானில் தெளிவாக உணரப்பட்டது.

# தொழிலாளி வர்க்க தொப்புள்கொடி உறவு

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 22, 2019




…

100 ஆண்டு கம்யூனிஸ்ட் இயக்கத்தில் சில சாட்சிகள் - 7

ஜவஹர்லால் நேரு

கம்யூனிஸ்ட்டுகளும் சோஷலிஸ்ட்டுகளும்தான் வர்க்கங்களாகப் பிரித்து

கசப்புணர்வைப் பிரச்சாரம் செய்கிறார்களா? தனது கொள்கை, நடைமுறை மூலம் மனித குலத்தின் பெரும்பகுதியினரை– பழங்கால அடிமையினும் மோசமான கூலியடிமையாய் ஆக்கியது யார்? முதலாளித்துவமும் ஏகாதிபத்தியமும் அல்லவா?”

லாலா லஜபதி ராய்
என் சொந்த அனுபவத்தில் அமெரிக்க ஐரோப்பிய அனுபவத்தில் ஏகாதிபத்தியத்தைவிட முதலாளித்துவத்தைவிட உண்மையானது நம்பத் தகுந்தது – எல்லா நாட்களிலும் போல்ஷ்விக்
கூறும் உண்மையே!”

“வர்க்கப் போராட்டத்தைப் பிரச்சாரம் செய்கிறோம் என்றும், வர்க்கங்களுக்கு இடையிலான இடைவெளியை மேலும் அகலப்படுத்துகிறோம் என்றும் நம்மீது அடிக்கடி குற்றம்சாட்டப்படுகிறது. முதலாளித்துவத்தினாலேயே இந்த இடைவெளி மேலும் ஆழமாகிறது. அந்த வகையில் முதலாளித்துவத்தின் சாதனையை வேறெதனாலும் முறியடித்துவிட முடியாது. ஆயினும் நம்மைக் குறை கூறுபவர்களோ எதையும் கிஞ்சிற்றும் ஏறெடுத்துப் பார்க்காதவர்களாகவும், தங்களைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதை அறிய முயலாதவர்களாகவுமே உள்ளனர். கம்யூனிஸ்ட்டுகளும் சோஷலிஸ்ட்டுகளும்தான் வர்க்கங்களாகப் பிரித்து கசப்புணர்வைப் பிரச்சாரம் செய்கிறார்களா? தனது கொள்கை, நடைமுறை மூலம் மனித குலத்தின் பெரும்பகுதியினரை – பழங்கால அடிமையினும் மோசமான கூலியடிமையாய் ஆக்கியது யார்? முதலாளித்துவமும் ஏகாதிபத்தியமும் அல்லவா?”

இப்படி ஆவேசமாய் கேள்வி எழுப்புவது யார்? கம்யூனிஸ்ட் தலைவரா? அல்ல, அல்ல. பண்டித ஜவஹர்லால் நேருவேதான். 1928ல் டிசம்பர் 1 ல் நாக்பூரில் நடந்த ஏஐடியுசி மாநாட்டின் தலைமையுரையில் இப்படி முழக்கமிட்டார். மேலும் சொன்னார்; "இந்த வர்க்கப் போராட்டம் நம்மால் உருவாக்கப்பட்டதல்ல; அது முதலாளித்துவத்தினால் உருவாக்கப்பட்டது; முதலாளித்துவம் நீடிக்கும் வரை அதுவும் நீடிக்கும். நெருப்புக் கோழி மணலில் தலையை புதைத்துக் கொள்வதுபோல அதை ஒதுக்கிவிடுவதின் மூலம் நாம் விடுபட்டுவிட முடியாது. இதற்கான காரணங்களை அகற்றுவதன் மூலம் மட்டுமே நம்மால் அமைதியைக் கொண்டுவர முடியும்". பின்னர் ஒரு கட்டத்தில் [1947 மே மாதம்] வர்க்க சமரசத்தை தேர்ந்தெடுத்து ஐஎன்டியுசி எனும் தனி அமைப்பை காங்கிரஸ் உருவாக்கியது தனிக்கதை. தொழிலாளி வர்க்கக் கட்சியான கம்யூனிஸ்ட் கட்சிக்கும் தொழிற்சங்க இயக்கத்துக்கும் இடையிலான தொப்புள் கொடி உறவு வலுவானது.

1894ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி இந்தியாவின் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை 815. தொழிலாளர் எண்ணிக்கை சுமார் 3,50,000. ஆனால் 1914ல் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை 3000 ஆகவும் தொழிலாளர் எண்ணிக்கை 9,50,000 ஆகவும் உயர்ந்தன. தூத்துக்குடி கோரல் மில் போராட்டம், பம்பாய் நெசவு ஆலைத் தொழிலாளர் போராட்டம், ரயில்வே தொழிலாளர் போராட்டம் என போராட்டங்கள் சீறி எழுந்தன.

வ.உ.சிதம்பரம் கைது செய்யப்பட்ட போது 1908 மார்ச் 14-19 நடைபெற்ற தூத்துக்குடி வேலைநிறுத்தமே முதல் அரசியல் வேலை நிறுத்தமாகும்.

திலகர் கைது செய்யப்பட்ட போது ஜூலை 23-28 பம்பாயில் நடை பெற்ற வேலைநிறுத்தம் அளவில் பெரியது. ஆனால் வட இந்திய வரலாற்று ஆசிரியர்கள் தமிழகத்தின் பங்கை அங்கீகரிக்காமலே வரலாற்றை வடிக்கின்றனர்.

ஆக, இருபதாம் நூற்றாண்டின் முதல் கால் பகுதியில் புதிதாய் வரலாற்றில் தோன்றிய தொழிலாளி வர்க்கம் இந்திய மண்ணில் மெல்ல உருவாகி மேலெழுந்து ஓங்கி வளர்ந்ததும்; அதன் தொடர் வினையாய் தொழிற் சங்க இயக்கம் முளைவிட்டதும்; மகுடமாய் தொழிலாளி வர்க்கக் கட்சி உதயமானதும் மிக முக்கியமான வரலாற்றுச் செய்தியாகும். பள்ளி பாடப் புத்தகம் இதனை சொல்லித் தருவதில்லை. ஆயினும் வரலாற்றில் இதன் ஆழமான தடம் ஒரு போதும் மறைந்துவிடாது.

1920 அக்டோபர் 31 ஆம் நாள் ஏஐடியுசி எனும் அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸ் பிறப்பை அறிவித்த மாநாடு கூடியது. ஐந்து லட்சம் தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப் படுத்திய 60 சங்கங்களின் சார்பில் 806 பிரதிநிதிகளும் 40 பார்வையாளர்களும் பங்கேற்றனர். தலைமையுரை ஆற்றிய லாலா லஜபதி ராய் குறிப்பிட்டார். “ராணுவமயமும் ஏகாதிபத்தியமும் முதலாளித்துவத்தின் இரட்டைக் குழந்தைகள். அதன் நிழல், சிரிப்பு, குரைப்பு எல்லாமே விஷமாகும். அதன் விஷ முறிவுக்கு ஒரேமருந்து திரட்டப்பட்ட தொழிலாளர்களே! அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய தொழிலாளர்கள் ஒன்று திரளத் துவங்கிவிட்டனர். ரஷ்யாவில் அதற்கும் மேல் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் எனும் நோக்கில் தலைமைக்கு வந்துள்ளனர்.

நாம் உண்மை என்று நம்புபவை நெடுநாள் அப்படியே இருக்கப்போவதில்லை. ஏகாதிபத்தியமும் முதலாளித்துவமும் ஒரு புறம், சோஷலிசம் மறுபுறம் என நெடுநாள் செல்ல முடியாது. என் சொந்த அனுபவத்தில் அமெரிக்க ஐரோப்பிய அனுபவத்தில் ஏகாதிபத்தியத்தைவிட – முதலாளித்துவத்தைவிட உண்மையானது நம்பத் தகுந்தது – எல்லா நாட்களிலும் போல்ஷ்விக் கூறும் உண்மையே!” இதே லாலா லஜபதிராய் காங்கிரஸ் கட்சி மாநாட்டில் கம்யூனிசம் பெரும் சவாலாகிவிடும் என அச்சம் தெரிவித்தது தனிக்கதை. முன்பு பார்த்தோம்.

ஏஐடியுசியிலிருந்து 1947ல் ஐஎன்டியுசி பிரியும் முன்பு 1928ல் ஒரு சாரர் பிரிந்ததும்; 1931ல் இன்னொரு சாரார் பிரிந்ததும்; 1933ல் மீரட் சதி வழக்கு முடிந்து கம்யூனிஸ்டுகள் வெளிவந்த பின் மீண்டும் ஒன்றானதும் வரலாறு.

# கம்யூனிஸ்ட்டுகளை வார்க்கும் பட்டறைகள்

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 23, 2019




…

இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட், ஏ.கே.கோபாலன், பி.ராமமூர்த்தி, எம்.ஆர். வெங்கட்ராமன், என்.சங்கரய்யா, ஏ.பாலசுப்பிரமணியன், ஏ.நல்லசிவன், ஆர்.உமாநாத் போன்ற பலரின் வாழ்க்கை வரலாற்றை வாசித்தால் வேலூர்,

சேலம், கோவை, மதுரை, சென்னை, பெல்லாரி என ஒவ்வொரு சிறையும் காங்கிரஸ் கட்சித் தொண்டராய்ச் சிறை சென்றோரை கம்யூனிஸ்டாக்கித் திருப்பி அனுப்பிய கதையைச் சொல்லும்.

கே.முத்தையா, ஆர்.உமாநாத், ப.மாணிக்கம், சுப்பிரமணிய சர்மா, ஆர்.கே.கண்ணன், சி.கோவிந்தராஜன் போன்றோர் சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழக பட்டறையில் உருவான கம்யூனிஸ்டுகள். எம்.சங்கரய்யா மதுரை அமெரிக்கன் கல்லூரி போராட்டத்தில் கைது செய்யப்பட்டு ஆந்திரா ராஜமுந்திரி சிறையில் அடைக்கப்பட்டார். ஆக கல்விச்சாலைகளும் சிறைச்சாலைகளும் கம்யூனிஸ்ட்களை வார்க்கும் பட்டறை ஆயின.

விடுதலைப் போரின் போது சிறைச்சாலைகளும் கல்விச் சாலைகளும் கம்யூனிஸ்ட்டுகளைத் தயாரிக்கும் பட்டறைகளாயின. தொழிற்சாலைகளும் வேளாண் களமும் போர்க்களங்களாயின. அவை கம்யூனிஸ்டுகளாய் புடம் போடும் உலைக்களமாயின. “திருச்சி சிறையிலிருந்து கம்யூனிஸ்ட் புரட்சிக்காரன் என்ற ஞானஸ்தானம் பெற்று வெளியே வந்த நான் - சிறையினுள் காந்தியை, காங்கிரஸை, கதரை, கடவுளை எதிர்ப்பவர்கள் என்று வைதீக காங்கிரஸ்காரர்களால் பழிக்கப்பட்டு நின்ற ஒரு சிலரின் முன்னணி வீரரான நான் – சிறையில் வங்கபுரட்சி வீரர்களோடும் பகத்சிங்கின் தோழர்களோடும் பழகியும் விவாதித்தும், மார்க்சிய இலக்கியங்களை ஓரளவுகற்றும் சமதர்ம உறுதியோடும் வெளிவந்திருந்த நான்…”

இப்படி ப.ஜீவானந்தம் கொடுக்கும் வாக்குமூலம் தனிக்குரல் அல்ல; ஒவ்வொரு சிறையிலும் அதுவே அனுபவம். விடுதலைப் போரில் நானி கோபால் முகர்ஜி என்கிற வங்க இளைஞன். வயது 16. போலீஸ் அதிகாரியை கொல்ல முயன்ற வழக்கில் கைது செய்யப்பட்டு அந்தமான் சிறைக்கு அனுப்பப்பட்டார். அந்தச் சிறைவாசம் அவரைக் கம்யூனிஸ்டாக்கி வெளியே அனுப்பியது. அந்தமான் சிறைக்கு அனுப்பப்பட்ட தீவிரவாதிகள் பலர் சாகச நடவடிக்கைகள் நீண்ட காலப் பலன் தராது; உழைப்பாளி மக்களைத் திரட்டும் கம்யூனிசமே தீர்வு என கண்டடைந்தனர். இந்த நெடிய வரலாறே தனியாக எழுதப்பட வேண்டும்.

இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட், ஏ.கே.கோபாலன், பி.ராமமூர்த்தி, எம்.ஆர். வெங்கட்ராமன், என்.சங்கரய்யா, ஏ.பாலசுப்பிரமணியன், ஏ.நல்லசிவன், ஆர்.உமாநாத் போன்ற பலரின் வாழ்க்கை வரலாற்றை வாசித்தால் வேலூர், சேலம், கோவை, மதுரை, சென்னை, பெல்லாரி என ஒவ்வொரு சிறையும் காங்கிரஸ் கட்சித் தொண்டராய்ச் சிறை சென்றோரை கம்யூனிஸ்டாக்கித் திருப்பி அனுப்பிய கதையைச் சொல்லும்.

கல்கி வார ஏட்டிற்கு 1984ல் பேட்டி அளித்த எம்.கல்யாணசுந்தரம் நினைவுகூர்கிறார்: “மார்க்ஸையோ ஏங்கெல்ஸையோ படித்துவிட்டு கம்யூனிஸ்ட் ஆனவனல்ல நான். கம்யூனிஸ்ட் தலைவர்களோடு பழகும் வாய்ப்பு கிடைத்தது .ஆனால் அந்த காலகட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்டிருந்தது.கம்யூனிசத்தைப் பற்றி எந்த புத்தகத்தையும் விற்பனை செய்ய முடியாது. ஏன் வைத்துக் கொண்டிருப்பதே குற்றம். டாக்டர் கிருஷ்ணசாமி, கே.ஏ.சாரி போன்றவர்களிடமிருந்து தடை

செய்யப்பட்ட புத்தகங்களை வாங்கிப் படித்தேன். பின்னர்1940 ல் சிறையில் இருந்தபோது சிறுமி இந்திராவுக்கு நேரு எழுதிய கடிதங்கள் [உலக சரித்திரம்], ரஷ்யப்புரட்சி புத்தகங்களைப் படிக்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. என்னை கம்யூனிஸ்ட் ஆக்குவதற்கு இவை தூண்டுகோலாக இருந்தன." எம்.ஆர்.வெங்கட்ராமன், ஏ.பாலசுப்பிர மணியம் போன்றோர் தங்கள் சிறை அனுபங்களைச் சொல்லும் போது ராஜாஜி, பட்டாபி சீத்தாராமய்யா, சத்திய மூர்த்தி போன்றோர் சிறைச் சாலையில் கம்யூனிஸ்டுகள் நடத்தும் வகுப்புகளுக்கு போகக்கூடாது என காங்கிரஸ் தொண்டர்களைத் தடுத்தனர். ஆனால் மீறி வந்து கம்யூனிஸ்ட்டாக பலர் ஞானஸ்தானம் பெற்றது தொடர்கதை என விவரிப்பர்.

மாணவர்களைத் திரட்ட மாணவர் அமைப்பு உருவாக்கப்பட்டது. 1946 ஏப்ரல் மாதம் லக்னோவில் அனைத்து இந்திய மாணவர் பெருமன்றம் [ஏஐஎஸ்எப்] உருவானது. இதே ஆண்டுதான் அகில இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கம் உருவானது. 1936ல் அகில இந்திய மனித உரிமை அமைப்பு உருவாக்கப்பட்டது. கவியரசர் இரவீந்திரநாத் தாகூர், கவிக்குயில் சரோஜினி நாயுடு ஆகியோர் இதில் செயல்பட்டது கூடுதல் செய்தி. அகில இந்திய விவசாயிகள் சங்கம் உருவானதும் அதே 1936ல் தான். 1937 டிசம்பர் 31, 1938 ஜனவரி 1 ஆகிய இரு தினங்கள் சென்னையில் மாணவர் சங்க அகில இந்திய மாநாடு நடை பெற்றது. இம்மாநாட்டிற்கு தலைமை ஏற்றவர் எம்.ஆர்.மசானி. இவர் பின்னாளில் சோஷலிஸ்ட் இயக்கத்தில் தீவிரமானார். அவர் தன் தலைமை உரையில் குறிப்பிட்டார்.

“அனைத்திந்திய மாணவர் பெருமன்றம் மாணவர்களுக்கான அரசியலைக் கொண்டுள்ள மாணவர் அமைப்பாகும். காந்தியவாதிகள், கம்யூனிஸ்டுகள், தேசியவாதிகள் என்று பல்வேறு சித்தாந்தங்களைச் சேர்ந்தவர்கள்.மாணவர்களை அரசியல் ரீதியாகத் தயாரித்தல், சுதந்திரப் போரில் ஈடுபட வைத்தல் என்பது இதன் நோக்கமாகும்.” கே.முத்தையா, ஆர்.உமாநாத், ப.மாணிக்கம், சுப்பிரமணிய சர்மா, ஆர்.கே.கண்ணன், சி.கோவிந்தராஜன் போன்றோர் சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழக பட்டறையில் உருவான கம்யூனிஸ்டுகள். எம்.சங்கரய்யா மதுரை அமெரிக்கன் கல்லூரி போராட்டத்தில் கைது செய்யப்பட்டு ஆந்திரா ராஜமுந்திரி சிறையில் அடைக்கப்பட்டார். ஆக கல்விச்சாலைகளும் சிறைச்சாலைகளும் கம்யூனிஸ்ட்களை வார்க்கும் பட்டறை ஆயின.

# காங்கிரஸ் - சோசலிஸ்ட் - கம்யூனிஸ்ட் இணைந்ததும் பிரிந்ததும்

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 24, 2019




…

சோஷலிசம் இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈர்ப்பு மையமாகவே திகழ்ந்தது. காங்கிரஸ் மீதான அதிருப்தியும் கோபமும் ஒருபுறம்

இளைஞர்களை தீவிரவாதம் பக்கம் துரத்தின. மறுபுறம் லெனினும் ரஷ்யப் புரட்சியும் சோஷலிசமும் இழுத்தன. 1932 ல் காங்கிரஸ் அறிவித்த சட்ட மறுப்பு இயக்கம் அரசைச் சீண்டுவதாக இருந்தது. அதையடுத்து காந்தி, ஜவகர்லால் நேரு உள்ளிட்ட பெரும்பாலான காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்கள். ஜெயப்பிரகாஷ் நாராயணன் நாசிக் சிறையில் அடைக்கப்பட்டார்.

நாசிக் சிறைவாசம் தான் ஜெயப்பிரகாஷ் நாராயணனின் வாழ்க்கையில் பெரும் திருப்பத்தை ஏற்படுத்தியது. சிறையில் இருந்த ராம் மனோகர் லோகியா, அசோக் மேத்தா, மினு மசானி, அச்யுத் பட்வர்த்தன், யூசுப் தேசாய் போன்ற சக சிறைவாசிகளுடன் உரையாடல்களில் ஈடுபட்டார்; சோஷலிசம் மட்டுமே அனைத்து பிரச்னைகளுக்கும் தீர்வு எனும் உறுதியான நம்பிக்கை ஏற்பட்டது. இந்திய அரசியலில் ஒரு புதியபாதையை உருவாக்க வாய்ப்பு ஏற்பட்டது. சிறையிலிருந்து தோழர்கள் விடுதலை ஆனவுடன், பாட்னா மாநாட்டில் கூடிய சோஷலிஸ்ட் ஆர்வலர்கள் ஓர் தனி அமைப்பு காண விரும்பி, நகல்திட்டம் தயாரிக்க ஜெயப்பிரகாஷ் தலைமையில் ஓர் குழு அமைத்தனர்.

மகாத்மாகாந்தியும் காங்கிரஸ் கட்சிக்குள் காங்கிரஸ் சோஷலிஸ்ட் தனியே செயல்படுவதை ஆதரித்தார். தமக்கும் கம்யூனிஸ்ட் கொள்கை பலது பிடிக்கும் என்றும் அவர்கள் வழிமுறையோடுதான் தாம் மாறுபடுவதாகச் சொன்னார். 1934 ல் பம்பாயில் நடந்த காங்கிரஸ் மாநாட்டின் போது ஏற்கெனவே ஒப்புக்கொண்டபடி இந்தியா முழுவதுமிருந்து வந்திருந்த பிரதிநிதிகள் ‘காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியை’ உருவாக்கினர்.

ஆச்சாரியா நரேந்திரநாத் தலைவராகவும் ஜெயப்பிரகாஷ் நாராயணன் பொதுச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ராம் மனோகர் லோகியா, இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட், கேளப்பன், பி.ராமமூர்த்தி, ப.ஜீவானந்தம், ஏ.எஸ்.கே. ஐயங்கார் உள்ளிட்டோர் அதில் இணைந்து செயல்பட்டனர்.

பெரியார் ஈரோட்டு திட்டத்தை கைவிட்டு சமூகப் பிரச்சனைகளுக்கே முக்கியத்துவம் கொடுத்துப் போராடப் போவதாக அறிவித்த போது மனமுடைந்தோரை ஒருங்கிணைத்து ‘சுயமரியாதை சமதர்மக் கட்சி’யை உருவாக்கிட ப.ஜீவானந்தம் முயன்றார். திருச்சியில் கூட்டப்பட்ட மாநாட்டைத் துவக்கி வைத்த எஸ்.ஏ.டாங்கே தனிக்கட்சி தேவை இல்லை. காங்கிரஸ் சோஷலிச கட்சியில் அங்கமாகலாம் என ஆலோசனை சொன்னார். எஸ்.ஏ.டாங்கேயின் வேண்டுகோளை ஏற்று அமைப்பு மாநாட்டிலேயே சுயமரியாதை சமதர்மக் கட்சி கலைக்கப்பட்டு காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியில் இணைய முடிவெடுக்கப்பட்டது. 1936 நவம்பரில் சேலத்தில் காங்கிரஸ் சோஷலிஸ்ட் மாநாட்டில் ஜீவா பொதுச் செயலாளராக தேர்ந்தெடுக்கப்பட்டார். பி.சீனிவாசராவ், பி.ராமமூர்த்தி, நீலாம்பிகை என பலரும் அதில் முக்கிய பங்காற்றினர். இம்மாநாட்டில் ஜீவா முன் வைத்த அறிக்கையில், “தமிழ்நாட்டின் சோஷலிஸ்ட் இயக்க வளர்ச்சி; சோஷலிசத்திற்காகவும் -சுதந்திரத்திற்காகவும் - அடிமைப்பட்டு கிடக்கும் மக்களை அடக்குமுறையிலிருந்தும், கஷ்ட நிஷ்டூரங்களில் இருந்து விடுதலை செய்வதற்காகவும் – நடைபெறும் பொதுவான

இயக்கத்தின் ஒரு பகுதியே. தேசிய இயக்கத்தின் விசேஷித்த உருவமாக அது இங்கு இயங்கிக் கொண்டிருக்கிறது” என்றார்.

இந்த காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியின் கேரளக் கிளையில் இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட், கேளப்பன் உள்ளிட்டோர் இருந்தனர். அவர்கள் முழுவதும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியில் இணைந்தனர். காங்கிரஸ் கட்சிக்குள் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி இயங்கியது; காங்கிரஸ் கட்சிக்குள் கம்யூனிஸ்ட்டுகள் இயங்கினர். இது குறித்து இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட் எழுதுகிறார், “காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியின் முதல் [1934 பம்பாய்] மாநாட்டின் அடிப்படை ஆவணங்கள் காங்கிரஸ் கட்சியின் ஒவ்வொரு உறுப்பினரும் காங்கிரஸ் கட்சியில் உறுப்பினராக இருப்பதை கட்டாயமாக்கியது. கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் பலர் காங்கிரஸில் வேலை செய்தாலும் உறுப்பினராவது கட்டாயமில்லை. எனினும் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி அமைக்கப்பட்டபோது கம்யூனிஸ்ட்டுகளும் காங்கிரஸில் இணைந்து பணியாற்ற தீர்மானிக்கப்பட்டது. இவ்வாறாக கம்யூனிஸ்ட்டுகளுக்கும் காங்கிரஸ் சோஷலிஸ்ட்டுகளுக்கும் முன்பு இருந்த வேறுபாடு மறைந்து போனது. கம்யூனிஸ்டுகளும், காங்கிரஸ் சோஷலிஸ்ட்களும் தங்கள் தங்கள் கட்சிப் பணிகளை சுதந்திரமாகச் செய்து கொண்டே காங்கிரஸிலும் பணி புரிந்தனர்.”

எதற்கு முக்கியத்துவம் கொடுப்பது என்பதில் இரு சாராருக்கும் கருத்து வேறுபாடு நீடித்தது. கம்யூனிஸ்டுகள் தங்கள் கட்சியை வலுப்படுத்தவே முன்னுரிமை தந்தனர். சோஷலிஸ்ட்டுகள் காங்கிரசுக்குள் ஏகாதிபத்திய

எதிர்ப்பைத் தீவிரப்படுத்துவதில் முன்னுரிமை தந்தனர். 1936 ல் மீரட்டில் கூடிய இரண்டாவது காங்கிரஸ் சோஷலிஸ்ட் மாநாடு வேறுபாடுகளைக் களைந்து ஒற்றுமையை உருவாக்கியது. மீரட் கோட்பாடு என இது அழைக்கப்பட்டது. கம்யூனிஸ்ட் செயலாளர் பி.சி.ஜோஷிக்கும் சோஷலிஸ்ட் செயலாளர் ஜெயப்பிரகாஷ் நாராயணனுக்கும் உடன்பாடு ஏற்பட்டது. இந்த ஒற்றுமை அனைத்திந்திய மாணவர் பெருமன்றம், அனைத்து இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கம், அகில இந்திய விவசாய சங்கம் உள்ளிட்ட பல அமைப்புகளிலும் சோஷலிஸ்ட்டுகளும் கம்யூனிஸ்ட்டுகளும் இணைந்து செயல்பட வழிவகுத்தது.

காங்கிரசுக்குள் காங்கிரஸ் சோஷலிஸ்ட்டுகளும், கம்யூனிஸ்ட்டுகளும், நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் பிரிவினரும், இடதுசாரிகளும் இணைந்து செயல்பட ஆரம்பித்தனர். ஆனால் மசானி, மேத்தா தலைமையிலான குழு இதனை விரும்பவில்லை. ஆரம்பம் முதலே தொல்லை கொடுத்தனர். ‘அந்நிய கம்யூனிஸ்டுகள்’ என அவதூறு செய்தனர். கம்யூனிஸ்ட் அகிலத்தோடு தொடர்பு கூடாது என்றனர். இறுதியில் 1940 ல் இணைச் செயலாளராக இருந்த இ.எம்.எஸ் உட்பட கம்யூனிஸ்ட்டுகள் வெளியேற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. விடுதலைக்குப் பின் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியானது காங்கிரஸ் என்ற முன்னொட்டை நீக்கிவிட்டு சோஷலிஸ்ட் கட்சி ஆனது. 1952 பொதுத் தேர்தலில் போட்டியிட்டது. படு தோல்வி அடைந்தது அதேசமயம் கம்யூனிஸ்ட்டுகள் ஓரளவு வெற்றி பெற்றனர். நெடிய வரலாற்றை அறிவதும் படிப்பினை பெறுவதும் அவசியம்.

# தாகூரின் சீற்றமும் மனித உரிமை விழிப்பும்

-சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 25, 2019








…

“மக்களின் கருத்துகளை லேசாக ஒதுக்கிவிட்டு அடக்குமுறையை ஆட்சியாளர் ஏவிவிடுவது கண்டு நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன். பிரிட்டிஷ் ஆட்சி வேகமாக மதிப்பிழந்து வருகிறது. ஆகவேதான் கொடூர அடக்குமுறை மூலம் தன்னைக் காத்துக் கொள்ள முனைகிறது. நான் எனது

நாட்டு மக்கள் சார்பாக எச்சரிக்கிறேன். பிரிட்டிஷ் ஆட்சி எவ்வளவு அதிகார பலம் பெற்றிருந்தாலும் – சுய மதிப்பை அடக்குமுறை மூலம் குலைத்துக் கொண்டீர்கள்.அதுவே உங்களுக்கு மிகப்பெரிய பலவீனம் ஆகும்.நடந்தவைகளை மறைக்காதீர்கள். உண்மைகளை ஒத்துக் கொள்ளுங்கள். உலகில் மக்கள் மனதில் படிந்துவிட்ட காயங்களைத் தழும்புகளை ஆற்ற உலகில் எந்த சக்தியாலும், அடக்குமுறையாலும் முடியாது. இதை உணராமல் இருட்டிலே இருக்காதீர்கள்." இப்படிக் குமுறிக் குமுறி அறிக்கைவிட்டவர் இளைஞர் அல்ல. எழுபது அகவையைத் தொட்டுவிட்ட கவியரசர் இரவீந்திரநாத் தாகூர். சிறை எப்போதும் ஆட்சியாளர் சித்திரவதை முகாம்தான். அதுவும் அந்நிய ஆட்சி எனில் கேட்கவா வேண்டும்? பிரிட்டிஷ் ஆட்சியில் சிறைக் கொடுமை அதிகம். அந்தமான் சிறை கொடூரத்தின் உச்சம். ஒவ்வொரு சிறையும் அப்படித்தான். மேற்குவங்கம் ஹிஜிலி சிறை விதி விலக்காகவா இருக்கும்? அங்கே சிறை அதிகாரிகளுக்கும் சிறைத் தண்டனைக் கைதிகளுக்கும் அடிக்கடி மோதல் நடக்கும். குறைந்தபட்ச தேவையைகூட பூர்த்தி செய்யாத சிறை நிர்வாகம்; மனித உயிராகக் கூட கைதிகளை மதிக்காமல் புழுக்களாய் மிதித்தது. சிறைவாசிகள் உள்ளுக்குள் கொதித்துக் கொண்டிருந்தனர். அங்கு கம்யூனிஸ்டுகளும் வந்து சேர்ந்தனர். கொதிநிலை அதிகரித்தது.போராட்டம் வெடித்தது. 1931 ஆம் ஆண்டு செப்டம்பர் 16ஆம் நாள் இரவு 9 மணிக்கு ஆயுதம் தாங்கிய ராணுவ சிப்பாய் ஐம்பது பேர் சிறைக்குள் நுழைந்தனர். நரவேட்டை ஆரம்பமானது. நிராயுதபாணியாய் இருந்த சிறைவாசிகள் அடித்து துவைக்கப்பட்டனர். மார்க்சியத்தை நோக்கி பயணப்பட்ட கொல்கத்தாவைச் சார்ந்த

சந்தோஷ்குமார், பாரிசாலைச் சார்ந்த தாரகேஷ்வர் சென் இருவரும் ராணுவத்தினரின் துப்பாக்கிச் சனியனுக்கு பலியாயினர். பலநூறு பேர் காய மடைந்தனர். இதனைக் கேள்விப்பட்டதும் குமுறி எழுந்த இரவிந்திரநாத் தாகூர் கூறியவையே முதலில் குறிப்பிட்ட வரிகள். பிரிட்டிஷ் அரசால் பூசி மெழுக முடியவில்லை, ஓர் கண் துடைப்பு விசாரணைக் கமிஷனை நியமித்தது. அக்கமிஷனும் மூடி மறைக்க எவ்வளவோ முயன்றும் முடியாமல் துப்பாக்கிச் சூடும் தாக்குதலும் தவறென ஒப்புக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. மனித உரிமை குறித்து உலகெங்கும் ஏற்பட்டு வரும் விழிப்புணர்வின் ஒரு கூறாக இங்கும் அது பற்றிய பிரக்ஞை அதிகரித்ததாக நேரு குறிப்பிடுகிறார். இந்தியா முழுவதும் பேச்சுரிமை, எழுத்துரிமை, கூட்டம் கூடும் உரிமை, எதிர்த்து போராடும் உரிமை, சிறையில் மனிதராக நடத்தப்படும் உரிமை, அடக்குமுறைக்கு எதிரான விழிப்புணர்வு இவற்றுக்காக நேரு போன்றோர் எழுதியும் பேசியும் எடுத்த முயற்சியின் விளைவாக 1936 ஜூலையில் பம்பாயில் சிவில் லிபர்ட்டி கழகம் – குடிமை உரிமைக் கழகம் தோற்றம் பெற்றது. கவியரசர் இரவீந்திரநாத் அதன் கவுரவத் தலைவராகவும், கவிக்குயில் சரோஜினி நாயுடு அதன் செயல் தலைவராகவும் பொருத்தமாகத் தேர்வாயினர். கல்கத்தா, சென்னை எங்கும் அதன் கிளை பரவலாயிற்று. ஹீமன் ரைட்ஸ், ‘மனித உரிமை’ என பெயர் மாற்றம் பெற்றது விடுதலைக்குப் பிறகே. சாதிய ஒடுக்குமுறையும் சமூக ஒடுக்குமுறையும் உச்சத்திலிருந்த இந்தியாவில் அதற்கு எதிரான போராட்டமும் மனித உரிமையின் முக்கியக்கூறே! சங்கம் சேரும் உரிமை, அடிப்படை ஜனநாயக உரிமைகளுக்காக கம்யூனிஸ்டுகள் நாடு முழுவதும் தன்னலமின்றி

போராடி வந்தனர். விடுதலைப் போராட்ட காலத்தில் சிறைச் சித்திரவதைகளை கடுமையாக எதிர்கொண்டவர் கம்யூனிஸ்ட்டுகள் என்பது மட்டுமல்ல.விடுதலைக்குப் பிறகும் அதே நிலைதான். மனித உரிமை முழக்கமிட்ட நேரு பிரதமராய் பொறுப்பேற்ற பின்னும் இந்தியா முழுவதும் கம்யூனிஸ்டுகள் அடக்குமுறையை எதிர்கொண்டே இயங்க வேண்டியிருந்தது. 1950ல் சேலம் சிறையில் 22 கம்யூனிஸ்ட்டுகள் துப்பாக்கிச் சூட்டில் உயிரிழந்து தியாகிகளானதும், கடலூர் சிறைத் தியாகிகள் நால்வரும் மனித உரிமைப் போர் தொடர்வதின் சாட்சிகளாயினர். இப்போதும் தொடர்கிறது அடக்குமுறையும் எதிர்ப்புப் போராட்டமும்.

# பட்டினிப் பட்டாள அணிவகுப்பு

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 26, 2019




…

முதல் உலக யுத்தமும் பொருளாதார மந்தமும் வேலையின்மையை மேலும் கடுமையாக்கியது. ஏகாதிபத்தியம் தனது சுமைகளை காலனிய மக்கள் மீதே சுமத்தியது. இதன் விளைவு கைத்தறி உள்ளிட்ட உள்நாட்டுத் தொழில்கள் நசிந்தன. வியாபாரம் நொடித்தது.மக்களை பட்டினிச் சாவை நோக்கி விரட்டியது. உள்ளூர் தொழில்கள், கைத்தறி, கைத்தொழில்

போன்றவை பெரும் வீழ்ச்சியைச் சந்தித்தன. நாடெங்கும் பட்டினி அதிகரித்தது. பஞ்சத்தில் நோயில் பாரதர் புழுக்களாய் சாதல் கண்டும் தடுக்க முயற்சி செய்யாமல் வாயைத் திறந்து சும்மா வந்தே மாதரம் என்று முழங்கும் நடிப்பு சுதேசிகள் குறித்து பாரதி சாடினான். ஆம் காங்கிரஸ் கட்சி சட்டமறுப்பு இயக்கமெல்லாம் அறிவித்தாலும் ; நாட்டை வறுக்கும் வறுமைப் பிணியை பெரிதாக பேசவில்லை. 1935 -36 காலகட்டத்தில் நாடெங்கும் வேலை நிறுத்தங்கள் வெடித்தன. கேரளம், வங்கம், பீகார் போன்ற மாநிலங்களில் விவசாயிகளும் போராட்டக் களத்தில் குதித்தனர்.

இப்போராட்டங்களில் கம்யூனிஸ்டுகள் முன்நின்றனர். காங்கிரஸ் சோஷலிஸ்டுகளும் தோள் இணைந்தனர். காங்கிரஸ் தலைமை எரிச்சலடைந்தது.கம்யூனிஸ்டுகளின் சீர்குலைவு வேலை என ஒப்பாரி வைத்தது. ஆனால் “பட்டினி ஒழிக!” என கம்யூனிஸ்டுகள் எழுப்பிய முழக்கம் பெரும் ஈர்ப்பானது. “வேலையில்லாதவர் சங்கம்” கேரளாவில் ஆங்காங்கு தொடங்கப்பெற்றது. நாடெங்கும் இச்செய்தி தீயெனப் பரவியது. எதிரொலி கேட்கலாயின. கேரளாவில் பல இடங்களில் “பட்டினி யாத்திரை”யை நடத்தினர். கம்யூனிஸ்டுகள் முன்கை எடுத்தனர். கே.பி.ஆர்.கோபாலன் தலைமையில் ஒரு பட்டினி யாத்திரை புறப்பட்டு கூத்துப்பரம்பா வந்தடைந்தது. அங்கே மேலும் ஆயிரம் பேர் சேர யாத்திரை தலைச்சேரி நோக்கி படை எடுத்தது. தலைச்சேரியில் மனுவைப் பெற்றுக்கொண்ட சப் கலெக்டர் தம்மால் ஒன்றும் செய்ய இயலாது. சென்னை மாகாண அரசுதான் முடிவெடுக்க வேண்டும் என கையை இந்தப் பக்கம் காட்டிவிட்டார்.

அங்கேயே அப்போதே சென்னைக்கு பட்டினி யாத்திரை செல்வோம் என்பது பெருமுழக்கமானது. பெரும் திரளாகச் செல்வது சிரமம். பெரும் செலவும்கூட. எனவே 32 பேர் மட்டுமே செல்வது என்றும் ஆங்காங்கு பெரும் திரளாய் பங்கேற்பது என்றும் முடிவானது. ஏ.கே.கோபாலன், சந்திரோத்து குஞ்ஞி நாயர், கே.பி.ஆர் கோபாலன் ஆகியோர் தலைமையேற்க பட்டினி யாத்திரை தொடங்கியது. “பட்டினி பட்டினி எங்கும் பட்டினி பட்டிகளெங்கும் தொட்டிகளெங்கும் பட்டினி பட்டினி…” என்ற பாடல் எங்கும் முணுமுணுக்கலாயின. ஆம் பேரணியின் பாடல் மக்கள் பாடலானது.

“வருகுது பாரே புது வரி புது வரி பெருகுது பாரே வரிப் பளு வரிப்பளு” என்ற பாடலும் ஓங்கி ஒலித்தது. வேலையின்மை, பட்டினிச் சாவுகள் குறித்த தலைவர்கள் பேச்சு… யாத்திரை அந்த ஊரைக் கடந்த பின்னும் எங்கும் பேசுபொருளானது. ஆட்சியாளருக்கு பொறுக்குமோ இல்லையோ காங்கிரஸாருக்கு கடும் எரிச்சல் ஏற்பட்டது. செங்கொடி தாங்கி கம்யூனிஸ்ட் பிரச்சாரம் செய்து வருகின்றனர் என காங்கிரஸ் தலைவர் சத்திய மூர்த்தி வசை பாடினார். எங்கும் இந்த யாத்திரைக்கு ஒத்துழைப்பதில்லை என காங்கிரஸ் கட்சி தீர்மானித்தது. ஆனால் தடையை மீறி யாத்திரை பெரும் வரவேற்பைப் பெற்றது. சேலம் நகரசபை உறுப்பினர் மாதவியம்மாள் நடத்திய யாத்திரையில் ஆறாயிரம் பேர் பங்கேற்றது ஆட்சியாளருக்கு மிரட்சியை உருவாக்கியது.

சில இடங்களில் ஒத்துழைப்பு இன்மையால் பட்டினி யாத்திரை பட்டினி கிடக்க நேர்ந்ததும் உண்டு. வாணியம்பாடியில் அந்த அனுபவம்

கிடைத்தது. ஒரு மாதம் நடந்தது இந்த யாத்திரை. தினசரி 20 மைல், மொத்தம் 250 மைல்.சிறிதும் பெரிதுமாக 500 கூட்டங்கள். தமிழிலும் மலையாளத்திலும் துண்டறிக்கை. வேலைகோரி ஒரு எளிய பிரசுரம். எளிமையும் வீரியமும் மிக்கதாய் இந்த யாத்திரை மக்களை பெரிதும் சுண்டி இழுத்தது.காலணா, அரையணா என ஐநூறு ரூபாய் அன்று வசூலிக்கப்பட்டது எனில் அது சாதாரணமல்ல.

சென்னையில் பெரும் வரவேற்பும் பொதுக்கூட்டமும் நடத்தப்பட்டது. தலைவர்கள் ஏ.கே.கோபாலன் உள்ளிட்டோர் கைது செய்யப்பட்டனர் இந்திய வரலாற்றிலேயே வேலையின்மைக்கு எதிராக நடந்த முதல் யாத்திரை இதுவே. கிட்டதட்ட அதே போன்றொரு பொருளாதார மந்தமும் நெருக்கடியும் நம்மைச் சூழ்கையில் அந்த யாத்திரை நம் நெஞ்சில் நெருப்பு மூட்டட்டும்!

சமஸ்தானங்களில் கம்யூனிஸ்ட் போர் முழக்கம்

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 27, 2019




…

100 ஆண்டு கம்யூனிஸ்ட் இயக்கத்தில் சில சாட்சிகள் - 12

‘அகண்ட இந்தியா’ என்று சங்பரிவார் வரைந்து காட்டுகிற இந்திய தேசப்படம் எப்போதும் அப்படி இருந்ததில்லை. குப்த சாம்ராஜ்யம், மௌரிய சாம்ராஜ்யம், மொகலாய சாம்ராஜ்யம் என எந்த சாம்ராஜ்யமும் அவ்வாறு இருந்ததில்லை. பிரிட்டிஷ் ஆண்ட போதும் அவ்வாறு இருந்ததில்லை. பள்ளி பாட புத்தகத்தில் பார்த்திருப்பீர்கள். ஒரு புறம் பிரிட்டிஷ் இந்தியா; அதன்நேரடி ஆட்சிக்குள் அடங்காத 563 சமஸ்தானங்கள் தனி. இதுவே அன்றைய தேசப்படம். தேசபக்தியை வெளிப்படுத்திய மன்னர்கள் அடக்கி ஒடுக்கப்பட்டுவிட்டனர். பிரிட்டிஷாரை தொழுதடிமையானோர் சமஸ்தானங்களாக தனித்து இயங்கினர். 119 பெரிய சமஸ்தானங்களும் 444 சிறிய சமஸ்தானங்களுமாக மொத்தம் 563 சமஸ்தானங்கள் இருந்தன. இந்திய நிலப்பரப்பில்

கிட்டத்தட்ட மூன்றில் ஒரு பகுதி சமஸ்தான ஆளுகையில் இருந்தது. மக்கள் தொகையில் கிட்டத்தட்ட ஐந்தில் ஒரு பங்கு அதாவது எட்டு கோடிப்பேர் இவ்வாறு சமஸ்தான ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தனர். அவற்றில் காஷ்மீர், ஐதராபாத், மைசூர், திருவிதாங்கூர், பிகானிர், பாட்டியாலா, குவாலியர், பரோடா, ஜுனாகத், ஜோத்பூர், ஜெய்சல்மர் ஆகியவை முக்கியமானவை. தமிழ்நாட்டு புதுக்கோட்டை சமஸ்தானம் போன்றவை சிறிய சமஸ்தானங்கள்.

பெரிய சமஸ்தானங்கள் ஒருபுறம் பிரிட்டிஷாரைக் குஷிப்படுத்த அவர்கள் கேட்டதை தயங்காமல் செய்தனர். மறுபுறம் மக்களை வாட்டி வதைத்தனர். தன் வளர்ப்பு நாய்க்கு ஆடம்பரமாக திருமணம் செய்த சமஸ்தானம் உண்டு. தம் பிறந்த நாளில் தம்மை நிர்வாணமாக வழிபடச் சொன்ன ராஜா உண்டு. ஆடம்பர வாழ்வில் திளைத்தனர். மது, மாது என மயங்கிக் கிடந்தனர். வெளி நாட்டு மது பாட்டிலுக்கும் படுக்கை அறைக்கு வந்த மாதுவுக்கும் நிலத்தை இனமாகக் கொடுத்தனர். இந்து மன்னரோ, முஸ்லீம் மன்னரோ கிட்டத்தட்ட எல்லோரும் ஒரே ரகத்தில் இருந்தனர்.

பொதுவாய் இங்கிலாந்தில் மன்னர் அந்நாட்டு வருவாயில் 1600ல் ஒரு பங்கையே செலவிட முடியும். பெல்ஜியத்தில் 1000ல் ஒன்று; இத்தாலியில் 500ல் ஒன்று; டென்மார்க் 800ல் ஒன்று; ஜப்பான் சக்கரவர்த்தி 400ல் ஒன்று; நெதர்லாந்து ராணி 600ல் ஒன்று; நார்வே 700ல் ஒன்று என ஓர் அளவுக்குள் செலவிட்டனர். நம்ம ஊர் ராஜாக்கள் வரைமுறை கேள்விமுறை இன்றி செலவிட்டனர். திருவிதாங்கூர் ராஜா 17ல் ஒரு பங்கை தன் சொந்த சுகபோகத்துக்கு எடுத்துக்கொண்டார். ஹைதராபாத், பரோடா ராஜாக்கள்

13ல் ஒரு பங்கு; காஷ்மீர், பிகானிர் ராஜாக்கள் 5ல் ஒரு பங்கு; சரிபாதி எடுத்த மன்னரும் உண்டு; மூன்றில் ஒரு பாகம் எடுத்த ராஜாவும் உண்டு.

பிரிட்டிஷாரை அடிபணிந்து சமஸ்தான ராஜாக்கள் எனில்; இந்த ராஜக்களைச் சார்ந்து ஒட்டுண்ணிகளாக அதிகார வர்க்கமும் புரோகித வர்க்கமும் ஆட்டம் போட்டன. ஆக பிரிட்டிஷார், சமஸ்தானம் என இரட்டை ஒடுக்குமுறையை மக்கள் அனுபவித்தனர். மக்கள் கொடுமை தாழாமல் வெகுண்டனர். காங்கிரஸ் கட்சியோ சமஸ்தானங்களில் தலையிடாமை எனும் கோட்பாட்டைப் பிடித்துத் தொங்கியது. திருவிதாங்கூர் சமஸ்தானம் உள்ளிட்ட பலவற்றில் 1938-39களில் மக்கள் அடக்குமுறைக்கு அடிபணிய மறுத்தனர். விடுதலைப் போர்ப்பறை உரக்க முழக்கினர். காங்கிரஸ் களத்தில் ஒதுங்கி நின்றது. கம்யூனிஸ்டுகள் முன்கை எடுத்தனர். திருவிதாங்கூரில் இளைஞர் சங்கம் எழுந்தது. போராட்டம் வீச்சானது. திவான் சர் சி. பி. ராமசாமி ஐயர் அடக்குமுறையை ஏவினார். இளைஞர் சங்கம் தடை செய்யப்பட்டது.

மலபாரில் இருந்து ஏ.கே.கோபாலன் தலைமையில் திருவனந்தபுரம் நோக்கி எழுச்சி ஊர்வலம் புறப்பட்டது. கே.சி.ஜார்ஜ், முகமது யூசுப், கணபதி காமத் உள்ளிட்ட பலர் பங்கேற்றனர். திவான் சிபி ராமசாமி ஐயர் அடக்குமுறையைக் கட்டவிழ்த்துவிட்டார். இன்றைய கன்னியாகுமரி மாவட்டம் அன்று திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் ஓர் பகுதி. சுயாட்சிப் போரில் அவர்களும் பங்கேற்றனர். இக்காலகட்டத்தில் போராட்டக்காரர்கள் மீது 12 முறை துப்பாக்கிச் சூடு நடத்தப்பட்டது. பலர் உயிர்ப் பலியாகினர்.

கம்யூனிஸ்டுகளின் எழுச்சி காங்கிரஸை அசைத்தது. அவர்கள் சற்று இறங்கி வந்தனர். சமஸ்தானங்கள் உள்ளிட்டு இந்தியா முழுமைக்கும் சுயாட்சி கோருவதாய் தீர்மானம் நிறைவேற்றியது. ஆயினும் சமஸ்தானங்களில் நடக்கும் போராட்டங்களில் காங்கிரஸ் கட்சி பங்கேற்காது. அதே சமயம் விரும்பும் காங்கிரஸ்காரர்கள் தம் சொந்தப் பொறுப்பில் பங்கேற்கலாம் என்றது. இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட் சுட்டுவதைப் போல காங்கிரஸ் ஊழியர் பலர் ஆர்வமுடன் கம்யூனிஸ்டுகளோடு களமிறங்கினர். ஹைதராபாத்தில் நிஜாமுக்கு எதிரான போராட்டம் கம்யூனிஸ்ட் தலைமையில் புதிய பரிணாமத்தை நோக்கிச் சென்றது.

# கந்து வட்டிக்கு எதிராய் கனன்றெழுந்த இந்து முஸ்லிம் விவசாயிகள்

- சு.பொ.அகத்தியலிங்கம்

-நவம்பர் 28, 2019




…

தன் தந்தையை எதிர்த்து அவர் பண்ணையில் வேலை செய்த விவசாயக்கூலிகளைத் திரட்டிப் போராடினார், வென்றார்.

சுவாமி சகஜானந்தா காவி உடையோடும் சிவப்புக் கொடியோடும் கடைசிவரை கம்யூனிஸ்ட் போராளியாய் இருந்தது பெரும் வரலாறு.

'கந்துவட்டிக் கொடுமையை எதிர்த்து நின்றதால் படுகொலை செய்யப்பட்ட பள்ளிப்பாளையம் வேலுச்சாமி அண்மை வரலாறு. ஆனால் கந்துவட்டிக் கொடுமையை எதிர்ப்பதில் துவக்கம் முதலே அர்ப்பணிப்போடு ஈடுபட்டு வருவோர் கம்யூனிஸ்டுகளே! தொழிலாளர் விவசாயிகள் கட்சியின் தலைவர் பலர் கம்யூனிசத்தால் கவரப்பட்டனர். மேற்கு வங்கத்தில் தரணி கோஸ்வாமி போன்றோர் அதிக ஆர்வம் காட்டினர். தங்கள் தீவிரவாதத் தொடர்பையும் விடவில்லை. "இளம் தோழர்கள் கழகம்" என்ற பெயரில் வீரியமாய் செயல்பட்டனர். தரணி கோஸ்வாமி இன்னும் பலரோடு மீரட் சதி வழக்கில் 1929 மார்ச் 20 அன்று கைது செய்யப்பட்டார். ஆயினும் இளம் தோழர்கள் கழகத்தை உடைக்க பிரிட்டிஷ் ஆட்சியால் முடியவில்லை.

நாகன் சர்க்கார், வாலி நவாஜ், சுபான்சு அதிகாரி, மொஹிந்தர சக்கரபர்த்தி போன்றோர் இக்கழகம் மூலம் விவசாயிகளிடையே தீவிரமாய் செயல்பட்டனர். விவசாயிகள் கலகம் வெடித்தது. ராஜ்சாஹி, மியான்சிங் ஆகிய இடங்கள் போராட்டக் களமாயின. கிஷோர்கஞ்ச் கொதிநிலையை எட்டியது. குறிப்பாக அப்பகுதியில் கந்துவட்டிக்கு விடும் முஸ்லிம் - இந்து ஈட்டிக்காரர்களுக்கு எதிராய் இந்து – முஸ்லிம் விவசாயிகள் ஓரணி திரண்டனர். போராட்டம் தீவிரமானது. வட்டார பதிவு அலுவலகத்தை முற்றுகையிட்டு கடன் பத்திரங்களை அள்ளிப் போட்டு தீ வைத்துக் கொளுத்தினர்.

கிருஷ்ணராய் எனும் மோசமான ஈட்டிக்காரன் வீட்டையும் தாக்கித் தீ வைத்தனர். கிருஷ்ணராய் தன் அடியாட்களை ஏவி விவசாயிகள் மீது துப்பாக்கிச் சூடு நடத்தி எட்டு பேரைக் கொன்று குவித்தான். ஆயினும் வீட்டினுள் புகுந்த விவசாயிகள் கடன் பத்திரங்களை மொத்தமாக அள்ளி வந்து தீவைத்தனர். இந்தப் போராட்டத்தை இந்து - முஸ்லிம் கலவரம் என பிரிட்டிஷ் அரசு சொல்லியது. காங்கிரஸ் கட்சியும் அதையே வாந்தி எடுத்தது. கம்யூனிஸ்ட் கட்சியும் முஸ்லிம் தேசபக்தர்களால் வழி நடத்தப்பட்ட 'நிகில் பங்கா பிரஜா சமிதி'யும் மட்டுமே போராட்டத்தை ஆதரித்தது வியப்பல்ல.

இந்து - முஸ்லிம் இணைந்து போராடிய இந்த எழுச்சியில் சில மதவெறியர் உள்ளே புகுத்தப்பட்டனர். மத கலவரத்தை விசிறினர். நிகில் பங்கா பிரஜா சமிதியின் பல கிளைகள் சட்டவிரோதமென அரசால் அறிவிக்கப்பட்டது. போராட்டத்தை ஆட்சியாளர் சாமர்த்தியமாக மதக் கலவரமாக மாற்றிடினும், அடிப்படையில் கந்து வட்டிக்கு எதிராக இந்து - முஸ்லிம் விவசாயிகளின் எழிச்சியே இது. இந்திய விடுதலைப் போர் நெடுக விவசாயிகள் எழுச்சி நடந்த வண்ணம் இருந்தன. அவுரி எனப்படும் சாயச் செடி பயிரிட மறுத்து வங்கத்தில் விவசாயிகள் கிளர்ந்தெழுந்தது தொடங்கி விடுதலைப் போரின் கடைசி கட்டத்தில் புன்னப்புரா, வார்லி, தேபாஹா, தெலுங்கானா போராட்டம் வரை நடந்த விவசாயப் போராட்டங்களை தனியே வரலாறாய் எழுத வேண்டும். அவ்வளவு முக்கியமானது.

இந்த விவசாயப் போராட்டம் ஆதியில் தன்னெழுச்சியாய் எழுந்தவையே அதிகம். உள்ளூர் தலைவர்களே தலைமை ஏற்றனர். காங்கிரஸ்

தலைவர்களும் கூட ஆரம்பத்தில் தலைமை ஏற்றதுண்டு. 1925க்கு பிறகு வங்கம், பஞ்சாப், மகாராஷ்டிரா, உத்தரப்பிரதேசம், கேரளம் போன்ற மாநிலங்களில் கம்யூனிஸ்டுகள் விவசாயிகள் போராட்டத்தை முன்னெடுத்தனர். விவசாயிகள் சங்கம் உருவானதே சுவாரசியமானது. சுவாமி சகஜானந்தா பீகாரில் நிலப்பிரபு குடும்பத்தில் பிறந்தவர். இளமையில் சுக போகத்தில் மூழ்கியவர். பின்னர் வாழ்வில் கசப்பும் விரக்தியும் ஏற்பட்டு அமைதி தேடி சந்நியாசி ஆனார். பாத யாத்திரையாய் ஊர் ஊராய்ச் சென்ற சந்நியாசி விவசாயிகள் படும் பாட்டை கண்ணாரக் கண்டார். நொந்தார். வெந்தார். யோசித்தார். 1934 ஆம் ஆண்டு சில கோரிக்கைகளோடு பீகார் மாநில கிசான் சபா தோன்றியது. தன் தந்தையை எதிர்த்து அவர் பண்ணையில் வேலை செய்த விவசாயக்கூலிகளைத் திரட்டிப் போராடினார். வென்றார்.

இதற்கிடையில் காங்கிரஸ் சோஷலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளும் சேர்ந்து விவசாயிகள் சங்கம் அமைக்க முனைந்தனர். 1936ல் லக்னோவில் காங்கிரஸ் மாநாடு நடைபெற்ற போது விவசாயிகளை திரட்டுவதில் ஆர்வம் உள்ளோர்களைத் தனியாகக் கூட்டினர். சுவாமி சகஜானந்தா தலைமையில் கூடிய இம்மாநாடு அகில இந்திய விவசாயிகள் சங்கத்தை பெற்றெடுத்தது. பேராசிரியர் என்.ஜி.ரங்கா [ஆந்திரா], இந்துலால் யக்னிக் [குஜராத்], மோகன்லால் கவுதம், கே.எம்.அஸ்ரப் [உ.பி], சோகன் சிங் ஜோஷ், அகமதுதின் [பஞ்சாப்], கமல் சர்க்கார், சிதின் பிராமணிக் [வங்கம்], ஜெயப்பிரகாஷ் நாராயணன், ராம் மனோகர் லோகியா ஆகியோர் பொறுப்பேற்றனர். இந்த ரங்கா பின்னர் ராஜாஜியோடு சுதந்திராக் கட்சியில்

ஐக்கியமானது தனிக்கதை. சுவாமி சகஜானந்தா காவி உடையோடும் சிவப்புக் கொடியோடும் கடைசிவரை கம்யூனிஸ்ட் போராளியாய் இருந்தது பெரும் வரலாறு. இந்திய கம்யூனிச இயக்க வரலாற்றில் விவசாயிகளுக்கும் விவசாயிகள் சங்கத்துக்கும் தனி இடம் என்றென்றும் உண்டு. சாதியும் மதமும் பிற்போக்குத்தனங்களும் ஆழமாக வேர்விட்டிருக்கும் கிராமப்புறத்தின் முகத் தோற்றத்தை மாற்றிவிட்டால் இந்தியாவின் முகத் தோற்றமும் மாறிவிடும். இதற்கு இடையறாது பாடுபடுவோர் கம்யூனிஸ்ட்டுகளே!

# மக்களை திரட்டுவதே முதல் நோக்கம்

- ப.முருகன்

-நவம்பர் 29, 2019




…

பயங்கரவாதத்திலிருந்து பாட்டாளி வர்க்க இயக்கம் நோக்கி…

நாட்டு விடுதலைக்காக போராடிய தலைவர்கள் பலரும் முதலில் காங்கிரஸ்காரராகவும் பிறகு சோசலிஸ்ட்டுகளாகவும் பின்னர்

கம்யூனிஸ்ட்டுகளாகவும் ஆனார்கள். அவர்களில் பயங்கரவாத புரட்சியாளர்களாக இருந்தவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களில் ஒருவர் நீலகண்ட பிரம்மச்சாரி. இவர் நெல்லை மாவட்டம் எருகூரைச் சேர்ந்தவர். பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்த போராட்டம் ஆயுதந்தாங்கிய போராட்டமாக இருக்க வேண்டும் என்ற கருத்துடையவர். அதற்காக 1910 ஏப்ரல் 10 அன்று பாரதமாதா சங்கம் என்ற அமைப்பு இவரால் உருவாக்கப்பட்டது.

20வயதே நிரம்பிய நீலகண்ட பிரம்மச்சாரி முதலில் சென்னை நகர கூட்டுறவு கழகத்தில் எழுத்தாளராக பணியாற்றினார். நாட்டு விடுதலையில் நாட்டம் கொண்டதால் அந்தப் பணியைவிட்டு விலகினார். மகாகவி பாரதியார் நடத்தி வந்த ‘இந்தியா’ பத்திரிகையில் சேர்ந்து பணியாற்றினார். அந்தப் பத்திரிகையை ஆங்கிலேய அரசாங்கம் தடைசெய்தது. அதனால் பிரெஞ்சு ஆதிக்கத்தில் இருந்த புதுவையில் இந்தியா பத்திரிகை செயல்படத் துவங்கியது. அங்கு பாரதியார் சென்றதையடுத்து நீலகண்ட பிரம்மச்சாரியும் சென்றார். பின்னர் அங்கிருந்து வெளியான ‘சூர்யோதயம்’ என்ற பத்திரிகையில் ஆசிரியராக செயல்பட்டார். அதில் பிரிட்டிஷ் ஆட்சியின் கொடுமைகளை எதிர்த்து எழுதி வந்தார். அத்துடன் சுற்றியுள்ள பல ஊர்களுக்கும் சென்று சுதந்திர உணர்வை ஊட்டும் பிரச்சாரத்தில் ஈடுபட்டார்.

இவர் தன்னுடைய பெயரை பாரத்வாஜன், கோவிந்த நாராயண தூபே, சுவாமி பிரம்மச்சாரி என்றும் மாற்றிக் கொண்டு செயல்பட்டு வந்தார். அந்தப் பெயருடன் சொந்த ஊரான நெல்லை மாவட்டத்திற்கு சென்று

தேசபக்த பிரச்சாரங்களில் ஈடுபட்டார். அப்போது கிராமபோன் பெட்டி மூலம் அந்தப் பகுதியில் பாடல்களை ஒலிபரப்பி வந்த ராமசாமி அய்யரிடமிருந்து நீலகண்ட பிரம்மச்சாரி அந்தப் பெட்டியை விலைக்கு வாங்கினார். அதை தன்னுடைய பிரச்சாரத்தின்போது பயன்படுத்தலானார். இதனால் அவரது பிரச்சாரத்திற்கு மக்கள் அதிகம் கூடலாயினர். அந்தப் பிரச்சாரத்தின்போது பிரிட்டிஷ் ஆட்சியின் போலீசார் வந்தால் உடனே அவரது பிரச்சாரத்தை நிறுத்திவிட்டு கிராமபோன் பெட்டியில் பாடல்களை ஒலிக்கச் செய்வார். இவ்வகையில் அவர் பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்த பிரச்சாரம் அந்தக் காலத்திலேயே வெகுஜன மக்களை சென்றடைவதற்காக நவீன யுக்தியை கடைப்பிடித்தார்.

ஏனெனில் நீலகண்ட பிரம்மச்சாரியின் பயங்கரவாத புரட்சிகர கொள்கை என்பது இரண்டு வழிமுறைகளை உள்ளடக்கியதாக இருந்தது. ஒன்று சாதாரண மக்களிடையே நாட்டு விடுதலைக்காக பிரச்சாரம் செய்வது. மற்றொன்று நாடு முழுவதும் சுதந்திர ஆர்வம் கொண்ட மக்களிடையே மனஉறுதிமிக்க துணிச்சலானவர்களை தேர்வு செய்து நாட்டு விடுதலைக்காக தீவிர செயல்களில் ஈடுபடச் செய்வதுடன் தங்கள் உயிரையும் அர்ப்பணிக்க தயாராவது என்பதாகும். அத்தகையவர்கள் பாரதமாதா சங்கத்தில் உறுப்பினராவதும், அவர்கள் கட்டைவிரலில் கத்தியால் கீறி ரத்தம் வரச் செய்து காளி சிலை முன்பு நாட்டு விடுதலைக்காக உறுதியேற்பதும் அவரது வழிமுறையாக இருந்தது. இதன்படி அந்த சங்கத்தில் சேர்ந்தவர்களில் ஒருவர்தான் செங்கோட்டை வாஞ்சிநாதன்.

நீலகண்ட பிரம்மச்சாரியின் இந்த நடைமுறை வ.வே.சு. அய்யரின் நடைமுறைகளிலிருந்து வேறுபட்டிருந்தது. வெளிநாட்டிலிருந்து ஆயுதங்கள் வாங்குவது மற்றும் தயாரிப்பது, தனிநபர்களை கொலைசெய்வது, சாத்தியமான இடங்களில் கொரில்லாப் போர் முறையைப் பின்பற்றுவது, தக்க வாய்ப்பு வரும் போது எழுச்சி செய்வது என்பது அவரது வழிமுறையாக இருந்தது. ஆனால் நீலகண்ட பிரம்மச்சாரி இந்த நடைமுறையுடன் வேறுபாடு கொண்டிருந்தார். அதற்கு காரணம் அவர் பொதுமக்களுடன் நெருங்கிய தொடர்புகள் தேவை என்பதை முக்கியமானதாகக் கருதியதே ஆகும். அதனால் நெல்லை மாவட்டத்தை தனது தளமாகக் கொண்டு பல்வேறு செயல்பாடுகளில் ஈடுபட்டார். அதற்கென சில திட்டங்களையும் கொண்டிருந்தார். பத்தமடை, பூலம், மரவக்குறிச்சி, தென்காசி, அம்பாசமுத்திரம், தூத்துக்குடி மற்றும் இதர ஊர்களிலிருந்து தீவிரமான ஆட்களைத் திரட்டி ஒரு புரட்சிகர ராணுவத்தை உருவாக்குவது அவரது முக்கியத்திட்டங்களில் ஒன்று. அந்த ராணுவம் 25 ஆயிரம் பேர் கொண்டதாக இருக்க வேண்டும் என்பது அவரது இலக்கு.

அந்த ராணுவத்தின் மூலம் பிரிட்டிஷாரை விரட்டியடிக்க வேண்டுமென்பதால் அவர் அதற்காக அமைதியாகவும் ரகசியமாகவும் ஆட்களை திரட்டி வந்தார். அதற்காக பூலம் பெரியசாமித் தேவர், மரவக்குறிச்சி பிச்சாண்டித் தேவர், அம்பாசமுத்திரம் கோமதி சங்கர தீட்சிதர், தூத்துக்குடி நிலையநத்தம் ரெட்டியார், ஆதனூர் மாப்பிள்ளைசாமி போன்ற பலருடன் தொடர்பு கொண்டிருந்தார். இவ்வாறு சுதந்திரப் போராட்ட இயக்கத்தை வெகுஜன இயக்கமாக மாற்றுவதில் காந்திக்கு

முன்னோடியாக விளங்கினார் நீலகண்ட பிரம்மச்சாரி. காங்கிரஸ் மேல்ஜாதி இந்துக்களால் ஆதிக்கம் செலுத்தப்பட்டது. அதனால் தாழ்ந்த ஜாதிக்காரர்களின் ஆதரவையும் பெற முயற்சித்து தேசிய இயக்கத்தை வெகுஜன அடித்தளம் கொண்டதாக்க விரும்பினார்.

… நாளை முடியும்

# முதல் கம்யூனிஸ்டுகளில் ஒருவர்

- ப.முருகன்

-நவம்பர் 30, 2019



…

பாரத மாதா சங்கத்தின் ரகசிய கூட்டங்கள் துதிபாடல்களுடன் தொடங்கியதும் நீலகண்ட பிரம்மச்சாரி தனது பேச்சை உணர்ச்சிகரமாக நிகழ்த்துவார். நமது நாடு சுயராஜ்யம் அடையவேண்டுமானால் வெள்ளையர்களை நாட்டைவிட்டே துரத்த வேண்டும். 1857ல் நடந்தது போல மீண்டும் ஒரு கலகம் வரவேண்டும் என்று முழங்குவார். அவரது

உரையின் முடிவில் முத்தாய்ப்பாக ‘ஒரு தினம் குறிப்பிட்டு அதனை பாரதமாதா சங்கத்தினர் அனைவருக்கும் தெரிவிக்கப்படும். அன்று எல்லோருமாக நாட்டின் பல பாகங்களிலிருந்து கிளம்பி வெள்ளைக்காரர்களுக்கு எதிராக கலகம் செய்ய வேண்டும். வீடு, வாசல், உறவையும் இழக்கவும் துணிய வேண்டும். உங்களுக்கு வழிகாட்டியாக இருக்கவே நான் எல்லாவற்றையும் துறந்து பிரம்மச்சாரியாகவே இருந்துவிட்டேன். எல்லோரும் ஒற்றுமையாக பாடுபட்டால்தான் நாம் சுயராஜ்யம் அடைய முடியும்’ என்று முடிப்பார்.

இதனை அறிந்த பிரிட்டிஷ் ஆட்சியின் நெல்லை மாவட்ட கலெக்டர், பாரதமாதா சங்கத்தினர் குறித்த தகவல்களை சேகரிக்க ரகசிய போலீசாருக்கு உத்தரவிட்டான். இதையடுத்து நெல்லை மாவட்டத்தில் காவல்துறையின் கெடுபிடி நாளுக்கு நாள் அதிகமானது. பாரதமாதா சங்கத்தினர் எங்கு அகப்பட்டாலும் அவர்களை திருநெல்வேலி தலைமையகத்தில் காவலில் வைக்கும்படி மாவட்ட கலெக்டர் ஆஷ் உத்தரவு போட்டான். இந்நிலையில் பாரதமாதா சங்கத்தினரை வேட்டையாட சென்னையிலிருந்து போலீசாரை வரவழைக்கவும் உத்தரவிட்டான். அதையடுத்து புதுவையிலிருந்த பாரத மாதா சங்கத்தினர் இதுபற்றி விவாதித்தனர். அப்போது வ.வே.சு. அய்யருக்கும், நீலகண்ட பிரம்மச்சாரிக்கும் கருத்துவேறுபாடு அதிகரித்தது. இந்த நிலையில் வாஞ்சிநாதனும் அவரது நண்பர்களும் வ.வே.சு.அய்யரின் வழிமுறையை ஆதரித்தனர். ஆஷ்துரையை சுட்டுக் கொல்வதற்கு முடிவு செய்தனர். அதற்காக வாஞ்சிநாதனுக்கு புதுவையில் பயிற்சியும் கொடுக்கப்பட்டது.

இதையடுத்து ஏற்பட்ட வாக்குவாதம் முற்றி நீலகண்ட பிரம்மச்சாரியின் பெட்டி படுக்கைகள் வாஞ்சிநாதன் குழுவினரால் வீதியில் தூக்கியெறியப்பட்டன. இதையடுத்து வேதனையுடன் நீலகண்டன் சென்னை திரும்பினார். அங்கிருந்து தலையை மொட்டையடித்து சன்னியாசி கோலத்தில் வடஇந்தியாவுக்கு புறப்பட்டுச் சென்றார்.

இதற்கிடையே 1911 ஜூன் 17 அன்று மணியாச்சி ரயில்நிலையத்தில் ஆஷ்துரையை சுட்டுக்கொன்றுவிட்டு வாஞ்சிநாதனும் தற்கொலை செய்துகொண்டார். ஆஷ்கொலையை அடுத்து நெல்லை மாவட்டம் முழுவதும் காவல்துறையின் கெடுபிடி அதிகரித்தது. பாரதமாதா சங்கத்தை சேர்ந்தவர்கள் என்று சந்தேகிக்கப்பட்டவர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டு சித்ரவதைக்குள்ளாக்கப்பட்டனர். அத்துடன் நீலகண்ட பிரம்மச்சாரியை கைது செய்வதற்கு நாலாபுறமும் போலீசார் அனுப்பி வைக்கப்பட்டனர்.

ஆனால் ஆஷ்கொலை நடந்த போது நீலகண்டன் காசியில் இருந்தார். அங்கிருந்து அவர் கல்கத்தா சென்றார். அங்கேதான் தன்னை காவல்துறையினர் தேடும் விசயம் அவருக்கு தெரியவந்தது. இந்நிலையில் தேசிய தலைவர்கள் சிலர் அவரை காவல்துறையினரிடம் சரணடைய வேண்டுமென்று கூறினர். அதன் அடிப்படையில் கல்கத்தாவில் நீலகண்டன் சரணடைந்தார். பின்னர் அவர் நெல்லைக்கு கொண்டுவரப்பட்டார். ஆஷ்துரை கொலைவழக்கில் காவல்துறை நீலகண்டன் உள்ளிட்ட 14 பேர் மீது கொலை வழக்கு தொடர்ந்தது. இந்த வழக்கு திருநெல்வேலி சதிவழக்கு என்று அழைக்கப்பட்டது. இதில் முதல் குற்றவாளியாக

நீலகண்டன் குறிப்பிடப்பட்டார்.இந்த வழக்கு 1911 செப்டம்பர் 11 அன்று திருநெல்வேலி சிறப்பு நீதிமன்றத்தில் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. இந்த வழக்கின் முடிவில் நான்கு பேர் விடுதலை செய்யப்பட்டனர். அவருக்கு ஏழு ஆண்டு கடுங்காவல் தண்டனையும் மற்றும் 8 பேருக்கு ஓராண்டு முதல் நான்காண்டுவரை கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டது. நீலகண்டன் பெல்லாரி சிறைக்கு கொண்டு செல்லப்பட்டார். இந்த வழக்கில் தண்டனைக்குள்ளானவர்கள் அனைவரும் சென்னை உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்தனர். ஆனால் பிரம்மச்சாரி மேல்முறையீடு செய்ய விரும்பவில்லை. அதனால் பெல்லாரி சிறைக்கு கொண்டு செல்லப்பட்ட அவர் 1914ஆம் ஆண்டில் அங்கிருந்து தப்பி ஓடினார். ஆனால் இரண்டு நாட்களிலேயே போலீசார் அவரை மீண்டும் பிடித்துவிட்டனர். அதனால் மேலும் ஆறு மாத காலம் கூடுதல் தண்டனை வழங்கப்பட்டது. அவரது தண்டனைக் காலம் முடிந்து 1919ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் விடுதலையானார்.

சிறையில் இருந்த காலத்தில் ரஷ்யப்புரட்சி குறித்தும் அதன் லட்சியங்கள் குறித்தும் நிறைய தெரிந்துகொண்டார். சிறையிலிருந்து வெளியே வந்ததும் சென்னையிலிருந்த சிங்காரவேலருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். அவர்கள் இருவரும் சேர்ந்து கம்யூனிஸ்ட் அறிக்கை அல்லது பிரகடனம் ஒன்றை தயார் செய்யும் பணியில் ஈடுபட்டிருந்தனர் என்று கூறப்படுகிறது.இந்நிலையில் 1922ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் சிங்காரவேலரின் இல்லம் பிரிட்டிஷ் போலீசாரால் சோதனையிடப்பட்டது. ஆனால் அங்கு அவர்கள் தேடிவந்த பிரசுரங்கள் எதுவும் கிடைக்கவில்லை.

ஆனால் இந்திய கம்யூனிஸ்ட் சமஸ்டிக் கழகம் என்ற அமைப்பின் பேரில் ‘சவால்’ என்ற பிரசுரத்தை வெளியிட்டதற்காக நீலகண்ட பிரம்மச்சாரி கைது செய்யப்பட்டார். ஆனால் சிங்காரவேலரின் வீட்டை போலீசார் சோதனையிட்டதற்கு காரணம் அவரது வீட்டின் அருகில் நீலகண்ட பிரம்மச்சாரி தங்கியிருந்ததுதான். அதனால் அந்தப் பிரசுரங்கள் வீட்டில் பதுக்கிவைக்கப்பட்டிருக்கலாம் என்பதுதான்.

1917ஆம் ஆண்டு நடைபெற்ற ரஷ்யப் புரட்சியானது பயங்கரவாதத்தில் அவர் கொண்டிருந்த கவனத்தை மாற்றி தன் பக்கம் திருப்பியது. கம்யூனிசக் கொள்கைகளில் ஈடுபாடு கொண்டு அவற்றை பரப்பவும் தொடங்கினார். இதுவிஷயத்தில் அவர், இந்த நாட்டில் கம்யூனிசத்தை முதன்முதலில் பிரச்சாரம் செய்தவர்களில் ஒருவராக விளங்கினார் என்று ரா.அ.பத்மநாபனை மேற்கோள் காட்டி தொ.மு.சி. ரகுநாதன் குறிப்பிட்டுள்ளார். இவர் தமிழ்நாட்டில் கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கும் தொழிற்சங்க இயக்கத்திற்கும் முன்னோடிகளில் ஒருவராக விளங்கிய சிங்காரவேலருடன் சென்னையில் தங்கியிருந்து கம்யூனிஸ்ட் திட்டம் ஒன்றை தயாரித்து வெளியிட்டதாக ‘புதிய அலை’ பத்திரிகை ஆசிரியை டாக்டர் எஸ்.விஜயலட்சுமி கட்டுரையொன்றில் கூறியுள்ளார் என்று அக்டோபர் புரட்சியும் தமிழ் இலக்கியமும் என்ற நூலில் தொ.மு.சி.ரகுநாதன் கூறியுள்ளார். அத்துடன் சுதந்திரப் போராட்ட வீரர் ம.பொ.சிவஞானம், நீலகண்ட பிரம்மச்சாரி குறித்து கூறியுள்ள விபரங்கள் மிக முக்கியமானவை:

“1919ல் சிறை மீண்ட பின் திரு. பிரம்மச்சாரி கம்யூனிஸ்ட்டாக மாறினார்.

வர்க்கப் புரட்சிக்கான பிரச்சாரத்தில் ஈடுபட்டதற்காக 1922ல் பத்தாண்டு சிறைத் தண்டனை பெற்றார். இந்த முறை அவர் சென்னை மாகாண சிறையில் அடைக்கப்படவில்லை. மாண்ட் கோமரி (இன்று பாகிஸ்தானில் உள்ளது) சிறையிலும், பஞ்சாபில் உள்ள முல்தான் சிறையிலும், பர்மாவில் உள்ள ரங்கூன் சிறையிலும் பத்தாண்டு தண்டனை முழுவதையும் அனுபவித்த பின் விடுதலையானார். அரசியல் புரட்சிக்காரராக சிறைபுகுந்த பிரம்மச்சாரி சிறையிலிருந்து மீண்டபோது ஆன்ம ஞானியாக காட்சியளித்தார். அரசியலுக்கு முழுக்குப் போட்டு கர்நாடகத்தில் உள்ள நந்திமலையில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு 88 வயது வரை ஞானியாகவே வாழ்ந்து சில ஆண்டுகளுக்கு முன்பு மறைந்தார்”.

# முப்பதாம் ஆண்டுகளில் கம்யூனிஸ்ட் இயக்கம்

-டிசம்பர் 1, 2019




…

சென்னை மாகாண தொழிலாளர் பாதுகாப்பு சங்கம் தோற்றம்

1930ஆம் ஆண்டுகளில் தென்னகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கம் வேரூன்றியது. இந்த இயக்கத்திற்கான அடித்தளத்தை அமைத்தவர்களில் முக்கியமானவர்கள் தோழர் அமீர் ஹைதர்கான், தோழர் சுந்தரய்யா ஆகியோர் ஆவர். இவர்களுடைய நடவடிக்கைகள் பற்றிய விபரங்களைச்

சேகரித்து, இவர்கள் மீதும் இவர்கள் உருவாக்கி வந்த கம்யூனிஸ்ட் இயக்கத்தின் மீதும் தாக்குதல் தொடுத்த பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் இந்த விபரங்களையெல்லாம் அரசு ஆவணக் காப்பகத்தில் வைத்துள்ளனர். தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கம் தோன்றியது சம்பந்தமாகவும், தொழிற்சங்க இயக்கம் உருவானது தொடர்பாகவும் அரசு ஆவணக் காப்பகத்திலிருந்து கிடைத்த விபரங்களை அப்படியே கீழே தருகிறோம். இந்த ஆவணத்தில் பி.சுந்தரராமரெட்டி என்று அழைக்கப்படுபவர் நமது மறைந்த தோழர் சுந்தரய்யாதான்.

கம்யூனிஸ்ட் அகிலத்தின் குறிக்கோள், திட்டத்திற்கு இயைந்தாற்போல் செயல்படக்கூடிய இளம்தொழிலாளர் சங்கம் (லீக்) என்றொரு ஸ்தாபனத்தை அமீர் ஹைதர்கான் 1932ஆம் ஆண்டு சென்னையில் ஸ்தாபித்தார். மாஸ்கோவில் பயிற்சி பெற்ற போல்ஷ்விக் பிரச்சாரகர்களில் ஒருவரான அமீர் ஹைதர்கான் மீரட் சதி வழக்கில் சம்பந்தப்பட்டு தலைமறைவாகி சென்னையில் ஒளிந்து கொண்டிருந்த போது இந்த ஸ்தாபனத்தை அமைத்தார்.

1932ஆம் ஆண்டு இவர் கைது செய்யப்பட்டதற்குப் பிறகு இந்த ஸ்தாபனம் செயல்படவில்லை. 1934ஆம் ஆண்டு ஜூலை மாதம் அமீர் ஹைதர்கான் விடுதலையாகும் வரை இது செயலின்றி இருந்தது. இவர் விடுதலை செய்யப்பட்டதும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மாகாண கமிட்டியை அமைப்பதற்கு முயற்சித்தார். இவர் தன்னுடைய குறிக்கோளை அடைவதற்கு முன்னர் வரம்பிற்குட்பட்டே செயல்பட வேண்டியிருந்தது. 1934ஆம் ஆண்டு ஜூலை மாதம் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும் அதன்

கிளைகளும் சட்டவிரோத ஸ்தாபனங்களாக அறிவிக்கப்பட்டன. இந்த இளம்தொழிலாளர் லீக்கும் செப்டம்பர் மாதத்தில் சட்டவிரோத அமைப்பாக அறிவிக்கப்பட்டது. இருப்பினும், இதன் உறுப்பினர்களால் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆணைகளைப் பெறவும், அதன் உத்தரவுகளை அமல் நடத்தவும் முடிந்தது. இதன் அடிப்படையில் சென்னை, நெல்லூர், குண்டூர், கிருஷ்ணா, மேற்கு கோதாவரி ஆகிய இடங்களில் கிளைகளைக் கொண்ட மாகாணக் கமிட்டி அமைக்கப்பட்டது. மாகாணக் கமிட்டி செயலாளர் பி.சுந்தரய்யா ராமரெட்டி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி கூட்டம் ஒன்றில் கலந்து கொண்டார். அதன் உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த அடிப்படையில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியிடமிருந்து நிதியும், ஆலோசனைகளையும் பெற்றார். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியுடன் இவர் கொண்டுள்ள உறவை வெளிப்படுத்தக்கூடிய எந்தவொரு தஸ்தாவேஜையும் இவர் வைத்துக் கொள்ளவில்லை.

இளம்தொழிலாளர் லீக் என்ற பெயரில் மேற்கொண்டு வெளிப்படையாக செயல்பட முடியாததால் தங்களுடைய சட்டவிரோத தலைமறைவு வேலைகளை மூடிமறைக்க தீங்கற்ற அமைப்பு என்று காட்டக்கூடிய வகையில் “தொழிலாளர் பாதுகாப்பு சங்கம்” என்ற பெயரில் அமைத்தனர். முதல் சங்கம் 1935ஆம் ஆண்டு மார்ச் மாதம் குண்டூரில் ஆரம்பிக்கப்பட்டது. இதைத்தொடர்ந்து நெல்லூர், மசூலிப்பட்டினம் ஆகிய இடங்களில் 1935 ஜூலை முதல் தேதியில் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன. 1935 ஜூலை 19ஆம்தேதி சென்னையிலும், 1935 ஆகஸ்ட் மாதம்

தெனாலியிலும் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன. இந்த சங்கங்களின் வேலைகளை ஒருங்கிணைக்க “சென்னை தொழிலாளர் பாதுகாப்பு சங்கம்” என்ற பெயரில் மாகாண சங்கம் 1935 ஆகஸ்ட் 18ஆம் தேதி ஆரம்பிக்கப்பட்டது. இதன் தலைமையகம் சென்னையில் இருந்தது.

இந்த சங்கங்களின் குறிக்கோள், இருக்கக்கூடிய தொழிலாளர் பாதுகாப்பு சங்கங்களை ஒருங்கிணைப்பது; இல்லாத இடங்களில் புதிய சங்கங்களை ஆரம்பிப்பது என்பதாகும். இதன் உறுப்பினர்கள், தொழிலாளர் நலன்களுக்கு எதிராக செயல்படக்கூடிய எந்தவொரு வகுப்புவாத ஸ்தாபனத்திலும் உறுப்பினர்களாக இருக்கக்கூடாது என்று உறுப்பினர்களுக்கு அறிவுறுத்தப்பட்டது. இந்தச் சங்கங்களுக்கு பி.சுந்தரராமரெட்டி பொதுச் செயலாளராகவும், ஜெ.ராமலிங்கய்யா, பி.ராமசுப்பையா, பி.நரசிம்மமூர்த்தி, சி.ஜெகநாதன், பி.வெங்கடேஸ்வரலு, கரப்பாடி சத்தியநாராயணா, தாடி அப்பலசுவாமி, கே.சத்தியநாராயணா, டி.வெங்கடாசலபதி, பி.வி.சிவய்யா ஆகியோர் உறுப்பினர்களாகவும் இருந்தனர்.

… தொடரும்

# முப்பதாம் ஆண்டுகளில் கம்யூனிஸ்ட் இயக்கம் அகில இந்திய அச்சக தொழிலாளர் சம்மேளனம்

-டிசம்பர் 2, 2019






…

1936ஆம் ஆண்டு ஜூலை 13, 14 தேதிகளில் சென்னை மாகாண தொழிலாளர் பாதுகாப்பு சங்கத்தின் நிர்வாகக்குழுக் கூட்டம் எலுரு என்ற இடத்தில் நடந்தது. தொழிலாளர் பாதுகாப்பு சங்கத்தின் ஒவ்வொரு உறுப்பினரும் காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியால் அமைக்கப்பட்டுள்ள

ஆர்கனைசிங் கமிட்டியில் சேர வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. தொழிலாளர்களும், தொழிற்சங்கங்களும் கூட்டாக காங்கிரசில் தங்களை இணைத்துக் கொள்ள வேண்டும் என்று அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசும், அகில இந்திய சோசலிஸ்ட் கட்சியும் ஆலோசனை கூறியதை கமிட்டி விமர்சித்தது. இணைக்கப்பட்ட சங்கங்களின் ஸ்தாபன தத்துவார்த்த சுதந்திரத்தில் காங்கிரஸ் தலையிடக்கூடாது என்று கமிட்டி வற்புறுத்தியது. சிவில் உரிமை சங்கங்களை ஆரம்பிக்கும் ஜவஹர்லால்நேருவுக்கு ஆதரவு கொடுத்ததற்காக அமீர்ஹைதர்கானை கைது செய்ததை கமிட்டி கண்டித்தது. 1936 ஜூலை 14ஆம்தேதி ஒரு பொதுக்கூட்டத்தில் பொதுச் செயலாளர் பி.சுந்தர ராமரெட்டி காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியின் திட்டம் மேம்போக்காக இருப்பதாக விமர்சித்தார். இந்தத் திட்டம் மார்க்சிசம், லெனினிசத்திற்கு இயைந்ததாக இறுதியில் ஒரு கம்யூனிஸ்ட் அரசை ஸ்தாபிப்பதாக இருக்க வேண்டும் என்றார். அனேகமாக எல்லா சங்க உறுப்பினர்களும் காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியில் சேர்ந்தனர். நடைமுறையில் சங்கம் என்ற பெயரில் ஒரு சில கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்களைத் தவிர மற்ற எந்த வேலையும் நடக்கவில்லை.

அகில இந்திய அச்சக தொழிலாளர் சம்மேளனம்

934ஆம் ஆண்டு அக்டோபர் கடைசியில் இந்திய அச்சக தொழிலாளர் சங்க பிரதிநிதிகள் கூட்டம் பம்பாயில் நடைபெற்றது. அந்தக்கூட்டத்தில் இந்த ராஜதானியில் இருந்து பி.சுந்தர ராமரெட்டி (பி.சுந்தரய்யா) உள்பட இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கிய உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். இந்தக் கூட்டத்தில் ஐக்கிய மாகாணங்களின் அகில இந்திய

அச்சக தொழிலாளர் சம்மேளன மாநாட்டை டிசம்பரில் நடத்த முடிவு செய்யப்பட்டது. அகில இந்திய அச்சக தொழிலாளர் சம்மேளன மாநாட்டை டிசம்பரில் நடத்த முடிவு செய்யப்பட்டது. அகில இந்திய அச்சக தொழிலாளர் சம்மேளன மாநாடு 1934 டிசம்பர் 29, 30ஆம் தேதிகளில் லக்னோவில் நடந்தது. பி.சுந்தரராமரெட்டி இந்த மாநாட்டுக்கு பிரதிநிதியாக பி.மாணிக்கம் என்ற அச்சுத் தொழிலாளியை அனுப்பினார். மாணிக்கம் சென்னையைச் சேர்ந்த ஒரு கம்யூனிஸ்ட், சென்னை இளம்தொழிலாளர் சங்கத்தின் உறுப்பினராகவும் இருந்தார். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும், அதன் கிளைகளும், சென்னை இளம் தொழிலாளர் சங்கமும், இந்த மாகாணத்தில் கம்யூனிஸ்ட் அகிலத்தின் கொள்கை குறிக்கோள்களுக்கு இயைந்தவாறு செயல்பட்டன. இவை 1934ஆம் ஆண்டு ஜூலை, செப்டம்பர் மாதங்களில் சட்டவிரோதமான அமைப்புகளாக அறிவிக்கப்பட்டன. இளம்தொழிலாளர் சங்கம் என்ற பெயரிலோ அல்லது இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னைக் கிளை என்ற பெயரிலோ வெளிப்படையாக செயல்பட முடியாத நிலை ஏற்பட்டது. அமீர் ஹைதர்கான் சிறையில் அடைக்கப்பட்ட பிறகு பி.சுந்தரராமரெட்டி இதனை ரகசியமாக ஸ்தாபித்தார். ஆகவே சுந்தரராமரெட்டி இந்த மாகாணத்திலுள்ள இதர கம்யூனிஸ்ட்டுகளின் உதவியுடன் தங்கள் சட்டவிரோத, தலைமறைவு வேலைகளை மூடிமறைக்க பல்வேறு மையங்களில் அச்சகத் தொழிலாளர் சங்கங்களையும், தொழிலாளர் பாதுகாப்பு சங்கங்களையும் ஏற்படுத்தினார். சென்னை, குண்டூர், நெல்லூர், தெனாலி, பெஜவாடா, எலுரு ஆகிய இடங்களில் அச்சக தொழிலாளர் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. இந்தச்

சங்கங்களை அமைக்க ஏற்கெனவே ஸ்தாபிக்கப்பட்டிருந்த தொழிலாளர் பாதுகாப்பு சங்கத்தைச் சேர்ந்தவர்கள் ஏற்பாடு செய்தனர். 1935 நவம்பர் 2, 3 தேதிகளில் அகில இந்திய அச்சகத் தொழிலாளர் சம்மேளன கூட்டம் பம்பாயில் நடந்தது. இந்தக் கூட்டத்தில் பி.சுந்தர ராமரெட்டி கலந்து கொண்டார். இந்த சம்மேளனத்தின் இரண்டாவது மாநாட்டை சென்னையில் நடத்த அழைப்பு விடுக்கப்பட்டது. சென்னை அச்சகத் தொழிலாளர் சங்க நிர்வாகிகளைக் கொண்ட வரவேற்புக்குழு ஒன்று ஸ்தாபிக்கப்பட்டது. 1936ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 5ஆம்தேதி வாரணாசியைச் சேர்ந்த ராமண்ணா என்பவர் தலைமையில் மாநாடு நடந்தது. இந்த மாநாட்டில் பம்பாயிலிருந்து டி.கே.டோலி, வி.டி.சிட்டாலி, ஆர்.ஆர்.பெட்னிகார், கல்கத்தாவில் இருந்து ஏ.எம்.ஏ.ஜமான், லாகூரில் இருந்து பத்ரிநாத், மீரட் சதி வழக்கில் சம்பந்தப்பட்டு விடுதலையான எஸ்.வி.காட்டே, பி.சுந்தரராமரெட்டி ஆகியோர் கலந்து கொண்டனர். கம்யூனிஸ்ட் வாசகங்கள் அடங்கிய அட்டைகள் மாநாட்டு அரங்கில் வைக்கப்பட்டிருந்தன. மாநாட்டு வாயிலில் கம்யூனிஸ்ட் சின்னம் தாங்கிய கொடியை இந்த மாகாணத்தைச் சேர்ந்த பி.ஜீவானந்தம் ஏற்றிவைத்தார். ரஷ்ய உதாரணத்தை பின்பற்ற வேண்டும் என்றும், தொழிலாளர்கள் தங்கள் கடைசிச் சொட்டு ரத்தத்தையும் சிந்தி செங்கொடியின் புனிதத் தன்மையையும், மேன்மையையும் பாதுகாக்க வேண்டும் என்றும் ஜீவானந்தம் அறைகூவல் விடுத்தார். தமிழ்நாடு அச்சகத் தொழிலாளர் சங்க உறுப்பினர் சிவஞானம் மாநாட்டைத் திறந்து வைத்தார். ரஷ்ய பாணியில் இந்தியத் தொழிலாளர்கள் ஒரு தொழிலாளர் அரசை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். சென்னை அச்சகத் தொழிலாளர் சங்க

உறுப்பினர் பி.ராஜவடிவேலு பிரதிநிதிகளை வரவேற்றுப் பேசினார். இந்த மாநாட்டில் அகில இந்திய அச்சகத் தொழிலாளர் சம்மேளனத்தின் தலைமையகம் சென்னையில் இருந்து பம்பாய்க்கு மாற்றப்பட்டது. அதன் பொதுச் செயலாளராக பி.மாணிக்கமும், நிர்வாகக்குழுவில் இந்த மாகாணத்தைச் சேர்ந்த டி.ஜி.சடகோபன், எஸ்.வி.காட்டே ஆகியோரும் நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களாக இருந்தனர். பி.சுந்தர ராம ரெட்டி இந்த சம்மேளனத்தின் நிர்வாகியாக இல்லாதிருந்த போதிலும் சம்மேளனத்தின் எல்லா வேலைகளையும் எல்லா தகவல் தொடர்புகளையும் செய்து வந்தார். பி.மாணிக்கம் நடைமுறையில் பெயரளவிலான தலைவராகவே இருந்தார்.தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# முப்பதாம் ஆண்டுகளில் கம்யூனிஸ்ட் இயக்கம்

-டிசம்பர் 3, 2019

முப்பதாம் ஆண்டுகளில் கம்யூனிஸ்ட் இயக்கம்

சென்னை அச்சக ஊழியர் சங்கம்

இவர்கள் ரஷ்யப் புரட்சியை விளக்கியும், ஒடுக்குமுறைச் சட்டங்களை வாபஸ் வாங்க வேண்டும் என்றும் அமீர் ஹைதர்கானையும் இதர கம்யூனிஸ்ட்டுகளையும் விடுதலை செய்ய வேண்டும் என்றும், கம்யூனிஸ்ட் ஸ்தாபனங்கள் மீதான தடையை எதிர்த்தும் பேசினர்.



ஜீவா



சுந்தரய்யா



ஏ.எஸ்.கே. அய்யங்கார்



ம.பொ.சிவஞானம்




…

சென்னை அச்சக ஊழியர் சங்கம்

அரசாங்க ஆவணங்களில் உள்ள விபரங்கள்

இவர்கள் ரஷ்யப் புரட்சியை விளக்கியும், ஒடுக்குமுறைச் சட்டங்களை வாபஸ் வாங்க வேண்டும் என்றும் அமீர் ஹைதர்கானையும் இதர

கம்யூனிஸ்ட்டுகளையும் விடுதலை செய்ய வேண்டும் என்றும், கம்யூனிஸ்ட் ஸ்தாபனங்கள் மீதான தடையை எதிர்த்தும் பேசினர்.

சென்னை கம்யூனிஸ்ட்டுகளான ஏ.எஸ்.கே.அய்யங்காரும் பி.மாணிக்கமும் (நெல்லூர் மாவட்டத்தைச் சேர்ந்த பி.சுந்தர ராமரெட்டியின் உத்தரவின்பேரில்) சென்னை ஜார்ஜ் டவுனைச் சேர்ந்த 30 அச்சக ஊழியர்களை 1935 ஏப்ரல் 5ஆம்தேதி சந்தித்தனர். சென்னை அச்சகத் தொழிலாளர் சங்கம் என்ற பெயரில் ஒரு சங்கத்தை ஆரம்பிக்க முடிவு செய்தனர். மற்றொரு கம்யூனிஸ்டான கே.சத்தியநாராயணா, ஏ.எஸ்.கே.அய்யங்காருக்கு உதவினார். இவர்கள் ஏப்ரல், மே, ஜூன் மாதங்களில் தொழிலாளர்கள் கூட்டங்களில் பேசி அவர்களைச் சங்கத்தில் சேரத் தூண்டினர். இவர்கள் ரஷ்யப் புரட்சியை விளக்கியும், ஒடுக்குமுறைச் சட்டங்களை வாபஸ் வாங்க வேண்டும் என்றும் அமீர் ஹைதர்கானையும் இதர கம்யூனிஸ்ட்டுகளையும் விடுதலை செய்ய வேண்டும் என்றும், கம்யூனிஸ்ட் ஸ்தாபனங்கள் மீதான தடையை எதிர்த்தும் பேசினர்.

இந்தச் சங்கம் அகில இந்திய அச்சக ஊழியர் சம்மேளனத்துடன் ஆகஸ்ட் இறுதியில் இணைக்கப்பட்டது. தொழிலாளர்கள் தங்களுக்கு தொடர்ச்சியாக சம்பளம் வழங்க வேண்டும் என்று கோரியதற்காக தமிழ்நாடு அச்சகத்தில் இருந்து சில தொழிலாளர்கள் வேலைநீக்கம் செய்யப்பட்டனர். அச்சக ஊழியர் சங்கம் இவர்களை மீண்டும் வேலையில் சேர்க்க வேண்டும் என்பதற்காகப் போராடியது. சென்னையில் ஆந்திர பத்திரிகா அச்சக ஊழியர்கள் மே முதல் வாரத்தில் மூன்று நாள் வேலைநிறுத்தம் செய்து மறியல் செய்தனர். போலீசார் இவர்களை

சென்னை நகரப் போலீஸ் சட்டப்படி வெற்றிகரமாக கைது செய்து வழக்குப்பதிவு செய்தனர்.

இந்தச் சங்கத்தினர் மற்ற சங்கத்தினருடன் கூட்டாகச் சேர்ந்து மக்கள் பூங்காவில் மே தினத்தைக் கொண்டாடினர். இந்தக் கூட்டத்தில் பேசிய மூன்று பேர் தவிர மற்ற அனைவரும் கம்யூனிஸ்ட்டுகள். சோவியத் புரட்சியை வாழ்த்தியும், யுத்தத்தில் பிரிட்டிஷாருக்கு தொழிலாளர்கள் உதவி செய்யக்கூடாது என்று கேட்டுக் கொண்டும், இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி இந்தியாவில் தொழிலாளர் விவசாயிகள் அரசாங்கத்தை ஸ்தாபிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டனர்.

அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் சென்னை மாகாணக் கமிட்டி

1932ஆம் ஆண்டு அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசின் பொதுச் செயலாளர் முகுந்தலால் சர்க்கார் சென்னை மாகாணக் கமிட்டியை அமைக்க தீவிர முயற்சி எடுத்தார். அவரைக் கைது செய்ததன் மூலம் இந்த முயற்சி முறியடிக்கப்பட்டது. 1933ஆம் ஆண்டு முகுந்தலால் சர்க்கார் தொழிற்சங்க நடவடிக்கைகளை உயிர்ப்பிக்க தீவிர முயற்சி செய்தார். ஆனால் சென்னை சதி வழக்கில் இவர் கைது செய்யப்பட்டதன் மூலம் இந்த முயற்சி முறியடிக்கப்பட்டது.

1935ஆம் ஆண்டு மே மாதம் ஆர்.எஸ்.நிம்கர், மீரட் சதி வழக்கிலிருந்து விடுதலை செய்யப்பட்டவுடன் ஏஐடியுசி பொதுச் செயலாளர் வேண்டுகோளின் பேரில் சென்னைக்கு வந்து மாகாணக் கமிட்டியை அமைக்க முயற்சித்தார். இவரும் கைது செய்யப்பட்டதால் இந்த முயற்சி

முறியடிக்கப்பட்டது. சென்னை தொழிலாளர் பாதுகாப்புச் சங்கப் பொதுச் செயலாளர் பி.சுந்தரராமரெட்டி, பின்னர் இந்த முயற்சியை எடுத்துக் கொண்டார். இவர் ஏஐடியுசி பொதுச் செயலாளருடன் தொடர்பு கொண்டார். ஏஐடியுசி பொதுச் செயலாளர் ஏஐடியுசியின் வங்க கிளைச் செயலாளர் ஏ.எம்.ஏ.ஜமானை இப்பொறுப்புக்கு நியமித்தார்.

1936ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சென்னைக்கு வந்தார். சென்னையில் 1936 ஜனவரி 8ஆம்தேதி ஒரு கூட்டத்தைக் கூட்டினார். இந்தக் கூட்டத்தில் 7 சங்கங்களின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். இந்தக் கூட்டத்தில் மாகாணக் கமிட்டி அமைக்கப்பட்டது. பின்வரும் நபர்கள் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்: தலைவர் - பி.ஜீவானந்தம்; துணைத் தலைவர் - ஏ.எஸ்.கே.அய்யங்கார்; பொதுச் செயலாளர் - பி.சுந்தரராமரெட்டி; ஆர்கனைசிங் செயலாளர் - ராஜகோபால கிராமணி; நிர்வாகக்குழு உறுப்பினர்கள்: எஸ்.பார்த்தசாரதி. பி.ராஜவடிவேலு, எம்.நடேச முதலியார், ம.பொ.சிவஞானம், ஜி.கிருஷ்ணமூர்த்தி, கே.நாராயணராவ் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# கனவிலும் கூடக் கருதவில்லை

- முசாபர் அகமது

-டிசம்பர் 4, 2019

…

இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப நாட்கள்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் நிறுவகத் தலைவர்களில் ஒருவர் தோழர் முசாபர் அகமது அவர்கள், அவர் இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப நாட்கள் எனும் கட்டுரையை எழுதியிருந்தார். அவரது

கட்டுரையை தீக்கதிர் நாளிதழ் 1976ஆம் ஆண்டில் வெளியிட்டது. அதனை உத்தமபாளையத்தைச் சேர்ந்த தோழர் உசேன் மீர் 1976 அக்டோபர் மாதம் பிரசுரமாக வெளியிட்டார் தோழர் முசாபர் அகமதுவின் அந்தக் கட்டுரையை இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் நூற்றாண்டையொட்டி இங்கு தருகிறோம்:

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி 1925 டிசம்பரில்தான் துவக்கப்பட்டது என்று 1959-ல் கட்சியில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் சரியல்ல வென்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்குழு கருதுகிறது. “இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் அமைப்பு தினம் 1920 அக்டோபர் -17” என்று கட்சியின் மத்தியக்குழு அறிவிக்கிறது. எப்படியெனில், அன்றுதான் சோவியத் நாட்டிலுள்ள தாஷ்கண்டில் ஒன்று கூடிய இந்தியப் புரட்சிவாதிகள் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியை துவக்கினார்கள். அன்றுமுதல் இந்தியக் கம்யூனிஸ்ட் இயக்கத்தையும், கட்சியையும் வலுப்படுத்துவதற்கான நடவடிக்கை ஆரம்பமானது.

1917 -ல் ரஷ்யாவில் நவம்பர் புரட்சி நடந்தது. இந்தப்புரட்சியை பற்றி ஏகாதிபத்திய உலகம் ஏராளமான அவதூறுகளைப் பரப்பியது. எடுத்துக்காட்டாக, ரஷ்யாவில் பெண்கள் நாட்டுடைமை ஆக்கப்பட்டனர் என்றும், குழந்தைகள் தாயிடமிருந்து பறிக்கப்பட்டனர் என்றும் இது போன்ற வேறு அவதூறுகளும் ஏகாதிபத்திய உலகத்தினால் பரப்பப்பட்டன. இப்படிப்பட்ட அவதூறுகள் அள்ளி வீசப்பட்டாலும் ரஷ்யப் புரட்சியின் எதிரொலி நமது நாட்டிலும் ஒலிக்கவே செய்தது. மேற்கு வங்கத்தில் பயங்கரவாதப்புரட்சி இயக்கத்தின் ஆரம்ப

முன்னேற்றம் பின் தள்ளப்பட்ட போதிலும், அந்த ஆண்டில் ஏனைய பல இயக்கங்கள் வீறு கொண்டு முன்னேறின. கிலாபாத் இயக்கமும் அரசியல் கைதிகளை விடுதலை செய்யக்கோரும் இயக்கமும் இங்கு குறிப்பிடத்தக்கவை. ஏராளமான பெரிய கூட்டங்களும், ஊர்வலங்களும், தடைசெய்யப்பட்டன.

அக்காலத்தில் கல்கத்தாவில் எல்லா கூட்டங்களிலும் ஊர்வலங்களிலும் நான் கலந்து கொள்வது வழக்கம். 1918 முதல் பல இடங்களிலும் தொழிலாளர்களின் வேலை நிறுத்தங்கள் வெடித்தெழ ஆரம்பித்தன. 1919 -ல் ஜாலியன் வாலாபாக் படுகொலை நடந்தது. கொஞ்ச காலம் வரை நாட்டில் பெரும் கண்டன இயக்கங்கள் நடந்து கொண்டிருந்தன. 1919-ல் சீர்திருத்தச்சட்டம் (The Reforms Act) நிறைவேற்றப்பட்டது. இந்தச் சட்டத்தை எதிர்த்தும் பலத்த கண்டனங்கள் எழுந்தன. 1920-ல் அரசியலையே எனது வாழ்க்கையாக்கிக் கொள்ளுவது என முடிவு செய்தேன். அதற்கு முன்னர் நான் ஒரு இலக்கியக் கழகத்தின் முழு நேர ஊழியனாகப் பணிசெய்து வந்தேன் இந்தக்கழகத்தின் மூலம் 49ஆம் வங்க ரெஜிமெண்டின் (பட்டாளத்தின்) ஹவில்தாராக இருந்த காஸிநஸ்ருல் இஸ்லாமை தெரிந்துகொண்டேன். அவர் பின்னர் ஒரு கவிஞராக நாடு முழுவதும் பிரபலமடைந்தார். வங்க ரெஜிமெண்ட் கலைக்கப்பட்டதை தொடர்ந்து அவர் என்னுடன் சேர்ந்து கல்கத்தாவில் வசிக்க ஆரம்பித்தார்.

‘நவயுகம்’ ஏடு

ஏ.கே பஸலுல்ஹக் என்பவர் அன்று ஓர் இடதுசாரித் தலைவராக அறிமுகமானார். அவர் வங்கத்தில் ஒரு பிரசுரம் கொண்டுவரத் தீர்மானித்தார். அதற்கு நஸ்ருல் இஸ்லாமும், நானும் பொறுப்பேற்றுக் கொண்டோம். எங்களது கூட்டு ஆசிரியர் குழுவின் சார்பில் ‘நவயுக்’ என்னும் மாலை நாள் இதழ் வெளிவந்தது. நஸ்ருல் இஸ்லாமின் கனல் பறக்கும் எழுத்து வண்ணத்தினால் முதல் நாளிலிருந்தே பத்திரிகை பிரசித்தி பெற்றது. பெரும்பாலும் வழக்கமாகத் தலையங்கங்களை நான்தான் எழுதுவேன். ‘நவயுகம்’ பத்திரிகையானது பிற வங்கப் பத்திரிக்கையிடமிருந்து வேறுபட்ட தன்மையுடையதாக இருந்தது. காரணம் அது தொழிலாளர்கள், விவசாயிகள் ஆகியோரைப் பற்றிய செய்திகளைக் கொண்டிருந்தது. திரு. பஸலுல்ஹக் (இடதுசாரித் தலைவர்) இதைத்தடுக்கவில்லை என்பது மட்டுமல்ல இந்தச் சிறப்பு அம்சத்தை ஊக்கப்படுத்தவும் செய்தார்.

உணர்ச்சிமயமானவை

என் நண்பர் ஒருவர் கூறினார் “வங்கப் பத்திரிகைகள் முழுமையாகவே உணர்ச்சிமயமானவை. நீங்கள் பத்திரிகையின் கொஞ்ச இடத்தை சாதாரண மக்களைப் பற்றி - குறிப்பாக தொழிலாளர்களை, விவசாயிகளைப்பற்றி எழுதுவதற்கு ஒதுக்கி வையுங்கள்” நான் அவரது வேண்டுதலுக்கு முற்றிலும் உடன்பட்டேன். நான் ஏற்கனவே கப்பலில் வேலை செய்பவர்களுக்கும், விசைப்படகுகளுள் வேலை செய்பவர்களுக்குமிடையே என் பணியை ஆரம்பித்திருந்தேன்.

நான் பிறந்த இடத்தில் (வங்காள விரிகுடாவிலுள்ள ‘ஸான்ட்விப்’ என்னும் தீவில்தான் நான் பிறந்தேன்) வசிக்கும் மக்களில் அதிகமான பேர் வழக்கமாக கப்பலில் வேலை செய்பவர்கள்தாம், இப்பொழுதும் அங்குள்ள ஏராளமான மக்கள் கப்பலில் வேலை செய்கிறார்கள். மற்றவர்களைப்பற்றி எழுதுவதைக்காட்டிலும் கப்பல் ஊழியர்களைப் பற்றி நான் அதிகமாக எழுதினேன். இவர்களின் பிரச்சனைகளுக்கு ‘நவயுகம்’ பத்திரிகையில் முக்கியத்துவம் கொடுத்தேன். இந்தப் பத்திரிகையில் எழுதுவதன் வாயிலாக மூன்றாவது கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு கவரப்படுவேன் என்பதை அன்று நான் கனவில்கூட கருதவில்லை.

கம்யூனிஸ்ட் அகிலம்

1920-ல் கூடிய கம்யூனிஸ்ட் அகிலத்தின் மூன்றாவது காங்கிரஸ், காலனி நாடுகள் பற்றிய லெனினது கோட்பாட்டை ஏற்றுக் கொண்டது. அதைத்தொடர்ந்து கம்யூனிஸ்ட் அகிலம் காலனி நாடுகளுடன் தொடர்பு கொள்ள முயன்றது.

ரஷ்யப்புரட்சி நடந்தது முதலே பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் மிக அதிக எச்சரிக்கையுடன் இருக்கத் துவங்கியது. இங்கும் ஏதாவதுநடந்த விடுமோ என்று - குறைந்தது ஒரு கம்யூனிஸ்ட் கட்சியாவது உருவாகிவிடுமோ என்று - இந்திய அரசாங்கம் அஞ்சியது. அதனால், அரசாங்கம் தனக்கு ஒரு மத்திய ரகசிய புலனாய்வுத் துறையைப் புதிதாக உருவாக்கியது. பல்வேறு பிரதேசங்களிலிருந்த அரசியல் ஊழியர்களின் செயல்களை இந்தப் புலனாய்வுத்துறை மிகக்கவனமாக கண்காணித்து வந்தது.

மத்திய இரகசியப் புலனாய்வுத்துறையின் உளவாளிகள் நாடெங்கும் பரப்பப்பட்டனர். இந்த உளவாளிகள் உளவு வேலைகளுக்காக வெளிநாடுகளுக்குக்கூட அனுப்பப்பட்டனர். இப்படிப்பட்டதொரு சூழலில் எங்களில் சிலர் இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் மிகக் கஷ்டமான பணிகளை நிறைவேற்றச்சென்றோம்.

... தொடரும்

# எனக்கிருந்த ஒரே கைமுதல்…

- முசாபர் அகமது

-டிசம்பர் 5, 2019

…

இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப நாட்கள்

ஜனாப் குத்புதீன் வீட்டு வாசல் எங்களுக்காக எப்போதும் திறந்தே இருக்கும். பிறகு அவர் ‘லேபர் ஸ்வராஜ்’ என்ற கட்சியின் மற்றொரு

ஸ்தாபகரானார். இரண்டாவது உலகப் பெரும்போர் நடந்த காலத்தில் அவர் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார்.

குலாம் ஹுசேன் கம்யூனிஸ்ட் கட்சியை ஸ்தாபிப்பதற்காகத் தம்முடைய அரசாங்க வேலையைத் துறந்தார். பின்னர் லாகூருக்குத் திரும்பினார். அங்கிருந்து அவர் ‘இன்குலாப்’ என்ற உருது மாத இதழை ஆரம்பித்தார். பிரசித்தி பெற்ற தென்மேற்கு ரயில்வே தொழிலாளர் சங்கத்தின் செயலாளரானார்.

எங்களது இலட்சியம், இந்தியாவில் ஒரு கம்யூனிஸ்ட் கட்சியை ஸ்தாபிக்க வேண்டுமென்பதாக இருந்தது. கம்யூனிஸ்ட் அகிலத்தினால் நான் உத்வேகமூட்டப்பட்டேன் என்பதை உறுதியுடன் சொல்லுகிறேன். கல்கத்தா, பம்பாய், லாகூர் ஆகிய இடங்களை மையமாகக் கொண்டு நாங்கள் செயல்பட ஆரம்பித்தோம். 1921 -ல் பிரான்சிலும், சீனாவிலும் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்குவதற்கு முன் முயற்சி எடுத்தவர்களுடன் ஒப்பிடுகையில் எண்ணிக்கையில் நாங்கள் மிகவும் குறைவானவர்களாக இருந்தோம். மிகக் குறைந்தபட்சம் எனது திறமையின்மைபற்றி முழுவதும் உணர்ந்திருந்தேன். மார்க்சிசத்தைப் பற்றிய எனது ஞானம் ஆழமின்றி மேலோட்டமாக இருந்தது. அனுபவமில்லாத துறையில் நான் நுழைந்தபோது எனக்கிருந்த ஒரே கைமுதல், மக்களிடம் நான் பெற்றிருந்த நம்பிக்கையும், கம்யூனிஸ்ட் அகிலத்தின் வழிகாட்டுதல்களின் மீதான எனது நம்பிக்கையுமே, என்பதை நான் உணர்ந்தேன்.

என் கையில் பணமோ, ஜீவிதற்திற்கான வேறுமார்க்கமோ இல்லை. இப்படிப்பட்ட வேளையில் நான் மனமொடிந்து போகாமலிருந்ததற்கு முக்கியக் காரணம் எனது மன வலிமைதான். அந்த மனவலிமை இல்லாமலிருந்திருந்தால் இன்று முப்பத்து ஏழு ஆண்டுகளுக்குப் பின்னர் நான் எங்கு போய்ச் சேர்ந்திருப்பேன்! அதுபற்றி எண்ணும்போது நான் வியப்பில் மூழ்கிவிடுவேன்.

‘ஹிஜ்ரத்’ இயக்கம்

இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியை நிறுவுவதற்காக கல்கத்தாவில் திட்டங்களைத் தயாரித்துக் கொண்டிருந்த சமயத்தில் கவிஞர் நஸ்ருல்இஸ்லாமும் அந்தப்பணியில் கலந்து கொண்டார். எனினும், அவர் இறுதியில் கட்சியில் சேரவில்லை. ஆனால், அவர் எல்லா சமயங்களிலும் எங்கள் ஆதரவாளராக இருந்து வந்தார். பின்னர் நிறுவப்பட்ட ‘லேபர் ஸ்வராஜ்’ என்ற கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவராய் ஆனார் அவர். எனது பணிகளோடு இணைந்து முன்னேறிச் செல்ல விரும்புவதாக பயங்கரவாதப் புரட்சியாளர்கள் சிலர் என்னிடம் சொன்னார்கள். அந்த விஷயத்தில் தங்களது உதவியையும் தருவதாக அவர்கள் உறுதியளித்தனர். ஆனால், அவர்களது நிலைபாட்டிற்கு எனது நிலைபாட்டோடு ஒருமைப்பாடு இல்லையென்பது பிறகு தெளிவானது. 1922-ல் முதலில் அப்துல் ரசாக்கானும், அடுத்து அப்துல் ஹலீமும் என்னுடைய பணிகளுக்கு ஒத்துழைப்பு நல்கினர். ஒத்துழையாமை இயக்கம் நடந்த காலத்தில் ரசாக்கான் ஒருமுறையும், அப்துல் ஹலீம் மூன்று முறைகளும் சிறை தண்டனை ஏற்றனர்.

1922-ல் வேறொருவரும் எங்கள் நண்பரானார். அவர் பெயர் குத்புதீன் அகமது. ஒரு காலத்தில் ‘அல்ஹிலால், அல்பிலால்’ ஆகியவற்றை நடத்துவதில் மௌலானா அப்துல்கலாம் ஆஸாத்தின் சகஊழியராக இருந்தார் அவர். அக்காலத்தில் கல்கத்தாவில் மார்க்சிய நூல்கள் கிடைப்பது மிக மிக அரிதாக இருந்தது. அவை எங்கேனும் கிடைத்தால் கூட அவற்றை வாங்க எங்களுக்கு யாதொரு வசதியுமில்லை. ஜனாப் குத்புதீன் ஏராளமான புத்தகங்கள் வாங்குவதையும், படிப்பதையும் ஒரு வழக்கமாகக் கொண்டிருந்தார். அவரிடமிருந்துதான் நான் பில்ப்ஸ் ரைஸர் எழுதிய ‘ரஷ்யப்புரட்சி’ பற்றிய எனது நினைவுகள் என்ற நூலை வாங்கிப்படித்தேன். ரஷ்யப்புரட்சி பற்றி நான் படித்த முதல் புத்தகம் அதுதான். 18 ஷில்லிங் விலையுள்ள அந்தப்புத்தகத்தை விலை கொடுத்து வாங்க எங்களால் இயலவில்லை.

ஜனாப் குத்புதீன் வீட்டு வாசல் எங்களுக்காக எப்போதும் திறந்தே இருக்கும். பிறகு அவர் ‘லேபர் ஸ்வராஜ்’ என்ற கட்சியின் மற்றொரு ஸ்தாபகரானார். இரண்டாவது உலகப்பெரும்போர் நடந்த காலத்தில் அவர் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். 1948 பிப்ரவரி 1ஆம் தேதியன்று அவர் காலமானார். அந்தச்சமயத்தில் ஏனைய சிலரும் எங்களோடு சேர்ந்தனர். பம்பாயைப் பற்றி குறிப்பிடும் போது ஸ்ரீபாத் அமிர்த டாங்கேயின் பெயரைத்தான் முதலில் குறிப்பிட வேண்டும். கல்லூரிப்புதுமுக வகுப்பில் படிக்கும்போது மாணவர் இயக்கத்தில் கலந்து கொண்டதால் அவர் கல்லூரியிலிருந்து வெளியேற்றப்பட்டார். அவர் காந்தியத் தத்துவத்தை விரும்பாததால் 1921 லேயே “காந்தி வெர்சஸ் லெனின்” என்ற

நூலொன்றை ஆங்கிலத்தில் எழுதினார். அது அந்தக் காலத்தில் செய்ய முடியாத பெருந்தீவிரச் செயலாக இருந்தது. 1922 -ல் அவர் "சோஷலிஸ்ட்" என்ற ஆங்கில வார இதழொன்றைத் துவக்கினார். இந்தப் பெயரில் வேறொரு இதழ் முன்னெப்போதும் வந்ததில்லை. டாங்கே தொழிலாளர்களுடன் என்னைக் காட்டிலும் அதிகத் தொடர்பு வைத்திருந்தார். பம்பாயிலிருந்த மற்றவர்களைப் பற்றி நான் பிறகு சொல்கிறேன்.

குலாம் ஹுசேன் லாகூரில் செயல்பட்டுக் கொண்டிருந்தார். ஏற்கனவே அவர் ஓர் அரசாங்கக்கல்லூரியில் (பெஷாவரில் உள்ள இஸ்லாமியக் கல்லூரியில் ) பொருளியல் விரிவுரையாளராகப் பணியாற்றினார். ஹுசேன், முகமது அலியின் நண்பராக இருந்தார். ஒரு சமயம் லாகூர் மாணவர்கள் சிலர் புரட்சிப் பணிகளுக்குத் தங்களைத் தயார் செய்து கொள்ள இந்தியாவுக்கு வெளியே சென்றிருந்தார்கள் . அக்குழுவில் முகமது அலியும் ஒருவர். ரஷ்யப் புரட்சிக்குப் பின்னர் அவர் ரஷ்யாவுக்குச் சென்றார். கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். குலாம்ஹுசேனை காபூலுக்கு அழைத்தவரும், அவருக்கு மார்க்சிஸத்தின் பால் பற்று ஏற்பட வழி செய்தவரும் அவர்தான். இறுதியில் குலாம் ஹுசேன் கம்யூனிஸ்ட் கட்சியை ஸ்தாபிப்பதற்காகத் தம்முடைய அரசாங்க வேலையைத் துறந்தார். பின்னர் லாகூருக்குத் திரும்பினார். அங்கிருந்து அவர் 'இன்குலாப்' என்ற உருது மாத இதழை ஆரம்பித்தார். பிரசித்தி பெற்ற தென்மேற்கு ரயில்வே தொழிலாளர் சங்கத்தின் செயலாளரானார்.

கான்பூர் சிறையில்

1921 -ல் நான் கான்பூர் சிறையில்தான் முதலில் டாங்கேயைக் கண்டேன். எனினும், கடிதத்தின் வாயிலாக ஏற்கனவே அவருடன் தொடர்பு கொண்டிருந்தேன். ஆனால், குலாம் ஹுசேனை நான் ஒரு போதும் கண்டது இல்லை. அதுமட்டுமல்ல, கடிதத்தின் மூலம் கூட அவருடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டதில்லை. 1922-ல் சென்னையில் புகழ்பெற்ற வழக்கறிஞரான மலயாபுரம் சிங்காரவேலு, தம்மை ஒரு கம்யூனிஸ்ட் என தாமாகவே அறிவித்துக்கொண்டார். மார்க்சிஸ்ட் நூல்களைக் கொண்ட அவரது நூலகம் மிகப்பிரமாதமாக இருந்தது. அவர் தொழிலாளர் போராட்டங்களில் கலந்துகொண்டு சிறைத்தண்டனை அனுபவித்தார். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி ஸ்தாபிக்கப்பட்டது, அந்நிய நாட்டில் தான் என்பதை இங்குச் சுட்டிக்காட்டுகிறேன். 1920ஆம் ஆண்டின் நடுவில் ‘ஹிஜ்ரத்’ என்றழைக்கப்பட்ட மக்கள் மத்தியில் செல்வாக்கும், சக்தியும் கொண்ட ஓர் இயக்கம் சண்டீகரிலும் பஞ்சாபிலும் ஆரம்பமானது.

# கீழைத் தேச பல்கலை.யில் கட்சிக் கிளை…

- முசாபர் அகமது

-டிசம்பர் 6, 2019




…

இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப நாட்கள்

இந்த இளைஞர்களில் சிலர் தாஷ்கண்டிலிருக்கும் இராணுவப் பள்ளியில் சேர்ந்தனர். இந்தப்பள்ளியில் பயின்று கொண்டிருந்தபோதே அவர்கள்

மாஸ்கோவில் புதிதாக நிறுவப்பட்ட கீழைத்தேச பல்கலைக்கழகம் நீடித்திருந்தது வரை" இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஒரு கிளை அங்கு செயல்பட்டது. ஒரு சமயம் பஞ்சாபைச் சேர்ந்த நமது நைனாசிங் அந்தக்கிளையின் செயலாளராகப் பணியாற்றினார்.

இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியை அமைப்பதற்கு இந்தியாவின் பல்வேறு பிரதேசங்களிலும் இந்தியாவுக்கு வெளியிலும் நடத்திய முயற்சிகள்தாம் முதலில் சொல்லப்பட்டவை என்றாலும், 1925 டிசம்பருக்கு முன்பு கட்சியின் மத்தியக்கமிட்டி உருவாக்கப்படவில்லை.

அடக்குமுறையிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக ஒருவர் தன் நாட்டை விட்டு- தன் நண்பர்களை விட்டு - வெளி நாட்டுக்குச் செல்லுதல் என்பதே 'ஹிஜ்ரத்' என்னும் சொல்லின் பொருள். இந்த இயக்கத்தின் விளைவாக சுமார் 18 ஆயிரம் முஸ்லிம்கள் இந்தியாவை விட்டு ஆப்கானிஸ்தானுக்குச் சென்றனர். அதனால் மக்கள் ஆப்கானிஸ்தானுக்குள் நுழைவதற்கான அனுமதியை அந்நாட்டு அரசாங்கம் மறுத்தது. ஆப்கானிஸ்தான் இந்தியாவைக் காட்டிலும் பின் தங்கிய நாடாக இருந்தது. ஆப்கானிஸ்தான் அரசாங்கத்தின் இந்தப் புதிய முயற்சியை பல இளைய முகாஜிர்மார்களும், (ஹிஜ்ரத் இயக்கத்தில் சேர்ந்தவர்களும்) விரும்பவில்லை. தாங்கள் துருக்கிக்குச் சென்று யுத்தத்தில் துருக்கி பக்கம் சேரப்போவதாக அவர்கள் நிர்ப்பந்திக்க ஆரம்பித்தனர். கடைசியில் ஆப்கானிஸ்தான் அரசாங்கம் அதற்கான அனுமதியை வழங்க நிர்ப்பந்திக்கப்பட்டது.

காப்பாற்றிய செம்படை

இந்த இளைஞர்கள் இந்துகுஷ் கணவாயைக் கடந்து திர்மீஸை (இப்போது இந்தப் பிரதேசம் தாஜிகிஸ்தானில் இருக்கிறது) அடைந்தனர். அங்கிருந்து அவர்கள் படகு மூலம் அமுதாரியைக் கடக்கும் பொழுது டாக்மென் இனத்தைச் சேர்ந்த சிலர் அவர்களைத் தாக்கினர். இவர்களுக்குப் பிரிட்டிஷ்காரர்களிடமிருந்து பணமும், ஆயுதங்களும் கிடைப்பது வழக்கம். இந்தத் தாக்குதல் நடக்கும்போது செம்படை அங்கு வந்து சேர்ந்ததனால் இந்த முஸ்லிம் இளைஞர்கள் காப்பாற்றப்பட்டனர். முஸ்லிம்களான அவர்கள், முஸ்லிம்களான துருக்கியர்களால் தாக்கப்பட்டது அவர்களிடத்தில் பெரியதொரு பிரதிபலிப்பை உண்டாக்கியது. அதனால் அவர்கள் கீர்க்கில் எதிர்ப்புரட்சியாளர்களுக்கு எதிராக செம்படையுடன் ஆயுதமேந்திப் போராடினார்கள். பிறகு இந்த இளைஞர்களில் சிலர் தாஷ்கண்டிலிருக்கும் இராணுவப் பள்ளியில் சேர்ந்தனர். இந்தப் பள்ளியில் பயின்று கொண்டிருந்தபோதே அவர்கள் மாஸ்கோவில் புதிதாக நிறுவப்பட்ட கீழைத்தேச பல்கலைக்கழகம் நீடித்திருந்தது வரை” இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஒரு கிளை அங்கு செயல்பட்டது. ஒரு சமயம் பஞ்சாபைச் சேர்ந்த நமது நைனாசிங் அந்தக் கிளையின் செயலாளராகப் பணியாற்றினார்.

இந்தியாவுக்குத் திரும்புதல்

‘ஈஸ்ட்டர்ன் யுனிவர்சிட்டி’ யில் ஒன்பது மாதங்கள் படித்த பின்னர் தங்களது சொந்த நாட்டுக்கு வருவதற்கும் அங்கு இயங்குவதற்கும் இந்திய

தோழர்கள் விரும்பினர். அவர்களில் இருவர் ஈரான் நாட்டு வழியே இந்தியாவுக்குத் திரும்புவதில் வெற்றி பெற்றனர். மற்ற சிலரால் இந்தியாவுக்குத் திரும்பி வருவதற்கான சரியான வழியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அதனால், பாமீர் வழியே இந்தியாவுக்குத் திரும்புவதற்காக ஆலோசித்தனர். அதன் விளைவாக, பாமீர் வரை அவர்களைக் கொண்டு சேர்க்க பாதுகாப்புக்குழு ஒன்றைக் கம்யூனிஸ்ட் அகிலம் அனுப்பி வைத்தது. இந்தியாவுக்குட்பட்டிருந்த சித்ரால் எனும் இடம் வரை அத்தோழர்களுடன் பாதுகாப்புக் குழுவினரும் வந்து சேர்ந்தனர். அங்கு அவர்களை இந்தியப்போலீஸ் கைது செய்தது. பிறகு அவர்கள் விசாரணைக் கைதிகளாக நீண்ட காலம் வரை பெஷாவர் சிறையிலிருந்தனர்.

பெஷாவர் சதிவழக்கும் தண்டனையும்

1923ஆம் ஆண்டில் இந்த வழக்கின் தீர்ப்பு அறிவிக்கப்பட்டது. சிலருக்கு ஓராண்டு சிறையென்றும், இருவருக்கு ஈராண்டுகள் கடுஞ்சிறையென்றும், ஒருவருக்குப் பத்தாண்டுகள் சிறையென்றும் தண்டனை விதிக்கப்பட்டது. பெஷாவர் சதிவழக்குத்தான் உண்மையில் இந்தியாவில் கம்யூனிஸ்டுகள் மீதான முதலாவது சதிவழக்கு. எனினும், இந்தச் செய்தி அட்டோக்கு நதியின் இக்கரைக்கு வந்து சேரவில்லை. அக்காலத்தில் வடமேற்கு எல்லைப் பிரதேச நிலைமை அப்படி இருந்தது. பெஷாவர் வழக்குக் கைதிகளில்- பின்னர் கட்சியில் தீவிரமாகச் செயல்பட்டவர்கள் மீர்அப்துல் மஜீத், பிரோஸ்தீன் மன்சூர், கூஹார் ரஹான் கான் ஆகியோர் ஆவர். இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியை அமைப்பதற்கு இந்தியாவின்

பல்வேறு பிரதேசங்களிலும் இந்தியாவுக்கு வெளியிலும் நடத்திய முயற்சிகள்தாம் முதலில் சொல்லப்பட்டவை என்றாலும், 1925 டிசம்பருக்கு முன்பு கட்சியின் மத்தியக்கமிட்டி உருவாக்கப்படவில்லை.

கான்பூர் சதிவழக்கு

1923மே மாதத்தில் கான்பூரில் சௌகத் உஸ்மானியும் ( இவர் மாஸ்கோவிலிருந்து ஈரான் வழியாகத் திரும்பி வந்திருந்தார்) கல்கத்தாவில் நானும் கைது செய்யப்பட்டோம். சில நாட்களுக்குப்பிறகு லாகூரில் குலாம் ஹுசேனும் கைது செய்யப்பட்டார். வங்காளச் சிறைச்சட்டம் 1818-ன் படி (1818வது ரெகுலேஷன் 111) எங்கள் மூவரையும் விசாரணையின்றி வெவ்வேறு சிறைகளில் அடைத்தனர். 1923 -ஆம் ஆண்டு டிசம்பரில் நளினி குப்தாவையும் கைது செய்து விசாரணையில்லாமல் சிறையிலிட்டனர். அவர் எந்த ஒரு கட்சியிலும் உறுப்பினராக இருக்கவில்லை. என்றாலும், அவர் தம்மை ஒரு தேசியப் புரட்சிவாதியென்று அறிவித்துக் கொண்டார். அதிதீவிர செயல்கள் மீது தாம் வைத்திருந்த பற்றின் காரணமாக, அவர் ஐரோப்பாவுக்கும், இந்தியாவுக்கும் இடையே எங்களது செய்தித் தொடர்பாளராகப் பணியாற்றினார்.

இந்தியன் பீனல்கோடு, 121 ஏ பிரிவின்படி இந்திய அரசாங்கத்திற்காக கான்பூர் மாவட்ட மாஜிஸ்டிரேட் நீதிமன்றத்தில் 1924 மார்ச் மாதத்தில் ஒரு குற்றப்பத்திரிக்கை தாக்கல் செய்யப்பட்டது. இந்த வழக்கின் பிரதிவாதிகளாக- 1.எஸ்.ஏ.டாங்கே, 2. சௌகத் உஸ்மானி, 3. முசாபர்

அகமது, 4.நளினிகுப்தா, 5.குலாம்ஹுசேன், 6.சிங்காரவேலர், 7.ராமச்சந்திரலால் சர்மா, 8. மனபேந்திர நாத்ராய் (எம்.என்.ராய்) ஆகியோர் இருந்தனர். ஆரம்பத்தில் நால்வர் மட்டுமே நீதிமன்றத்தில் ஆஜராக்கப்பட்டனர். சிங்காரவேலர் கடுமையான நோயினால் பாதிக்கப்பட்டிருந்ததால் அவரை நீதிமன்றத்துக்கு கொண்டு வரவில்லை. அவர் ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டார். குலாம் ஹுசேன் தமது குற்றத்தை ஒப்புக்கொண்டார். ராமச்சந்திரலால் சர்மா பாண்டிச்சேரியில் இருந்ததனால், அவர் பிரெஞ்சு அரசாங்கத்தின் பாதுகாப்பிலிருந்தார். அதனால், அவரை நீதிமன்றத்துக்கு கொண்டுவர முடியவில்லை. எம்.என்.ராய் ஐரோப்பாவில் இருந்தார். அதனால், அவரை நீதிமன்றத்துக்கு கொண்டுவருவதென்ற பிரச்சனையே எழவில்லை.

... தொடரும்

# 172 பேரை தூக்கிலிட தீர்ப்பளித்த நீதிபதி…

- முசாபர் அகமது

-டிசம்பர் 7, 2019

…

இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப நாட்கள் - ..நேற்றைய தொடர்ச்சி

மத்திய இரகசிய புலனாய்வுத் துறையின் இயக்குநர் கர்னல் கேயின் வேண்டுகோளின்படி பத்திரிகைகள் இந்த வழக்கை கான்பூர் போல்ஷெவிக் சதிவழக்கு என்று விசேடமாகக் குறிப்பிட்டன. இதன் மூலம் சோவியத் எதிர்ப்புப் பிரச்சாரத் தேவைக்காக சோவியத் ரஷ்யாவையும் உட்படுத்துவதென கேய் கருதினார். இந்த வழக்கு நடந்து கொண்டிருந்தபோது, ஒருவரை அடிக்கடி பார்வையாளர் காலரியில் கண்டேன். அவரது பெயர் சத்யபக்தா. அது எவ்விதத்தில் பார்த்தாலும் அவரது தாய் - தந்தையர் இட்டபெயராக இல்லை. காந்தியின் சபர்மதி ஆஸ்ரமத்தில் இருக்கும் போது அவர் தமக்கு வைத்துக் கொண்ட பெயரே இது. ஒருவேளை, அங்கு அவருக்கு சத்தியத்துடன் ஏராளமாக பரிசோதனைகள் நடந்திருக்க வேண்டும்.

இந்த வழக்கு பிறகு செஷன்ஸ் கோர்ட்டுக்கு மாற்றப்பட்டது. நீதிபதி ஒவ்வொருவருக்கும் 4 ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை விதித்தார். இந்த நீதிபதி எச்.எல்.ஹோமே ஒரு பிரசித்தி பெற்ற நபர். இவர்தான் பிரசித்தி பெற்ற சௌரிசௌரா வழக்கில் 172 பேரைத் தூக்கிலிட்டுக் கொல்ல தீர்ப்பளித்தார். வெவ்வெறான நான்கு சிறைகளுக்கு மாற்றப்பட்டுக் கொண்டிருந்த எங்களது கழுத்திலும், காலிலும் இரும்புச் சங்கிலிகள் பிணைக்கப்பட்டிருந்தன. அக்காலத்தில் உத்தரப்பிரதேசச் சிறைகளில் அப்படிச் செய்வதுதான் வழக்கமாக இருந்தது. புற உலகிலிருந்து எங்களை முற்றிலும் தனிமைப்படுத்தினர். ஒரு பக்கத்தில் இப்படியிருக்க, மறு பக்கத்தில் முதலில் சொல்லப்பட்ட சத்யபக்தா

என்பவர் தாம் ஒரு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கியிருப்பதாகப் பத்திரிகைகளில் அறிவித்தார்.

ஒரு தடவை ராய்பரேலி மாவட்டச் சிறையில் நான் இரத்த வாந்தி எடுத்தேன். சரியான உணவு தேவையான அளவு கிடைக்காததினாலும் தங்கும் வசதி மோசமாக இருந்ததனாலும் ஏற்பட்ட ஆரோக்கியச் சீர்குலைவே இதற்குக் காரணம். சிறையிலிருக்கும் சிவில் சர்ஜன் என் உடல்நிலையைப் பற்றிக் குறிப்பிடும்போது என் உடல்நிலை சிறிதும் மோசமில்லை என்று சொன்னாலும் நான் படிப்படியாக பலவீனமடைந்தே வந்தேன். கடுங்குளிரில் வாடுவதினால் எனக்கு மிக அதிகம் தூக்கம் குறைந்து போனது. இந்த நிலையிலிருந்த என்னை அல்மோரா மாவட்டச் சிறைக்கு மாற்றினர். விடுதலைக்காலம் முடிவதற்கு முன்னரே உடல்நிலை மோசமான காரணத்தால் இந்திய அரசாங்க உத்தரவுப்படி 1925ஆம் ஆண்டு செப்டம்பரில் என்னை விடுதலை செய்தனர்.

கான்பூர் மாநாட்டில் கலந்து கொள்ள அழைப்பு

சத்யபக்தாவின் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை நான் அங்கு பத்திரிகையில் முதன்முதலில் படித்தறிந்தேன். டிசம்பர் கடைசி வாரத்தில் கான்பூரில் ஒரு கம்யூனிஸ்ட் மாநாடு நடக்கவிருக்கிறதென்பதையும் பத்திரிகைகளில் படித்தேன். மாநாட்டில் தலைமை வகிப்பதற்காக, லண்டனிலிருக்கும் சபூர்ஜிசக்லத்வாலாவைக் கேட்டுக்கொண்டனர். முதலில் மாநாட்டில் கலந்துகொள்ள ஒப்புக்கொண்டதாகவும், கடைசியில் பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சி அவருக்கு அதற்கான அனுமதியை வழங்க மறுத்து

விட்டதாகவும் சொல்லப்பட்டது. அல்மோராவில் இருந்த எனக்கு சத்யபக்தா ஒரு கடிதம் அனுப்பினார். சிறையிலிருந்து விடுதலையான என்னை அதில் வாழ்த்தியிருந்தார். கான்பூர் மாநாட்டில் கலந்துகொள்ள வேண்மெனவும் என்னை அவர் தமது கடிதத்தில் அழைத்திருந்தார்.

தன்னம்பிக்கை

உடல்நலமடைந்திருந்தேன். அதுமட்டுமன்றி, அல்மோராவில் தட்பவெப்ப நிலை டிசம்பர் கடைசியில் தண்ணீரைப் பனிக்கட்டியாக்கும் நிலையையும் அடைந்திருந்தது. அப்படிப்பட்டதொரு நிலையில் எப்படியாவது கல்கத்தாவுக்குத் திரும்ப வேண்டிய அவசியமிருந்தது. கான்பூரை அடைந்தபோது அங்கு எஸ்.வி.காட்டே, கே.எல்.ஜோக்லேகர், ஆர்.எஸ்.நிம்ப்கர் ஆகியோர் முன்கூட்டியே வந்திருந்ததைக் கண்டேன் அவர்களைக் கண்டபோது எனக்குத் தன்னம்பிக்கை கிட்டத்தட்ட மீண்டும் கிடைத்தது. எப்படியெனில், சிறையில் இருந்தபோது இந்த மூவரைப் பற்றியும் டாங்கேயிடமிருந்து தெரிந்துகொண்டேன். கான்பூரில் அயோத்யாபிரசாத் ஜானகி பிரசாத், பாகர்ஹட்டா முதலிய ஏனைய சிலரையும் நான் முதல்முதலாக தெரிந்து கொண்டேன்.

கான்பூர் மாநாடு

கான்பூர் மாநாட்டின் வரவேற்புக்குழுத் தலைவராக மௌலானாஹஸ்ரத் மொகானியும், முக்கியத் தலைவராகச் சிங்காரவேலரும் இருந்தனர். (எங்களுக்கு எதிராகத் தீர்ப்பு வழங்கப்பட்ட பிறகு, சிங்காரவேலர் கான்பூர் நீதிமன்றத்தில் ஆஜரான போதிலும், அவருக்கு எதிரான குற்றச்சாட்டின்

அடிப்படையில் வழக்கைத் தொடர்ந்து நடத்துவதற்கு இந்திய அரசாங்கம் விரும்பவில்லை. உண்மையில் அவருக்கு எதிராக அதிகமான சான்றுகள் இல்லை).

கருத்து மோதல்

மாநாட்டின் ஆரம்பத்திலேயே எங்களது கருத்து, சத்யபக்தாவின் கருத்தோடு மோதியது. கம்யூனிஸ்ட் அகிலத்தின் வழக்கப்படி கட்சியின் பெயர் "கம்யூனிஸ்ட் பார்ட்டி ஆஃப் இந்தியா" என இருக்க வேண்டுமென்று நாங்கள் கருதினோம். சத்யபக்தாவோ தனக்குச் சர்வ தேசியத்தில் நம்பிக்கை இல்லை என்பதைத் தெரிவித்தார். தம்முடைய கட்சி இந்தியத்தன்மையைக் கொண்டதாக இருக்க வேண்டுமென்பது அவரது கருத்து. நாங்கள் எங்கள் கருத்தில் ஊன்றி நின்றோம். சத்யபக்தா தம்முடைய காகிதங்களையும், ஃபைல்களையும் விட்டுவிட்டு மாநாட்டு இடத்தை விட்டே போய்விட்டார். அவர் தமது கட்சியில் 300க்கு மேலான உறுப்பினர்கள் இருப்பதாகச்சொன்னார். இவர்கள் யார் யார் என்பதை எங்களால் ஒருபோதும் அறியமுடியவில்லை. மாநாட்டுக்குப் பிறகுநான் ஒருபோதும் சத்யபக்தாவைக் காணவில்லை. ஒருமுறை பம்பாயில் அவரை எஸ்.வி.காட்டே கண்டதாகக் கேள்விப்பட்டேன். தான் அரசியலிலிருந்து விலகிவிட்டதாக காட்டேயிடம் சத்யபக்தா சொன்னாராம்.

… தொடரும்

# தலைவராக மலர்ந்த இளைஞர் பி.சி.ஜோஷி

- முசாபர் அகமது

-டிசம்பர் 9, 2019



…

1927-ஆம் ஆண்டின் துவக்கத்திலேயே பம்பாயிலும் தொழிலாளர்கள் விவசாயிகள் கட்சி உருவாக்கப்பட்டு விட்டது. எஸ்.எஸ்.மிராஜ்கர். கட்சியின் செயலாளராக இருந்தார். அந்த ஆண்டில் நடந்த அகில இந்தியத்

தொழிற்சங்க மாநாட்டில் பஞ்சாப்பைச் சேர்ந்த சோகன்சிங்ஜோஷ், பாக்சிங் கனேடியன் ஆகியோருடன் எங்களுக்கு ஆரம்பப்பழக்கம் ஏற்பட்டது. அந்தச் சமயத்தில் சோகன்சிங் 'கீர்த்தி' என்ற ஒரு மாத இதழுக்கு ஆசிரியராக இருந்தார். குருமுகி லிபியில் பஞ்சாபி மொழியில் அந்த இதழ் வெளிவந்துகொண்டிருந்தது. மாஸ்கோவில் உள்ள 'கிழக்கத்திய உழைப்பாளர் பல்கலைக்கழக' கத்திலிருந்து திரும்பி வந்த சந்தோக்சிக் என்பவர் இந்த இதழின் ஸ்தாபகர். அவர் தொழுநோயால் பாதிக்கப்பட்டு, கஷ்டப்பட்டு இறுதியில் அந்த நோயினாலேயே மரணம் அடைந்தார். அவருடனோ அப்துல் மஜீத்துடனோ எங்களுக்குப் பழக்கம் ஏற்பட்டிருக்கவில்லை. 1924-ல் சிறையிலிருந்து விடுதலையான பிறகு அவர் லாகூரில் தம்முடைய பணியை ஆரம்பித்தார். பஞ்சாபில் பிரபல நவஜவான்பாரத்சபையின் ஸ்தாபகர்களாக இருந்த மிகச்சிலருள் ஒருவராக அப்துல்மஜீத் இருந்தார். சோகன் சிங்குடன் நாங்கள் சில விவாதங்கள் நடத்தினோம். சம்பந்தப்பட்ட விவாதங்களின் பலனாக 1927-ல் பஞ்சாபில் கீர்த்தி - கிஸான் எனும் கட்சி உருவாக்கப்பட்டது. பஞ்சாபிலும் தொழிற்சங்கப் பணிகள் பரவிக் கொண்டிருந்தன என்பதைச் சொல்லத் தேவையில்லையல்லவா?

விவசாயிகள் - தொழிலாளர்கள் கட்சி

மீரத்தில் நடைபெற்ற மாநாட்டிற்கு அழைக்கப்பட்டதையொட்டி நானும் பிலிப் ஸ்ப்ராட்டும் 1928 அக்டோபரில் மாநாட்டுக்குச் சென்றோம். அப்துல்மஜீத், சோகன்சிங்ஜோஷ், பூரணசந்திரஜோஷி (பி.சி.ஜோஷி) ஆகியோரும் இந்த மாநாட்டில் கலந்து கொண்டனர். எம்.ஏ.பட்டம் பெற்ற

பிறகு அச்சமயத்தில் அலகாபாத்தில் உள்ள சட்டக்கல்லூரியில் பி.சி.ஜோஷி படித்துக் கொண்டிருந்தார். கடிதங்கள் மூலம் அவருடன் தொடர்பு கொள்ள என்னால் முடிந்தது. மீரத் மாநாட்டில் தான் நான் அவரை முதன்முதலில் கண்டேன். மீரத் மாநாட்டில் உத்தரப்பிரதேசத்திற்கும் தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சி உருவாக்கப்பட்டது. அதன் செயலாளராக பி.சி.ஜோஷி தேர்ந்தெடுக்கப்பட்டார். டிசம்பர் மாதக் கடைசி வாரத்தில் தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சியின் அகில இந்திய மாநாட்டைக் கல்கத்தாவில் நடத்தவேண்டுமெனவும், பல்வேறு மாநிலங்களில் செயல்பட்டுவரும் கட்சிகளை ஒன்றுசேர்த்து ஓர் அகில இந்திய தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சியை உருவாக்க வேண்டுமெனவும் - மாநாடு நடப்பதற்கு முன்னரே நாங்கள் முடிவு செய்திருந்தோம். அதற்குப் பின்னர் மாநாடு நடத்தி, அகில இந்தியக் கட்சி உருவாக்கப்பட்டது. சோகன் சிங்ஜோஷ் மாநாட்டின் தலைவராக இருந்தார். இந்த மாநாட்டின் சமயத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்கமிட்டி இரண்டு முறைகள் கூடியது. ஒரு கூட்டம் மாநாடு நடந்து கொண்டிருந்த போது நடந்தது. மற்றொரு கூட்டம் 1929 ஜனவரியின் ஆரம்பத்தில் - அதாவது மாநாட்டின் கடைசியில் கூடியது. இரண்டாவது கூட்டத்தில் எனது பரிந்துரையின் பேரில் பி.சி.ஜோஷியும், சோகன் சிங்ஜோஷும் கட்சியில் சேர்க்கப்பட்டனர். பஞ்சாப்பைச் சேர்ந்த சீக்கியர் மத்தியிலிருந்து முதலாவதாக அதிகாரப் பூர்வமாக கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தவர் சோகன்சிங் ஜோஷ்தான். சந்தோக்சிங்கை கட்சியின் உறுப்பினராக மதிப்பிடுவதென்றால் சோகன்சிங்குக்கு இரண்டாவது இடம்தான் கிடைக்கும். பி.சி.ஜோஷியின் பெயரை ஓரிடத்திலும் எழுதக்கூடாதென்று

தீர்மானிக்கப்பட்டது. 1927- 28-ல் குறிப்பாக 1928-ல் நடந்த தொழிலாளர் போராட்டத்திற்குப்பிறகு அடக்குமுறையின் ஆபத்து உருவாகுமென்பது எங்களுக்கு தோன்றியது. அதனால் இளைஞரான பி.சி.ஜோஷியைப் பாதுகாப்பதற்காக அவரைப் பொறுத்தளவில் முதலில் சொல்லப்பட்டவாறு தீர்மானித்தோம். ஆனால் நாங்கள் எண்ணியவாறு அவரைப்பாதுகாக்க முடியவில்லை. கல்கத்தாவில் தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சியின் மாநாடு நடந்துகொண்டிருந்தபோது, தோழர் கங்காதர் அதிகாரி ஜெர்மனியிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பினார். ஆறு ஆண்டு காலம் வரை அவர் ஜெர்மனியிலிருந்தார். பெர்லின் பல்கலைக்கழகத்தில் பௌதீக இரசாயனத் துறையில் டாக்டர் பட்டம் பெற்றபின் டாக்டர் அதிகாரி, கொஞ்சகாலம் அங்கு பணிசெய்தார். அவர் ஜெர்மனியில் கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினராக இருந்ததால் இங்குள்ள கம்யூனிஸ்ட் கட்சியிலும் அவரை உறுப்பினராக சேர்த்துக்கொண்டோம். மத்தியக்கமிட்டி தான் இதற்கான முடிவு செய்தது. அதுவரை இந்தியாவிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சி, கம்யூனிஸ்ட் அகிலத்துடன் அதிகாரப்பூர்வமாக இணைக்கப்படவில்லை. நாங்கள் விரும்பியிருந்தால் அது நடந்திருக்கும். கட்சி உறுப்பினர்கள் மிகக் குறைவானவர்களாக இருந்ததால் நாங்கள் அதற்குத் திட்டமிடவேயில்லை. எனினும் கம்யூனிஸ்ட் அகிலமானது தனது ஓர் அங்கம் என்ற நிலையில் எங்களுக்கு அங்கீகாரம் வழங்கியது. கம்யூனிஸ்ட் அகிலத்தின் ஆறாவது காங்கிரஸின் நிர்வாகக் குழுக்கூட்டத்தில் எங்கள் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்கள் இருவரை நிர்வாகக் குழுவுக்கு மாற்றுப் பிரதிநிதிகளாத் தேர்ந்தெடுத்தார்கள் என்பதை அறிந்தோம். எங்களது மத்தியக் கமிட்டிக் கூட்டமும் இந்தப் பிரச்சனை

குறித்து விவாதித்து இந்தப்பிரதிநிதிகள் இருவரில் ஒருவரை கம்யூனிஸ்ட் அகிலத்தின் நிர்வாகக்குழுவுக்கு அனுப்புவதென மத்தியக்கமிட்டி முடிவு செய்தது. ஆனால் இதைச் செய்வதற்கு முன்பே மீரத் சம்பவங்கள் எங்கள் மீது வந்து விழுந்தன.

கம்யூனிஸ்ட் அகிலத்தின் விமர்சனம்

தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சியின் மாநாட்டிற்கு கம்யூனிஸ்ட் அகிலத்தின் நிர்வாகக்குழு ஒரு செய்தி அனுப்பியது. மாநாட்டின் ஆரம்பத்தில் இந்தச்செய்தி எங்களுக்குக் கிடைத்தது. செய்தியின் ஆரம்பத்திலேயே தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சி கம்யூனிஸ்ட் அகிலத்தின் ஒரு பகுதி அல்லவென்பது தெளிவாக விளக்கப்பட்டிருந்தது. இரண்டு வர்க்கங்களின் அடிப்படையில் ஒரு கட்சியை உருவாக்குவதற்கு எதிரான விமர்சனமும் அதில் இருந்தது. அதனால் ஒரே வர்க்கத்தின் அடிப்படையில் ஒரு அரசியல் கட்சியை உருவாக்க வேண்டியதிருந்தது. அந்தச் சமயத்தில் இது குறித்து ஏதாவது விவாதிப்பதற்கு எங்களால் முடியவில்லை. ஏனெனில், கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டிக் கூட்டம் அப்போதுதான் நடந்து முடிந்து விட்டிருந்தது. எனினும் தனிப்பட்ட அளவில் எங்களில் பெரும்பாலானவர்க்கும் இந்த விமர்சனத்தின் பிரதான உள்ளடக்கம் என்னவென்பது புரிந்தது.

# புரட்சி நீடுழி வாழ்க... முதல்முறையாக முழக்கம்

- முசாபர் அகமது

-டிசம்பர் 10, 2019




…

இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப நாட்கள் -..நேற்றைய தொடர்ச்சி

1927ஆம் ஆண்டின் இறுதியில் இந்தியாவில் பல பகுதிகளிலும் தொழிலாளர்களின் போராட்டங்கள் துவங்கின. 1928-ல் இந்தப் போராட்டம் வலிமை பெற்று விரிந்தளவில் பற்றிப் படர்ந்தது. கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள் மட்டுமல்லர், தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சியின் உறுப்பினர்களும் பரந்த அளவில் உணர்வுப்பூர்வமாக இந்தப் போராட்டத்தில் பங்கேற்றனர். வேலை நிறுத்தக் கூட்டங்களில் பொருளாதாரப் பிரச்சனைகளைப் பற்றி மட்டுமல்ல, அரசியல் பிரச்சனைகளைப் பற்றியும் சொற்பொழிவுகள் நடந்தன. பம்பாயிலும், வங்கத்தில் சில இடங்களிலும் தொழிலாளர் மத்தியில் நமது தலைமை வலிமைப்படுத்தப்பட்டது. 1928-ல் தொழிலாளர் போராட்டங்களின் விளைவினால் தொழிற்சங்க இயக்கம் போராட்ட வலிமை படைத்த புதியதொரு வடிவத்தைப் பெற்றது. இந்த இயக்கத்தின் தன்மை முற்றிலும் புதியதாக இருந்தது. 1928-ல் தொழிலாளர் வர்க்கப் போராட்டத்தின் வழியாக இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியை ஒரு வலிமை கொண்ட கட்சியாக ஆக்குவதற்கு ஏற்றதொரு மகத்தான சந்தர்ப்பம் கிட்டியது. தொழிலாளர்களிடையே இருந்த புரட்சிகரமான ஒரு பகுதியினர் கட்சியில் சேருவதற்கு இச்சந்தர்ப்பம் இடமளித்தது.

## முதல் முழக்கம்

1928-ல் நடந்த போராட்டத்திற்கு உழைக்கும் மக்களிடையில் பொதுவாக செல்வாக்கைப் பெறவும் முடிந்தது. அவர்களில் ஏராளமானவர்கள் கட்சிக்கு வருவதற்குத்தயாராயினர். ஆனால் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம், எங்களைக் கடுமையாகத் தாக்குவதற்காக தனது ஆயுதங்களை கூர்மையாக்கிக் கொண்டிருந்தது. சட்டமன்றத்தில் பொதுப் பாதுகாப்புச் சட்டம் வந்தபோது அதன் உட்பொருள்

எங்களுக்குப் புரிந்தது. அந்தக் காலத்தில் தலைமறைவாகச் செயல்படுவதற்கு தேவையான யாதொரு ஏற்பாடும் எங்களிடம் இருக்கவில்லை. இக்காலத்தில்தான் பம்பாயில் எஸ்.வி. தேஷ்பாண்டேயும் பி.டி.ரணதிவேயும் கட்சியில் சேர்க்கப்பட்டனர். பி.டி.ரணதிவே பல்கலைக்கழகத்தில் பெயர்பெற்ற மாணவராய்விளங்கினார். அவருக்கு எம்ஏ. பொருளியலில் முதல் மார்க் கிடைத்தது. டாக்டர் கங்காதர் அதிகாரி, அவரது சிற்றன்னை மகன் ஆவார். டாக்டர் அதிகாரியிடமிருந்து உத்வேகம் பெற்ற ரணதிவே கம்யூனிஸ்ட் கட்சிக்கு கவரப்பட்டார்.

1929 பிப்ரவரியில் சைமன் கமிஷனுக்கு எதிராகப் பெரியதொரு ஊர்வலம் நடத்துவதற்கு நாங்கள் கல்கத்தாவில் இந்திய தேசியக்காங்கிரசுடன் கூட்டுச் சேர்ந்தோம். எங்கள் சார்பாக பலவகை முழக்கங்களைக் கொண்ட அட்டைகள் ஊர்வலத்தில் தாங்கி வரப்பட்டன. இதுதான் அந்த ஊர்வலத்தில் இருந்த ஒரு சிறப்பு. ‘புரட்சி நீடூழி வாழ்க!’ இந்த முழக்கத்தைத்தான் அந்த ஊர்வலத்தில் நாங்கள் முதன் முறையாக ஒலித்தோம். இதற்குப் பிறகு கல்கத்தாவில் எங்களது கடைசி இயக்கம் கிளைவ் சணல் ஆலையில் நடத்திய வேலை நிறுத்தம்தான். திடீரென மறக்க முடியாத 1929 மார்ச் 20 வந்து சேர்ந்தது.

மீரத் சதிவழக்கு

உண்மையில் இந்தியக்கம்யூனிஸ்ட் கட்சியின் வாழ்க்கையில் மறக்க முடியாத ஒரு நாள் 1929 மார்ச் 20. பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து நாங்கள் எதிர்நோக்கியிருந்த ஆபத்தான தாக்குதல் முடிவில் வந்து சேர்ந்தது அன்றுதான். அன்றைய தினம் மீரத்தில் உள்ள மாவட்ட மாஜிஸ்திரேட்டின் வாரண்டின்படி இந்தியாவிலுள்ள பல்வேறு பகுதிகளிலிருந்தும் 31 பேர்கள் கைது செய்யப்பட்டனர். அவர்களில்

பெஞ்சமின், ப்ரான்சிஸ், பிராட்லியையும், பிலிப் ஸ்ப்ராட்டுவும் பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்கள். அவர்கள் கம்யூனிஸ்ட் அகிலத்தின் கட்டளைப்படி எங்களுக்கு உதவி செய்ய வந்தவர்கள்.

முசாபர் அகமது, சாஸூல்ஹுடா, அயோத்யா பிரசாத், சோஹன் சிங்ஜோஷ், மீர் அப்துல் மஜீத், பூரணசந்திர ஜோஷி, ஸ்ரீபாத் அமிர்த டாங்கே, சச்சிதானந்த விஷ்ணு காட்டே, கேசவுநில் ஜோகலேகர், சாந்தாராம் சவலா ராமமிராஜ்கர், ரகுநாத் சிவராம்நிம்ப்கர், காங்காதர் மொரேஸ்வார் அதிகாரி, சௌகத் உஸ்மானி ஆகியோர் இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்களாக இருந்தனர். பிரதிவாதிகளின் பட்டியலில் கடைசியாக மேலும் இருவர் சேர்க்கப்பட்டனர். அவர்களில் எச்.எல்.ஹச்சின்ஸன் என்பவரும் ஒருவர். இவர் எந்தவொரு கட்சியிலும் உறுப்பினராய் இருக்கவில்லை. அமீர் ஹைதர்கான் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினராய் இருந்தார். அவரைக் கைது செய்ய முடியவில்லை.

கைது செய்யப்படுவதற்கு முன்னர் ராதாரமன் மித்ரா தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சியில் சேருவதென்ற தமது ஆவலைத் தெரிவித்திருந்தார். சிபநாத் பானர்ஜியும், கிஷோரிலால் கோஷும் யாதொரு கட்சியிலும் உறுப்பினராக இருக்கவில்லை. எனினும் அவர்கள் எங்களது ஒரு நல்ல நண்பராக இருந்தனர். ஏனைய பிரதிவாதிகள் தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சியில் அங்கத்தினராயிருந்தனர்.

வழக்கு நடந்து கொண்டிருந்த சமயத்தில், ஓர் அறிக்கை வெளியிடுவதற்கான வாய்ப்பு பிரதிவாதிகளுக்குக் கிடைத்தது. தருகின்ற

அறிக்கையானது, இந்தியாவில் உள்ள கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கைகளையும் திட்டங்களையும் நாடெங்கும் பரப்புவதற்கு ஏற்ற வகையிலுள்ள ஓர் அறிக்கையாக இருக்க வேண்டுமெனத் தீர்மானித்திருந்தோம். நீதிமன்றத்தில் வழக்கு நடந்து கொண்டிருக்கையில் ஒவ்வொரு பிரதிவாதியும் ஒவ்வொரு அறிக்கையைத் தந்தனர். கம்யூனிஸ்டுகள், முன்னரே நிச்சயித்தபடி அறிக்கைகள் தந்தனர். தனித்தனியாக அறிக்கைகள் தருவதற்குப் பதிலாக அவர்கள் ஒரு கூட்டறிக்கையாகத் தந்தனர். நமது கட்சி உறுப்பினர்கள் இந்த அறிக்கையை வாசித்தார்களென்றால் - குறிப்பாக கூட்டறிக்கையை வாசித்தார்களென்றால் அவர்களுக்குப் பயனளிப்பதாக இருக்கும். கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்கள் ஒவ்வொரு வரும் தாங்கள் கட்சியின் உறுப்பினர்கள் தான் என்பதை நீதிமன்றத்தில் ஒப்புக்கொண்டனர்.

... தொடரும்

# மீரட் சதி வழக்கு 10 ஆயிரம் பக்கங்கள்…

- முசாபர் அகமது

-டிசம்பர் 11, 2019




…

இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப நாட்கள் - ..நேற்றைய தொடர்ச்சி

மீரட் சதிவழக்கின் கால கட்டத்திலிருந்து தான், கம்யூனிஸ்ட் கொள்கையும், கருத்தும் இந்தியாவில் உறுதிப்படுத்தப் பட்டன. 1932-ஆம் ஆண்டின் கடைசியில் பிலிப்ஸ்பிராட்டுக்கும், பென்பிராட்டிலிக்கும் எனக்கும் கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு அறிக்கைகள் அனுப்புவதற்கான வாய்ப்புக் கிடைத்தது. இந்த அறிக்கைகள் பயனளிப்பவையாக இருந்தன.

தரணிகாந்த் கோஸ்வாமி, கோபேந்திர கிருஷ்ண சக்கரவர்த்தி, கோபால் பாசக் ராதாரமன் மித்ரா ஆகியோர் மனச்சாட்சிப்படி தாங்கள் கம்யூனிஸ்டுகள்தான் என்பதை அறிவித்தனர். கட்சியின் ஆலோசனைப்படி பி.சி.ஜோஷியும் அத்தகையதொரு அறிக்கையை அளித்தார். அவ்வாறு அவர் அறிவிக்கக் காரணம், அவர் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியில் ஓர் உறுப்பினர்தான் என்பதற்கு எவ்விடத்திலும் யாதொரு சான்றும் இருந்ததில்லை. சௌத்ரிதரம்பீர்சிங், மாஜிஸ்திரேட் நீதிமன்றம் மூலம் விடுதலை செய்யப்பட்டார். சிவநாத் பானர்ஜியும், கிஷோரிலால் கோஷூம் செஷன்ஸ் நீதிமன்றம் மூலம் விடுதலையாயினர். எஞ்சியவர்களில் சிலரை ஆயுள்காலம் முழுவதும் நாடுகடத்துவதற்கும், மற்ற சிலரை 12 ஆண்டுகள், 10 ஆண்டுகள் 7 ஆண்டுகள், 5 ஆண்டுகள், 4 ஆண்டுகள் என சிறைத் தண்டனை அனுபவிக்கவும் நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

செஷன்ஸ்கோர்ட் தீர்ப்பு அறிவிப்பதற்கு முன்பு, 68 வயதான பழைய இஞ்சினியர் பண்டிராஜ் தேஜ்டி காலமானார். ஜாமீனில் விடுதலை செய்யப்பட்ட அவர் புனாவுக்குச் சென்றிருந்தார்.அவர் பம்பாயில் உள்ள தொழிலாளர்கள் - விவசாயிகள் கட்சியின் தலைவராக இருந்தார். வழக்கு

செஷன்ஸ் நீதிமன்றத்தில் ‘கமிட்’ செய்யப்பட்ட பின்னர் அரசாங்கத் தரப்பு வக்கீல் லாங்போர்ட் ஜேம்ஸ் காலமானார்.

உலகத்தின் மிகப்பெரிய வழக்குகளில் ஒன்று

1929மார்ச் 20ஆம் தேதிதான் நாங்கள் கைது செய்யப்பட்டோம். 1933 ஜனவரி 16ஆம் தேதியன்று செஷன்ஸ் நீதிபதி தீர்ப்பை வாசித்தார். இந்த வழக்கிற்காக அச்சிடப்பட்ட காகிதங்கள் பத்தாயிரம் முழுப்பக்கங்கள் வரும். மீரத் சதிவழக்கு என்பது உலகத்தின் மிகப் பெரிய வழக்குகளில் ஒன்றாயிருந்தது. ஆயுள் காலம் முழுவதும் நாடு கடத்தலும், ஆண்டுகள் பலவாக கடுஞ்சிறையும் கிடைத்தன. மீரட் சதிவழக்கின் கால கட்டத்திலிருந்துதான், கம்யூனிஸ்ட் கொள்கையும், கருத்தும் இந்தியாவில் உறுதிப்படுத்தப்பட்டன.

வங்காளச் சிறைகளிலும், தனிமைச் சிறைகளிலும் நூற்றுக்கணக்கான அரசியல் கைதிகள் மார்க்சிய நூல்களைப் படிக்க ஆரம்பித்தனர். சிறையிலிருந்து விடுதலை ஆன பிறகு அவர்களில் பலர் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தனர். 1929-ல் எங்கள் மீதான வழக்குகள் ஆரம்பமானதற்குப் பிறகு ஐரோப்பிய கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து எம்.என்.ராய் வெளியேற்றப்பட்டார். ஒரு சமயம் அவர் கம்யூனிஸ்ட் அகிலத்தின் கிழக்குப்பிரிவின் தலைவராக இருந்தார். அவரைக் கட்சியிலிருந்து வெளியேற்றியதற்கான காரணம் என்னவென்பது எங்களுக்குத்தெரியவில்லை. எனினும் அவரது நடவடிக்கையில் எனக்கு ஆட்சேபனை இருந்தது. அவரை வெளியேற்றியதற்கான காரணங்களில்

ஒன்றாக எனது ஆட்சேபனையும் இருக்குமோ என்பது பற்றிய விவரம் கிடைப்பதற்கு எனக்கு எவ்வித சந்தர்ப்பமும் கிடைக்கவில்லை.

கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்ட பிறகு அவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்து ஏதாவது ஒருசெயலில் ஈடுபடுவார் என்று நாங்கள் கருதியிருந்தோம். உண்மையில் அவர் அவ்வாறே செய்தார். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கும் 'புரட்சிக் குழு' என்பதன் பேரில் அவர் இரகசியக் குறிப்புக்களை விநியோகிக்க ஆரம்பித்தார்.

மீரட் சதி வழக்கிற்குப் பிறகு

1930-ல் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி கம்யூனிஸ்ட் அகிலத்துடன் இணைக்கப்பட்டது. அதற்குப் பின்னர், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கும் 'புரட்சிக் குழு'வின் பேரில் துண்டுப் பிரசுரங்கள் விநியோகிக்கப்படுவதை எம்.என்.ராய் நிறுத்திக் கொண்டார். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிக்கு கம்யூனிஸ்ட் அகிலத்தில் இணைப்புக்கிடைத்த சமயத்தில்தான் இந்தோ - சீனாவிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சியும் கம்யூனிஸ்ட் அகிலத்தில் இணைக்கப்பட்டது. அந்தச்சமயத்தில் தான் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலுக்கான நகல் திட்டம் பிரசுரிக்கப்பட்டது. 1930 டிசம்பர் 19ஆம் தேதியன்று நகல் திட்டம் 'இன்டர் நேஷனல் கரஸ்பான்டன்ஸ்' என்ற பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டது. பம்பாயைச் சேர்ந்த கட்சித் தலைவர்களுக்கு அகில இந்திய கட்சி விஷயத்தில் ஏற்பட்ட பிளவு, கருத்து வேறுபாடுகள் ஆகியவை காரணமாக

இந்தச்சமயத்தில் கம்யூனிஸ்ட் அகிலம் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிக்கு கொடுத்திருந்த இணைப்பை ரத்து செய்துவிட்டது.

கல்கத்தாவை சேர்ந்த தோழர்கள் (ஹலீம் உள்பட) கல்கத்தா கமிட்டி ஆஃப் தி கம்யூனிஸ்ட் பார்ட்டி ஆப் இந்தியா (இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் கல்கத்தா குழு) என்னும் பெயரில் செயல்பட ஆரம்பித்தனர். சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் ஒருவிரிந்த கூட்டத்திலோ கம்யூனிஸ்ட் அகிலத்தின் மத்தியக்கமிட்டி கூட்டத்திலோ, கல்கத்தா கமிட்டியை குறித்து ஸ்டாலின் குறிப்பிட்டார். எந்தக்கூட்டத்தில் என்பது எனக்குத் தெளிவாக நினைவில்லை. கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஓர் அகில இந்திய வடிவம் தரவேண்டுமென கல்கத்தா கமிட்டி எழுப்பிய வேண்டுகோளுக்கு பம்பாயிலிருந்து யாதொரு பிரதிபலிப்பும் உண்டாகவில்லை. அப்போது அவர்கள் பல வழிகளின் மூலம் கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு அறிக்கைகள் அனுப்பினர். 1932-ஆம் ஆண்டின் கடைசியில் பிலிப்ஸ்பிராட்டுக்கும், பென்பிராட்டிலிக்கும் எனக்கும் கம்யூனிஸ்ட் அகிலத்திற்கு அறிக்கைகள் அனுப்புவதற்கான வாய்ப்புக் கிடைத்தது. இந்த அறிக்கைகள் பயனளிப்பவையாக இருந்தன.

அடக்குமுறை கொடுமைகளுக்கிடையிலும் மீண்டும் கட்சியை புனரமைத்தல்

1932 மே மாதம் சீனா, பிரிட்டன், ஜெர்மனி ஆகிய நாடுகளைச் சேர்ந்த கம்யூனிஸ்ட் கட்சிகளின் மத்திய கமிட்டிகள் இந்திய கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஒரு பகிரங்கக்கடிதம் அனுப்பின. அந்தக் கடிதத்தில் அக்கட்சிகள் இந்தியக்

கம்யூனிஸ்ட் கட்சியின் நடவடிக்கை முறைகளை கடுமையாக விமர்சித்திருந்தன. நடவடிக்கைக்கான நகல் திட்டத்தின் அடிப்படையில் அகில இந்தியக்கட்சியை உருவாக்க நிர்பந்திக்கவும் செய்தன. ஓராண்டுக்கு மேலான பின்னர், 1933 ஜூலை 16ஆம் தேதியன்று மீண்டும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் கடிதம் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிக்கு வந்தது. இந்தக் கடிதத்தில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் விமர்சனம் கிட்டத்தட்ட கடமையாகவும் உறுதியாகவும் இருந்தது.

… தொடரும்

# மறுபடியும் கம்யூனிஸ்ட் அகிலத்தின் உறுப்பினராக...

- முசாபர் அகமது

-டிசம்பர் 12, 2019







...

கட்சிக்குப் புதியதொரு அரசியல் திட்டமும், அமைப்புச்சட்டமும் நிறைவேற்றப்பட்டன. புதிய மத்தியக் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது. டாக்டர் அதிகாரி பொதுச்செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்திய

தேசிய காங்கிரசுக்குள் நாட்டின் முழு சுதந்திரத்திற்கான தீர்மானத்தை நிறைவேற்றுவதற்காக மீண்டும் மீண்டும் போராடியது கம்யூனிஸ்ட் கட்சி. ஆயினும் எல்லா சமயங்களிலும் அந்தத் தீர்மானம் நிராகரிக்கப்பட்டது.

சோவியத், சீனக் கம்யூனிஸ்ட் கட்சிகளின் நடவடிக்கைகளிலிருந்து பல உதாரணங்களைத் தந்து இந்தியாவில் ஓர் அகில இந்தியக்கட்சியை உருவாக்குவதற்கான தேவையை இந்தியக் கம்யூனிஸ்ட்டுகளுக்குப் பல வழிகளிலும் விளக்கிட சீன கம்யூனிஸ்ட் கட்சி முயன்றது. தொடர்ந்து அது இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் கல்கத்தா கமிட்டியினுடைய நடவடிக்கைகளை வாழ்த்தவும் செய்தது. மேலும் பின்வருமாறு குறிப்பிடவும் செய்தது. “எனவேதான், ஓர் அகில இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி உருவாக்கப்படவேண்டுமென்ற அறைகூவலை விடாப்பிடியாக ஏற்றுக்கொண்டும் கட்சிவேலைகளை அகில இந்திய மட்டத்தில் விரிவுபடுத்த வேண்டிய தேவையைப் புரிந்து கொண்டும் - இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியில் ஏற்படுகின்ற தேவையில்லாத கோஷ்டிப் பூசல்களை ஒழிக்க வேண்டும் என்று கோரிக்கை விடுத்துக்கொண்டும் வலுவான, ஒருமைப்படுத்தப்பட்ட ஒருகம்யூனிஸ்ட் கட்சியைக் கட்டியெழுப்பி புதியதொரு அத்தியாயத்தை உருவாக்க வேண்டுமென வேண்டுகோள் விடுத்துக் கொண்டும் அரங்கில் வந்துள்ள ‘கல்கத்தா கமிட்டி ஆப் தி கம்யூனிஸ்ட் பார்ட்டி ஆப் இந்தியா’வை (இந்தியக்கம்யூனிஸ்ட் கட்சியின் கல்கத்தா குழுவை) நாங்கள் வாழ்த்துறோம்”

தண்டனைகள் தளர்த்தப்பட்டன

மீரத் சதிவழக்கில் எங்களுக்கு எதிராகச் சொல்லப்பட்ட மோசமான தண்டனைக்கு எதிராக அலகாபாத் உயர்நீதிமன்றத்தில் அப்பீல் செய்தோம். 1933ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 3ஆம் தேதியன்று இந்தஅப்பீலின் மீது தீர்ப்பளிக்கப்பட்டது. எங்கள் மீதான தண்டனைகள் தளர்த்தப்பட்டன. டாங்கே, உஸ்மானி ஆகியோர் மீதும் என் மீதும் உள்ள தண்டனை 3 ஆண்டுகள் கடுஞ்சிறையாகத் தளர்த்தப்பட்டது. பிலிப்ஸ்பிராட்டின் மீதான தண்டனை 2 ஆண்டுகள் கடுஞ்சிறையாகவும் காட்டே, பென்பிராட்லி, மிராஜ்கர், ஜோக்லேகர், நிம்ப்கர், சோகன்சிங் ஜோஷ், அப்துல் மஜீத், தரணி கோஸ்வாமி ஆகியோரின் மீதான தண்டனை 1 ஆண்டு கடுஞ்சிறையாகவும் கோபால் சக்ரவர்த்தி மீதான தண்டனை 7 மாதங்கள் கடுஞ்சிறையாகவும் தளர்த்தப்பட்டது. தேசாய் ஹட்சின்ஸன். ராதாராமன் மித்ரா முதலிய 9பேர் விடுதலை செய்யப்பட்டனர். டாக்டர் அதிகாரி, பி.சி.ஜோஷி, அயோத்யாபிரசாத், ஷம்ஸுல் ஹுதா, கோபால்பாஸ்க் ஆகியோர் அதுவரை அனுபவித்த சிறைத்தண்டனையே (1933 ஆகஸ்ட் 30 வரை) அவர்களுக்குத் தண்டனையாக வழங்கப்பட்டது. அதாவது அதே நாளில் அவர்கள் விடுதலை செய்யப்பட்டனர். ஓராண்டு சிறைத்தண்டனை விதிக்கப்பட்டவர்களும் நவம்பர் மாதம் விடுதலை செய்யப்பட்டனர். இவ்வாறு விடுதலை செய்யப்பட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்கள் கல்கத்தா கமிட்டியின் உதவியுடன் மீண்டும் கட்சியை உருவாக்க முயன்றனர். பம்பாய் தோழர்கள் சிலர் இந்த முயற்சிக்கு வந்தனர். சிலர் வரவில்லை. இந்த முயற்சியின் பயனாக 1933 டிசம்பர் மாதத்தில் கட்சியின் ஒரு இரகசிய மாநாடு கல்கத்தாவில் நடந்தது. அந்த மாநாட்டில் கட்சிக்குப் புதியதொரு அரசியல் திட்டமும், அமைப்புச்சட்டமும்

நிறைவேற்றப்பட்டன. புதிய மத்தியக் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது. டாக்டர் அதிகாரி பொதுச்செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தச் செய்திகள் அடங்கிய அறிக்கையுடன் பென்பிராட்லி ஐரோப்பாவிற்குச் சென்றார். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி மறுபடியும் கம்யூனிஸ்ட் அகிலத்தின் உறுப்பினரானது. நடைமுறையில் சட்ட விரோதமாக இருந்தாலும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியை இந்திய அரசாங்கம் அதிகாரப் பூர்வமாக தடைசெய்துவிட்டதாக ஒருபோதும் அறிவித்திருக்கவில்லை. மீரத் சதிவழக்கில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை சட்ட விரோதமானதாக அறிவித்துள்ள ஓர் உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பை பெற பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தினால் முடிந்தது. அதனால் 1934 -ல் கம்யூனிஸ்ட் கட்சியை சட்ட விரோதமானதென அறிவிக்கும் இந்திய அரசாங்கத்தின் அதிகாரப்பூர்வமான அறிவிப்பு வந்தது.

கடைசியாக ஒன்று...

ஒன்றை மட்டும் சொல்லிவிட்டு நான் எனது கட்டுரையை முடித்து கொள்கிறேன். ரஜினி பாமிதத்தும், பென்பிராட்லியும் சேர்ந்து ‘ஏகாதிபத்திய எதிர்ப்பு ஜனநாயக முன்னணி’ அறிக்கையை எழுதி உருவாக்குவதற்கு முன்னர், கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்கள் இந்திய தேசிய காங்கிரசில் உறுப்பினர்களாக இருந்ததில்லை என்று நமது தோழர்களில் பலர் கருதுகின்றனர். இந்தக் கருத்து தவறானதாகும். ஆரம்பத்தில் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்க முயன்றவர்கள் காங்கிரஸ் கட்சியிலும் இருந்திருக்கிறார்கள். 1926-க்கு முன்பு நான் மட்டுமே காங்சிரசில் உறுப்பினராக இல்லாமலிருந்தேன். கம்யூனிஸ்ட் கட்சியின்

மத்தியக்கமிட்டியில் (1925-ல் உருவாக்கப்பட்டது) இருந்த 3 உறுப்பினர்கள் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியிலும் உறுப்பினராயிருந்தனர் . மீரத் சதிவழக்கின் பிரதிவாதிகளில் எழுவர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியிலிருந்தவர்களே. இந்த எழுவரில் ஐவர் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினரானார்கள். இந்திய தேசிய காங்கிரசுக்குள் நாட்டின் முழு சுதந்திரத்திற்கான தீர்மானத்தை நிறைவேற்றுவதற்காக மீண்டும் மீண்டும் போராடியது கம்யூனிஸ்ட் கட்சி. ஆயினும் எல்லா சமயங்களிலும் அந்தத் தீர்மானம் நிராகரிக்கப்பட்டது. தவறான கருத்தின் அடிப்படையில் வரலாற்று ரீதியான பிசகு ஏற்பட்டுவிடக் கூடாது என்பதை கருதித்தான் இந்த உண்மைகளை நான் இங்கு சுட்டிக்காட்டியிருக்கிறேன்.

# தொடரும் தோழமை!

- நெ.இல.சீதரன்

-டிசம்பர் 13, 2019

…

வேலைநிறுத்தம் தீவிரமடைந்த நிலையில் ஆதரவாக களத்தில் கம்யூனிஸ்ட் கட்சி இறங்கியது. அத்தோழர்களை காவல்துறை கடுமையாக தாக்கியது. தடியடியை தாங்கிக் கொண்ட தோழர்கள் எம்.ஆர்.வெங்கட்ராமன் மற்றும் முருகேசன் கைது செய்யப்பட்டு சிறையேகினார்கள்.

31-01-1920 அன்று சென்னையில் என்ஜிஓ யூனியன் உருவாக்கப்பட்டது. சென்னை உயர்நீதிமன்றத்தில் பணியாற்றிய ஹமீது ஹசன் முதல் தலைவராகவும் எம்.எஸ்.சுந்தரேசன், எம்.பி.சிரோன்மணி ஆகியோர் பொறுப்பாளர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டனர். மூன்று ஆண்டுகாலத்திற்குள் இச்சங்கம் அரசு ஊழியர்கள் மத்தியில் வேரூன்றி வளர்ந்தது. 1924ஆம் ஆண்டு அரசும் இச்சங்கத்திற்கு அங்கீகாரம் அளித்தது. தேசம் முழுவதும் விடுதலைப் போராட்டம் வீறுகொண்டு எழுந்த போது அந்த உணர்வின் தாக்கம் அரசு ஊழியர்கள் மத்தியில் எழவில்லை. அக்காலத்தில் அந்நிய ஆட்சிக்கு விசுவாசம் காட்டும் வகையிலேயே தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.
இக்காலக்கட்டத்தில்தான் 1929ஆம் வருட இறுதியில் சென்னையில் நடந்த காங்கிரஸ் மகாசபையில் பூரண சுதந்திரம்தான் காங்கிரசின் லட்சியம் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இக்காலத்தில்தான் உலக முதலாளித்துவத்திற்கு மிகப்பெரிய பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது. இதுபெரும் முதலாளித்துவ நாடுகளையும் வளரும் நாடுகளையும்கூட விட்டு வைக்கவில்லை. உற்பத்திப் பண்டங்கள் தேங்கியதால் பெரிய கம்பெனிகள் திவாலாகின. பலர் வேலைநீக்கம் செய்யப்பட்டனர். வேலையில்லாத் திண்டாட்டம் மிகக் கடுமையாகியது.

இப்பொருளாதார நெருக்கடியை ஏகாதிபத்திய நாடுகள் இந்தியா உள்ளிட்ட காலனி நாடுகளின் மீது சுமத்தின. அதன் உடனடி வெளிப்பாடாக எண்ணற்ற அரசு ஊழியர்கள் பணிநீக்கம் செய்யப்பட்டனர். மேலும் சிக்கன நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

1931ல் “செலவு குறைப்பு குழு” அமைக்கப்பட்டது. அக்கமிட்டி சம்பளக் குறைப்பினை அமல்படுத்தியது. தொடர்ந்து 1939ல் தொடங்கிய இரண்டாவது உலகப்போர் 1945ல் ஆறு வருடங்கள் நடைபெற்றன. ஆரம்பத்தில் முதல் சோசலிச நாடான சோவியத் யூனியனை அழிக்க ஜெர்மனிய பாசிச அரசை வளர்த்துவிட்ட முதலாளித்துவ நாடுகளே அப்பாசிசத்தால் அழிவை சந்திக்க நேர்ந்தது. ஆனால் சோவியத் யூனியன் செஞ்சேனை மிகப்பெரிய தனது தியாகத்தின் மூலம் ஹிட்லரை தோற்கடித்து பாசிசத்திலிருந்து உலகை காப்பாற்றியது.

இந்த யுத்த காலத்தில் அத்தியாவசிய பண்டங்களின் பற்றாக்குறை, விலைவாசிகளின் கடுமையான உயர்வு ஆகியவை காரணமாக அனைத்து மக்களோடு அரசு ஊழியர்களும் கடுமையாக பாதிக்கப்பட்டனர். பின்னர் மத்திய அரசு ஊழியர்களின் கடுமையான போராட்டம் காரணமாக முதல் ஊதியக்குழு அமைக்கப்பட்டு சம்பளம் உயர்த்தப்பட்டது. இதனால் மத்திய அரசு ஊழியர்களுக்கும் மாநில அரசு ஊழியர்களுக்கும் சம்பளத்தில் பாகுபாடு ஏற்பட்டது. இதனை எதிர்த்து அன்றைய என்ஜிஓ யூனியன் தலைவர் ஜெகதீசன் தலைமையில் பல கட்ட போராட்டம் நடைபெற்றது. தொடர்ந்து 15.12.47 முதல் 21.12.47 வரை கடுமையான அடக்குமுறையை தாங்கிக் கொண்டு வேலைநிறுத்தம் நடைபெற்றது. இதற்கிடையில் தொழிற்சங்க தலைவர்கள் சக்கரைச் செட்டியார், கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் எம்.ஆர்.வெங்கட்ராமன் ஆகியோர் நிதியமைச்சர் கோபால்ரெட்டியை சந்தித்து, அரசு ஊழியர்கள் வேலைநிறுத்தத்திற்கு ஆதரவாகப் பேசினர். ஆனாலும் அதனை ஏற்க மறுத்தார் நிதி அமைச்சர்.

ஏஐடியுசியின் 19.12.47 அன்றையக் கூட்டத்தில் இந்த வேலைநிறுத்தத்திற்கு ஆதரவு தெரிவித்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. வேலைநிறுத்தம் தீவிரமடைந்த நிலையில் ஆதரவாக களத்தில் கம்யூனிஸ்ட் கட்சி இறங்கியது. அத்தோழர்களை காவல்துறை கடுமையாக தாக்கியது. தடியடியை தாங்கிக் கொண்ட தோழர்கள் எம்.ஆர்.வெங்கட்ராமன் மற்றும் கே.முருகேசன் கைது செய்யப்பட்டு சிறையேகினார்கள். அன்று தொடங்கிய இந்த இணைப்பு ஆதரவு 1920ல் துவங்கிய இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் நூற்றாண்டு கொண்டாடும் இந்நாளிலும் தொடர்கிறது.

# ரயில்வே தொழிலாளர் போராட்டமும் சிங்காரவேலருக்குத் தண்டனையும்

- என்.ராமகிருஷ்ணன்

-டிசம்பர் 14, 2019

…

ஆங்கிலேய அரசாங்கம் இந்தப் போராட்டம் பலமாகி வருவதை கண்டு ஆத்திரம் கொண்டு வேலைநிறுத்தக்குழுவின் முக்கிய உறுப்பினர்களை

கைது செய்ய திட்டமிட்டது. அதன்படி ஜூலை 27ஆம் தேதியன்று நிர்வாகக்குழு உறுப்பினர்கள் அனைவரையும் காவல்துறை கைது செய்தது. அதே நேரத்தில் கடும் ஒடுக்குமுறையையும் தொழிலாளிகள் மீது ஏவியது.

1918ஆம் ஆண்டில் முதல் உலக யுத்தம் முடிந்ததும் இந்தியாவின் ஆங்கிலேய அரசாங்கம் ரயில்வே பணிகளை சீரமைத்து ஆட்குறைப்பு செய்ய திட்டமிட்டது. இது தென்னிந்திய ரயில்வேக்கு மட்டுமல்லாது பி.என். ரயில்வே என்று அழைக்கப்பட்ட வங்காள - நாக்பூர் ரயில்வேயிலும் தொடங்கப்பட்டது. அங்கே 1927ஆம் ஆண்டில் ஆட்குறைப்பு செய்யப்பட்டது. இதை எதிர்த்துப் போராட கரக்பூரில் தொழிற்சங்க தலைவர்கள் கூட்டம் ஒன்று நடைபெற்றது. இதில் சென்னையிலிருந்து சிங்காரவேலரும் வி.ஆர்.காளப்பாவும் கலந்து கொண்டனர். வங்க மாகாண தொழிற்சங்க செயலாளர் முகுந்தலால் சர்க்கார் மற்றும் பலர் கலந்து கொண்டனர். இக்கூட்டத்தில் முடிவெடுத்தபடி வேலைநிறுத்தத்திற்கு ஆதரவாக சிங்காரவேலரும் காளப்பாவும் வில்லுவா, கரக்பூர் போன்ற இடங்களில் பிரச்சாரம் செய்தனர். இதற்குப்பின் தென்னிந்திய ரயில்வேயில் பிரச்சனை வெடித்தது. ஆங்கிலேய ரயில்வே நிர்வாகமானது நாகப்பட்டினம், போத்தனூர் மற்றும் திருச்சி ஆகிய ஊர்களில் ரயில்வே பணிமனைகளை மூடிவிட்டு பொன்மலையில் ரயில்வே பட்டறையையும், பணிமனையையும் உருவாக்க திட்டமிட்டது. இதன் காரணமாக இந்த இடங்களில் உள்ள ரயில்வே ஊழியர்களை தான்தோன்றித்தனமாக பொன்மலைக்கு இடமாற்றம் செய்ய ஆரம்பித்தது. சிக்கன சீரமைப்புத் திட்டம்,

ஆட்குறைப்பு நடவடிக்கை போன்றவை தென்னிந்திய ரயில்வேயில் புகுத்தப்பட ஆரம்பித்தன.

1928 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் 3200 தொழிலாளர்கள் வேலைநீக்கம் செய்யப்படுவார்கள் என்றும் மீதமுள்ள தொழிலாளர்களுக்கு தொழில் திறமை தேர்வு வைக்கப்படும் என்றும் இந்த அறிவிப்பு கூறியது. ஆனால் தொழிலாளிகள் இதைக் கடுமையாக எதிர்த்தனர், மிரட்டலுக்கு பணிய மறுத்தனர். பல்வேறு கிளைகளும் டிவிஷன் சங்கங்களும் ஒன்றாக இணைக்கப்பட்டு டி.கிருஷ்ணசாமி பிள்ளையை தலைவராகக் கொண்டு ஒரு மத்திய வேலைநிறுத்தக்குழு அமைக்கப்பட்டது. இக்குழுவில் சிங்காரவேலரும், முகுந்தலால் சர்க்காரும் இடம்பெற்றனர். அவர்கள் இருவரும், பல்வேறு இடங்களுக்குச் சென்று ரயில்வே தொழிலாளிகளுக்கு உற்சாகமூட்டினார்கள். ஜூன் மாத இறுதியில் நாகப்பட்டினம், போத்தனூர் மற்றும் பொன்மலை தொழிலாளிகள் தொழில் திறமைத் தேர்வுக்கு சம்மதிக்க மறுத்தனர். இதனைத் தொடர்ந்து நிர்வாகம் பணிமனைகளை மூடி கதவடைப்புச் செய்தது.

இதைக் கண்ட போராட்டக்குழு ஜூன் 30ஆம் தேதியன்று நிர்வாகத்திற்கு இறுதி எச்சரிக்கை விடுத்தது. ஆட்குறைப்பு உத்தரவை திரும்பப்பெற்று தொழில் திறமை தேர்வை உடனே ரத்து செய்யாவிடில் ஜூலை 14ஆம் தேதி முதல் பொது வேலைநிறுத்தம் தொடங்கப்படும் என்று அறிவித்தது. ஆனால் நிர்வாகம் பிடிவாதமாக இருந்தது. எனவே ஜூலை 10ஆம் தேதி நள்ளிரவில் வேலைநிறுத்தம் துவங்கியது. அந்த ரயில்வே நிர்வாகத்தில் இன்ஜின் டிரைவர்கள், பயர்மேன்கள், கார்டு, டிக்கெட் கொடுப்பவர்,

பரிசோதிப்பவர், ரயில் நிலைய அதிகாரிகள் அனைவரும் ஆங்கிலேயராக இருப்பார்கள் அல்லது ஆங்கிலேய - இந்தியர்களாக இருப்பார்கள். கலாசி தொழிலாளிகள், சுத்தம் செய்வோர், சுமை தூக்குவோர், பணிமனை சாதாரண தொழிலாளர்கள் ஆகியோர் மட்டுமே இந்தியர்கள்.
வேலைநிறுத்தம் பலத்த மோதல்களை சந்தித்தது. பல இடங்களில் சிக்னல் விளக்குகள், மின்சார கம்பிகள், தந்தி கம்பிகள் நாசம் செய்யப்பட்டன. தாம்பரத்தில் ரயில் ஊழியர்கள் மறியல் செய்தனர். அவர்கள் 28 பேர் கைது செய்யப்பட்டனர். 20ஆம் தேதி காலையில் சென்னைக்கு வந்த ரயில்கள் ஆங்காங்கு ரயில்வே ஊழியர்களால் தடுத்து நிறுத்தப்பட்டது. சில இடங்களில் டிரைவர்களும், பயர்மேன்களும் வண்டியிலிருந்து இழுத்து வெளியே தள்ளப்பட்டனர். தூத்துக்குடியில் பெரும் போராட்டம் நடைபெற்றது. ரயில் ஊழியர்களும், உள்ளூர் மக்களுமாக ஆயிரம் பேர் அதில் பங்கேற்றனர். தூத்துக்குடி, விழுப்புரம் போன்ற இடங்களில் துப்பாக்கிச்சூடு நடத்தப்பட்டது. பல நூற்றுக்கணக்கான தொழிலாளிகள் கைது செய்யப்பட்டனர். காட்டுக்குப்பம், அம்பாத்துரை, பூதலூர், விக்கிரவாண்டி போன்ற இடங்களில் ரயில்கள் தடம் புரளும்படி செய்யப்பட்டன. மணியாச்சி, மாயவரம், விழுப்புரம், மதுரை, விக்கிரவாண்டி, பன்ருட்டி, நெல்லிக்குப்பம், பூதலூர் போன்ற இடங்களில் ரயில்வே தொழிலாளிகளுக்கும், காவல்துறைக்கும் இடையே பல மோதல்கள் நடைபெற்றது. ஆங்கிலேய அரசாங்கம் போராடுகின்ற தொழிலாளிகள் மீது பெரும் அடக்குமுறையை கட்டவிழ்த்துவிட்டது. தமிழகம் முழுவதும் ஆங்கிலேய ரயில் நிர்வாகத்தைக் கண்டித்து கூட்டங்கள் நடைபெற்றன. ஈரோடு நகரில் மட்டும் மூன்று கண்டனக்

கூட்டங்கள் நடந்தன. இவற்றில் இரு கூட்டங்களில் பெரியார் கலந்துகொண்டு ரயில்வே தொழிலாளிக்கு ஆதரவு கொடுத்தார்.

ஆங்கிலேய அரசாங்கம் இந்தப் போராட்டம் பலமாகி வருவதை கண்டு ஆத்திரம் கொண்டு வேலைநிறுத்தக்குழுவின் முக்கிய உறுப்பினர்களை கைது செய்ய திட்டமிட்டது. அதன்படி ஜூலை 27ஆம் தேதியன்று நிர்வாகக்குழு உறுப்பினர்கள் அனைவரையும் காவல்துறை கைது செய்தது. அதே நேரத்தில் கடும் ஒடுக்குமுறையையும் தொழிலாளிகள் மீது ஏவியது. வழிகாட்டும் தலைவர்கள் அனைவரும் சிறையில் அடைக்கப்பட்ட பின் தற்காலிக குழு என்ற பெயரில் தோன்றிய ஒரு குழு வேலைநிறுத்தத்தை வாபஸ் பெற்றது. இந்த வேலைநிறுத்தத்தை வெற்றிகரமாக்குவதற்காக பலமாத காலம் தொடர்ந்து பல ரயில் நிலையங்களுக்குச் சென்று அந்த தொழிலாளிகளுக்கு ஊக்கமூட்டி வந்த சிங்காரவேலரும், முகுந்தலால் சர்க்காரும் ஜூலை 23ஆம் தேதி தஞ்சையிலிருந்து திருச்சிக்கு செல்லும் வழியில் கைது செய்யப்பட்டனர். இதைத்தொடர்ந்து தொழிற்சங்க அலுவலகம் காவல்துறையினரால் சோதனையிடப்பட்டு பின்னர் கைப்பற்றப்பட்டது. ‘தொழிலாளர்’ பத்திரிகை அலுவலகமும் சோதனையிடப்பட்டு நூற்றுக்கணக்கான தோழர்கள் கைது செய்யப்பட்டனர். இந்த தலைவர்களை விடுதலை செய்யக்கோரி சென்னையில் அனைத்து தொழிற்சங்கங்களும் சேர்ந்து பல்லாயிரக்கணக்கான தொழிலாளர் பங்கேற்ற மிகப் பெரும் ஊர்வலத்தை நடத்தினர். இதேபோன்று திருச்சி நகரிலும் பெரும் கண்டன ஊர்வலம் நடந்தது.

# சிங்காரவேலருக்கு 10 ஆண்டு கடுங்காவல்

- என்.ராமகிருஷ்ணன்

-டிசம்பர் 15, 2019




…

திருச்சி சிறைக்கு அழைத்து வரப்பட்ட சிங்காரவேலரை ஆங்கிலேய சிறை கண்காணிப்பாளர் சிறைக்குள் அழைத்து செல்லும் காட்சி

நேற்றைய தொடர்ச்சி

சிங்காரவேலர், முகுந்தலால் சர்க்கார் மற்றும் 16 பேர் மீது அரசாங்கத்திற்கெதிராக சதி செய்தது உள்ளிட்டு பல குற்றச்சாட்டுகளைக் கொண்ட குற்றப் பத்திரிகையை ஆங்கிலேய அரசாங்கம் நீதிமன்றத்தில் தாக்கல் செய்தது. இதுதான் அன்றைய சென்னை ராஜதானியின் முதல் சதி வழக்காகும். சாட்சியங்களை சேகரிக்க சிறப்பு அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். அவர்கள் 400 பேரிடமிருந்து சாட்சியங்கள் சேகரித்தனர். அதில் 157 சாட்சியங்களை திருச்சி நீதிமன்றம் விசாரித்தது. அரசாங்கம் தன் சார்பில் 300 ஆவணங்களை நீதிமன்றத்திற்கு சமர்ப்பித்தது.

என்ன குற்றச்சாட்டு?

குற்றம் சாட்டப்பட்ட 18 பேரும் ரயில்களை நிறுத்தி அதில் பயணம் செய்யக்கூடியவர்களின் பாதுகாப்புக்கு ஆபத்து விளைவிக்க சதி செய்தார்கள் என்று கூறப்பட்டது. குற்றம் சாட்டப்பட்டவர்களுக்காக கோவை என்.எஸ்.ராமசாமி அய்யங்கார், எம்.கே.விஜயராகவன், ஏ.எஸ்.எம்.சுந்தரம் போன்ற வழக்கறிஞர்கள் வாதாடினர். சிங்காரவேலருக்காக நியூஜெண்ட் கிராண்ட், கே.எஸ்.கிருஷ்ண சாமி அய்யங்கார், பிரபல காங்கிரஸ் தலைவர் எஸ்.சத்தியமூர்த்தி ஆகியோர் வாதாடினர்.

முறை இருந்தது. அவர்கள் சமூகத்தில் பிரபலமானவர்கள் என்று கூறப்பட்டு ஜூரிகள் ஆக்கப்பட்டிருந்தார்கள். இந்த வழக்கில் ஜூரிகளாக இருந்தவர்கள் குற்றம் சாட்டப்பட்ட 18 பேரில் 4 பேர் தான் குற்றவாளிகள் என்றும் இதரர்கள் குற்றவாளிகள் இல்லையென்றும் கூறினார்கள்.

பொதுவாக ஜூரிகளின் கருத்தை நீதிபதி ஏற்க வேண்டும். ஆனால் இந்த வழக்கை விசாரித்த நீதிபதி லட்சுமணராவ் என்பவர் அந்த முடிவை ஏற்கவில்லை. குற்றம்சாட்டப்பட்ட 18 பேரில் 15 பேர் குற்றவாளிகள் என்றும், இதரர்கள் குற்றமற்றவர்கள் என்று கூறி சிங்காரவேலர், கிருஷ்ணசாமி பிள்ளை, முகுந்தலால் சர்க்கார் உள்ளிட்டு 14 பேருக்கு 10 ஆண்டு கடுங்காவல் தண்டனை விதித்தார். பெருமாள் என்ற தொழிலாளிக்கு ஆயுள் தண்டனை விதித்து அந்தமானுக்கு அனுப்பினார். இந்த தண்டனையை எதிர்த்து சென்னை உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யப்பட்டது. வழக்கை விசாரித்த அந்த நீதிமன்றம் சதி என்பது பெரிய குற்றங்களை புரிவதற்கான முயற்சி என்று சாட்சியங்கள் திட்டவட்டமாக நிரூபிக்கவில்லை என்று கூறி பலருக்கு தண்டனையை குறைத்தது. சிங்காரவேலர் உள்ளிட்டு 14 பேருக்கு 10 ஆண்டு கடுங்காவல் தண்டனை என்பதை 2 ஆண்டு கடுங்காவல் தண்டனையாக குறைத்தது. ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட பெருமாளுக்கு மட்டும் அந்த தண்டனை உறுதி செய்யப்பட்டது. அவர் 1937ஆம் ஆண்டில் ராஜாஜி தலைமையில் சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் அமைச்சரவை அமைந்தபோதுதான் விடுதலை செய்யப்பட்டார்.

இவ்வாறு முதல் திருச்சி சதி வழக்கு என்று அறியப்பட்ட ரயில்வே போராட்ட வழக்கு முடிவடைந்தது. சிங்காரவேலர் உள்ளிட்ட தண்டனை பெற்றவர்கள் திருச்சி மத்திய சிறையில் அடைக்கப்பட்டனர். ஒரு முக்கியமான சம்பவத்தை இங்கே குறிப்பிடுவது அவசியம். இந்த போராட்டம் துவங்கப்பட்டபோது, பெரியார் ஈவேரா அதை

ஆதரிக்கவில்லை. அப்போது ஆட்சியிலிருந்த நீதிக்கட்சிக்கு தொல்லை தருவதற்காகவே காங்கிரஸ்காரர்களும் பிராமணர்களும் இந்த வேலை நிறுத்தத்தை தூண்டிவிடுவதாக அவர் கருதினார். நிர்வாகத்தோடு இணங்கி போகும்படிதான் தொழிலாளியிடம் அவர் கூறினார். ஆனால் தொழிலாளிகள் அதை ஏற்கவில்லை. அவர்களில் அதிகம் பேர் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தை சேர்ந்தவர்கள். பெரியாரிடம் அதிக மரியாதை கொண்டவர்கள். எனவே பெரியார் பின்னர் இந்த வேலைநிறுத்தத்தை ஆதரித்தார். அரசாங்க தடைச் சட்டத்தை மீறி ரயில்வே தொழிலாளிகளுக்கு ஆதரவாக பேசியதாக அவரையும், கண்ணப்பர், ஈஸ்வரன், மாரியப்பன் மற்றும் சுப்பு போன்றோரையும் கைது செய்து வழக்கு தொடுத்தது. எனவே பெரியார் உள்ளிட்டு அவர்கள் அனைவரும் பல வாரக் காலம் சிறையில் வைக்கப்பட்டு பின்னர் ஜாமீனில் வெளிவந்தனர். எதிர் வழக்காடப் போவதில்லை என்றும் விசாரணையில் கலந்து கொள்ள போவதில்லை என்றும் அவர் அறிவித்துவிட்டார்.

எனவே தீர்ப்பு வழங்கும் நாளன்று தான் சிறைக்கு செல்ல வேண்டியிருக்கும் என்று கருதிய ஈவேரா பெட்டிப்படுக்கையுடன் நீதிமன்றத்திற்கு வந்தார். ஆனால் அவர்மீதும் அவரது ஆதரவாளர்கள் மீதும் சுமத்தப்பட்ட வழக்கை அரசாங்கம் திரும்பப் பெற்றுக்கொண்டதென்றும் அவர்கள் திரும்பிப் போகலாம் என்றும் நீதிபதி கூறினார். இந்த தீர்ப்பு பெரியாருக்கு ஏமாற்றமாக இருந்தது என்றும் அவர் மன வருத்தத்துடன் வீடு திரும்பினார் என்றும் அவர் வாழ்க்கை வரலாறை எழுதியுள்ள சாமி.சிதம்பரனார் குறிப்பிட்டுள்ளார்.

இரண்டு ஆண்டு கடுங்காவல் தண்டனையை திருச்சி சிறையில் அனுபவித்துவிட்டு சிங்காரவேலரும், இதரர்களும் 1930ஆம் ஆண்டில் வெளிவந்தனர். அப்போது சிங்காரவேலருக்கு 70 வயது முடிந்து 71 ஆவது வயது துவங்கியிருந்தது. அவர் உடல் நிலை மிகவும் பாதிக்கப்பட்டிருந்தது. பக்கவாதப் பாதிப்பு இருந்தது. அதனால் களப்பணி ஆற்றும் அளவிற்கு அவர் உடல்நிலை இல்லை. ஆனால் அவரிடம் தெளிவான சிந்தனை குடி கொண்டிருந்தது. எனவே மார்க்சிய கருத்துக்களை விளக்கியும், விஞ்ஞான முன்னேற்றம், மூட நம்பிக்கை ஒழிப்பு, பகுத்தறிவு இயக்கங்கள், பிரபஞ்ச அமைப்பு மற்றும் கடவுள் மறுப்பு போன்றவை குறித்து ஏராளமான கட்டுரைகளை எழுதினார். தன்னை சந்திக்க வரும் தோழர்களுக்கு விளக்கவுரை அளித்தார். பெரியாரின் சுயமரியாதை இயக்கத்திற்கு சிறந்த அறிவுப் பங்களிப்பு செய்தார்.

# FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ்

மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும்  எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை  பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

## எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

## இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation

## கணியம் அறக்கட்டளை




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**தற்போதைய செயல்கள்**

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

### கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

### அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்

- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும்

பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**

---




BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.